# கல்கி பொருளடக்கம்



"கல்கி"யில் வெளிவரும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



## நாட்டிய விழாவில் நான் முதற்பரிசு பெற்றேன்

### போர்ன்-விடாவுக்கு எனது நன்றி



எனது எட்டாவது வயது முதல் நான் நாட்டியம் பயின்று
வருகிறேன். நாட்டியம் கற்றுக்கொள்ளும் எல்லா சிஷ்யைகளுள்
நான்தான் கலையில் மிகவும் முன்னேற்றம் அடையக்
கூடியவள் என்பது எனது குருவின் அபிப்பிராயம். ஆனால் பின்னர்
நான் களைப்படைந்து பலஹீனமாவதை உணர்ந்தேன். என்
உடம்பு சக்தியற்றிருந்தது. என்னால் நாட்டிய அப்பியாசம்
செய்யமுடியாமல் நாளுக்குநாள் மோசமாகிக்கொண்டே வந்தேன்.
இப்படி இருக்க தினந்தோறும் படுக்கப் போகுமுன் ஒரு கப் **போர்ன்-விடா**
சாப்பிடும்படி எனது குரு சொன்னார். அது மாயா சக்தி போல
பலனளித்தது. சீக்கிரத்திலேயே முன்னைகாட்டிலும் அதிக
சக்தியையும், பலத்தையும் அடையப் பெற்றேன. தினப்படி பதினான்கு
மணி நேரம் நாட்டிய அப்பியாசம் செய்ய என்னால் இயன்றது.
எனது குரு என்னை நாட்டிய விழாவில் கலந்துகொள்ள ஏற்பாடு
செய்தார். விழாவில் நான் முதல்
பரிசைப் பெற்றேன்—



**போன்-விடாவுக்கு எனது நன்றி.**

நீங்களும் அதிக சக்தியை அடைய தினந்
தோறும் இரவில் படுக்கப் போகுமுன்
போர்ன்-விடாவை அருந்துங்கள்.

*For Strength and Vigour*

# BOURN-VITA

MADE BY *Cadbury's*





மலர் 18 இதழ் 7

தமிழ்த்திரு நாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

விளம்பி ஆவணி 29உ

# கிழக்கில் அபாயக் குறி

'புலி! புலி!' என்பது ஒரு சமயம் உண்மைப் புலியாகவே போகுமல்லவா? அந்த நிலைமை தற்போது சீனா—பர்மோஸா சச்சரவில் ஏற்படாமலிருக்க வேண்டும்.

அமெரிக்காவும் பிரிட்டனும் ஒரு புது வழக்கம் உண்டாக்கிக் கொண்டு விட்டன. ஐக்கிய உலகச் சபைக்குச் சொல்லாமலேயே தங்கள்பாட்டுக்கு ஒரு தீர்மானம் செய்து கொண்டு வேறு நாடுகளில் ராணுவப் பிரவேசம் செய்யும் ஒரு புது தருமத்தை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றன. ஐக்கிய மகாசபையும் இதற்கு ஆட்சேபிக்காமல் அக்கிரமப் பிரவேசம் நடந்த பின் வழவழா தீர்மானம் செய்வதும் ஏதோ மத்தியஸ்த நடவடிக்கைகள் செய்வதும் ஒரு நவீன சம்பிரதாயமாகிப் போய்விட்டது.

இந்தப் புது வழக்கத்தின்படி அமெரிக்கக் கடற்படை சீனாவை யடுத்துச் சென்று, ஆர்ப்பாட்டம் நடைபெற்று வருகிறது. அமெரிக்காவின் பலத்தைக் கொண்டு பர்மோஸா தாய்நாட்டுடன் சேராமல் தனித்து நின்று உலக சமாதானத்துக்கு ஒரு பெரும் அபாயமாக இருந்து வருகிறது.

மக்களின்றியே சியாங்கை ஷேக்கின் ராணுவமே ஒரு தனி அரசாகப் பர்மோஸாவில் நிலவி வருகிறது. சீனாவுக்குப் போட்டியாக அமெரிக்க அரசாங்கம் தன் ஆயுத பலத்தைக் கொண்டும் பணத்தைக் கொண்டும் அந்த ராணுவத்தை அணிவகுத்து நிறுத்தி வைத்துப் பாதுகாத்து வருகிறது. உலகச் சபையில் உண்மை சீனாவுக்கு இடம் தராமல் சியாங்கை ஷேக்குக்குப் பீடம் தந்து ஒரு அனர்த்தம் நடந்து வருகிறது. இந்த அனர்த்தம் நீங்கினாலேதான் உலக யுத்த அபாயம் தீரும்.

சீனா கடலோரத்து அண்மையில் குமாய், மாட்சு தீவுகள் இருக்கின்றன. இந்தத் தீவுகளிலும் அமெரிக்க உதவியைக் கொண்டு சியாங்கை ஷேக்கின் ராணுவம் நிறுத்தி வைத்திருப்பது சீனாவுக்குப் பெருந் தொல்லையாக இருக்கிறது. தன்னுடைய கௌரவத்துக்கு ஹானியாகக் கருதுகிறது. சீன மக்களைப் பிரித்து வைக்க அமெரிக்காவுக்கு யாதொரு உரிமையும் இல்லை என்று சீனா கருதுவதில் வியப்பில்லை. இதுவரை பொறுத்தது போதும், இந்தத் தீவுகளைக் கைப்பற்றிவிட வேண்டுமென்று துணிந்து விட்டதாகத் தோன்றுகிறது.

உலகில் நியாயம் நேர்மையுணரும் நாடுகள் எல்லாம், பர்மோஸா தீவும் குமாய் மாட்சு தீவுகளும் சீனாவுக்குச் சேரவேண்டியன என்று கூறுகின்றன. நமது பிரதமர் நேருவும் இவை சீனாவுக்குச் சேரவேண்டியவைதான் என்று தெளிவாக இந்தச் சமயத்திலும் தாமதமின்றிக் கூறியிருக்கிறார்.

நிலைமை இவ்வாறு இருப்பினும் சீனாவின் படையெடுப்பைக் கண்டு அமெரிக்க அரசாங்கம் "நாம சும்மா இருக்க முடியாது" என்கிறது. அமெரிக்கக் கடற்படை அவ்விடம் சென்றதும் ருஷிய அரசாங்கம் "நாம் சும்மா இருப்போமா? மாட்டோம். சீனாவுக்கு உதவியாகப் பெரும் போர் துவக்குவோம்" என்கிறது. ஆகவே, அபாயநிலை இப்போது முற்றி விட்டது. எந்த நேரத்திலும் உலகப் பிரளயம் ஆரம்பிக்கலாம்.

# பாரதியை வேண்டுவோம்!

பாரதி நினைவு நாளைக் கொண்டாடும் இவ்வாரத்தில் இவ்விதழ் அட்டை பாரதியார் சித்திரத்துடன் வெளியாகிறது. பாரதியார் எடுப்பட்ட கண்ணனையும், அவர் முழங்கிய ஜெயபேரிகையையும், எட்டயபுரத்திலுள்ள பாரதி மண்டபத்தையும் அட்டையில் பார்க்கலாம். பாரதியாரின் முத்து முத்தான கையெழுத்தில் 'ஜெயபேரிகை கொட்டடா' என்ற பாடலை இவ்விதழின் 57ம் பக்கத்திலே காணலாம். இதை யொட்டி நமது சிந்தனைக் குதிரையும் சற்று ஓடுகிறது.

கவிஞன் என்பவன் யார்? தான் வாழும் காலத்து மக்களின் உணர்ச்சிகளைக் கிரகித்துக் கொண்டு, அதாவது அந்த மக்களின் ஆசைகளையும் அபிலாஷைகளையும் கிரகித்துக் கொண்டு எதிர் கால நடைபை எட்டி நோக்கிச் சொல்பவனே கவிஞன் என்று ஒரு இலக்கணம் உண்டு.

இந்த இலக்கணப்படி பார்த்தால் பாரதியைவிடச் சிறந்த கவிஞர் ஒருவருமே கிடையாது என்று சொல்ல வேண்டும்!

பாரதியார் தாம் வாழ்ந்த காலத்து மக்கள், நெஞ்சில் உரமுமின்றி நேர்மைத் திறமுமின்றி வாழும் பான்மையைக் கண்டு நெஞ்சம் துடித்தார்.

சாதாரண விஷயங்களுக்கு எல்லாம் அவர்கள் பயந்து சாவதைக் கண்டு "நெஞ்சு பொறுக்குதில்லையே!" என்றார்.

ஆயினும் பாரதியார் தமிழையும் தமிழரையும் அளவுகடந்து நேசித்தார்.

தமிழின் மேன்மையையும் அதன் இலக்கியங்களின் சிறப்பையும் நன்கு உணர்ந்தார். அவற்றைப் பற்றிப் பரவசப்பட்டுப் பாடினார்; "தமிழ் மொழிபோல் இனிதாவது எங்கும் காணோம்" என்று மிக உறுதியுடன் கூறினார். பாரதியார் தமது வசன நூல்களில் தமிழர்களின் ஏற்றத்தைப் பற்றி எவ்வளவோ எழுதி யிருக்கிறார். அதே உறுதியுடன், தமிழ் மக்களின் குறைகளையும் குற்றங்களையும் இடித்துக் காட்டினார். இது அன்பின் காரணமாக அவர் பெற்ற உரிமை.

ஆனால் பாரதியார் இடித்துக் காட்டுவதோடு நின்று விடாமல் மக்களை உயர்ந்த லட்சியங்களுக்காக எழுச்சி கொள்ளவும் செய்தார் இதற்கு உதாரணங்கள் சொல்லவே வேண்டியதில்லை.

இவை எல்லாவற்றுக்கும் மேலாக அவர் தமது காலத்தைக் கடந்து எதிர்காலத்தில் வாழ்ந்து அந்த உணர்ச்சிகளை அப்படியே கவிதையாகத் தந்தார்.

## சியாங்கின் உதவி




சீனக் கடலில் நிலைமை அபாயமாகவே இருக்கிறது!

# மொரார்ஜியின் பிரச்னை




பிரிட்டனுக்கும் அமெரிக்காவுக்கும் சென்றிருக்கும் நிதிமந்திரி மொரார்ஜி தேசாய் வேண்டிய அளவு அன்னியக்கடன் உதவி பெற்றிருக்கிறார்!

---

' பாரத தேசம் சுதந்திரம் பெறுமா என்று கனவு கண்டுகொண்டிருந்த நாளில் அதை நனவாகக் கண்டு,

**ஆடுவோமே பள்ளுப் பாடுவோமே**
**ஆனந்த சுதந்திரம் அடைந்து விட்டோமென்று**

பாடினார்.

**ஆயுதம் செய்வோம்!—நல்ல**
**காகிதம் செய்வோம்**

என்று தொழில் துறை அபிவிருத்திகளைப் பற்றிப் பாடினார். இவற்றை யெல்லாம் படிக்கும்போது, பாரதியார் இன்று நம்முடன் இருந்து பாடுவது போன்ற பிரமை உண்டாகிறது! இவை கவிதா தேவியின் அருளினால் பெற்ற வரப்பிரசாதமாகும்.

இவை யெல்லாவற்றையும் விட நமது வேதாந்தக் கருத்துக்கள் இன்றும் நமக்கு ஜீவனும் உயிரும் உணர்வும் ஊட்டக்கூடியவை என்பதை நிலைநிறுத்தினார். வேதாந்தம் என்பது மனம் நொந்த உள்ளங்களின், வாழ்க்கை இழந்த உள்ளங்களின் ஆறுதல் அல்ல என்பதை வலியுறுத்தி இந்து தர்மம் இன்றும் வீரமும் உணர்ச்சியும் கொண்ட சாஸ்திரம் என்பதை அழுத்தம் திருத்தமாக எடுத்துக் கூறினார்.

**திருவைப் பணிந்துநித்தம்**
**செம்மைத் தொழில்புரிந்து**
**வருக வருவதென்றே—கிளியே**
**மகிழ்வுற் றிருப்போமடி**

என்று பாடினார். இந்தப் பாடலில் கீதையின் தத்துவத்தை எவ்வளவு அழகாகக் கூறி விட்டார். ஆனந்த வாழ்க்கைக்கு உகப்பான சர்மம் இந்து தர்மம் என்பதை எவ்வளவு தெளிவாகக் கூறி விட்டார்.

இப்படிச் சோர்வுற்றிருந்த தமிழ்நாட்டுக்கு உயிர் ஊட்டும் சஞ்சீவியாக வந்தார் மகாகவி பாரதியார். பட்ட மரங்களைத் தழைக்கச் செய்தார். கருகிய பயிர்களைச் செழிக்கச் செய்தார்.

அந்தப் பாரதியாரின் நினைவு நாளை அவருடைய மகத்தான தொண்டுகளை நினைவு படுத்திக் கொண்டாடுவோமாக.

ஆயிரம் வருடங்களுக்கு ஒரு முறை கவிஞன் பிறக்கிறான் என்று சொல்வார்கள். அதை மெய்ப்பிக்காதபடி பாரதிக்கு இணையான மற்றொரு கவிஞரைத் தமிழ்நாட்டுக்கு அருளும்படி பாரதி (சரஸ்வதிதேவி)யை வேண்டுவோமாக!

# வர்த்தக மந்திரி அளிக்கும் சலுகைகள்

அயல்நாடுகள் நமக்குத் தாராளமாகக் கடன் வசதிகள் வழங்க வழங்க, நமது பொறுப்பும் அவற்றுக்கேற்ப அதிகரித்திருக்கிறது. இதை ஒருவரும் மறுக்க முடியாது. கடன் சுமை ஏற ஏற அதைத் திருப்பிக் கொடுக்கும் கவலையும் அதிகரிக்கவே செய்கிறது. ஏற்றுமதி அதிகமாகச் செய்வதன் மூலமே இதை நாம் சமாளிக்க வேண்டுமென்பது நன்றாகத் தெரிந்ததே.

இதையெல்லாம் கவனத்தில் கொண்டு நடைமுறையில் நிலைமை எவ்வாறு இருக்கிறதென்பதைப் பார்த்தால் கவலையளிப்பதாகவே இருக்கிறது. நடப்பு ஆண்டு முதல் ஆறு மாத காலத்தில் நம் நாட்டின் ஏற்றுமதி 1957-ஆம் ஆண்டு இதே ஆறுமாத காலத்தில் நடந்ததைவிடச் சுமார் ரூபாய் 50 கோடி குறைந்திருக்கிறது என்ற தகவலை வர்த்தக மந்திரி திரு லால்பஹதூர் சாஸ்திரி சமீபத்தில் தெரிவித்தார்.

அயல் நாட்டு வியாபார விஷயத்தில் நாம் முற்றிலும் யஜமானர்களாக இருக்க முடியாது. நமது இஷ்டப்போல் நடந்து கொள்ளவும் முடியாது. இதர நாடுகளின் போட்டியைச் சமாளிக்க வேண்டும். நமது பொருள்களை வாங்கும் நாடுகளின் நிலைமையையும் அவர்கள் தேவைகளையும் கருத்தில் கொள்ள வேண்டும். அரசியல் சார்புகள் ஒருபுறமிருக்க விலைவாசிகளின் அளவும், பொருள்களின் தரமும் நமக்குச் சாதகமாக இருக்க வேண்டும். சாதகமாக இல்லையானால் சாதகமாகச் செய்து கொள்ள வேண்டிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்.

நமது மாமூலான ஏற்றுமதிகளில் ஜவுளி வகைகள் பின்தங்கி விட்டன. தேயிலைக்கும் ஆப்பிரிக்காவிலிருந்து போட்டி பலமாக இருக்கிறது என்பது எல்லோராலும் ஒப்புக் கொள்ளப்படுகிறது.

காப்பிக்கொட்டையின் உற்பத்தி பெருகியிருக்கிறது. ஆனால் தென் அமெரிக்காவிலும் உற்பத்தி அளவு கடந்து பெருகி விட்டதால் இதர நாடுகளில் காப்பிக் கொட்டையின் விலை படிப்படியாகக் குறைந்து வருகிறது. உள்நாட்டு விலையும் வெளிநாட்டு விலையும் ஏறக்குறையச் சமமாக ஆகிவிடுமோ என்றும் எண்ண வேண்டியிருக்கிறது.

இதுபோல் பல பொருள்களில் ஏற்றுமதி குறைந்து அல்லது ஏற்றுமதி வருவாயில் குறைவு ஏற்பட்டிருக்கிறது. இதை ஒரு அபாய அறிவிப்பு என்றே கருத வேண்டும். இதை ஒருவாறு உணர்ந்த வர்த்தக மந்திரி இரண்டு அம்சங்களில் நடவடிக்கை எடுக்கப்படும் என்று அறிவித்தார். ஒன்று, எந்தெந்தத் தொழில் ஏற்றுமதி செய்து வர்த்தகத்தைப் பெருக்கிக் கொள்ளுகிறதோ, அந்தந்தத் தொழிலுக்கு அவசியமான அயல் நாட்டு மூலப் பொருள்களையோ, இதர சாமான்களையோ ஓரளவுக்கு உட்பட்டு இறக்குமதி செய்ய அனுமதிக்கப்படும் என்று தெரிவித்தார். இரண்டாவது, உற்பத்திச் சாலைக்கும் துறைமுகத்துக்குமுள்ள ரயில்வே கட்டணங்களைத் தக்க முறையில் குறைத்து ஏற்றுமதிக்குச் சலுகை அளிக்கலாம் என்றும் அறிவித்தார்.

இந்த இரண்டு யோசனைகளும் வரவேற்கத் தக்கனவே. நிலைமையை உணர்ந்து பரிகாரம் செய்ய முன்வந்திருப்பதற்காகச் சர்க்காரைப் பாராட்ட வேண்டியதுதான். ஆயினும் ஒரு விஷயத்தைக் கவனிக்க வேண்டும். கொடுக்கப்படும் சலுகைகள் வேறு நாடுகளோடு போட்டியிடுவதற்கு மட்டிலும் பயன்பட வேண்டும். நமது நாட்டிலேயே வேண்டிய அளவு கிராக்கியிருக்கும் சரக்குகளை வெளி நாட்டுக்கு அனுப்பி விட்டு உள் நாட்டு விலையை ஏறச் செய்து, மக்களுக்குத் தொல்லையாக முடியும்படி செய்யலாகாது. சலுகைகள் எல்லாம் வரி கொடுக்கும் மக்கள் தான் தாங்க வேண்டும். அதனுடன் விலையும் ஏறி விட்டால் தொல்லை இரு மடங்காகும். உள் நாட்டுக் கிராக்கியின் அளவு உற்பத்திப் பெருக்கம் ஆனபின் எஞ்சியதை ஏற்றுமதி செய்வது முறையாகும். எந்தப் பண்டத்துக்கும் இந்த உண்மை பொருந்தும்.

# சட்டசபையில் கல்கி

ஜில்லாக்களைப் பிரித்து இரட்டிக்கும் திட்டம் சட்டசபை அங்கத்தினர்களின் 'தொகுதி போஷிப்பு'க் காரியங்களுக்குச் சௌகரியமாகிப் போகும் என்று கல்கியில் எழுதியிருந்தது சட்டசபை அங்கத்தினர்களுக்குப் பிடிக்கவில்லை. கல்கியில் எழுதியது 'ருசி'யாக இல்லை என்று சட்டசபைத் தலைவர் அபிப்பிராயப்பட்டார்.

சட்டசபை அங்கத்தினர்கள் அதிகாரிகளிடம் சென்று தங்கள் செல்வாக்கைச் செலுத்திப் பார்த்து வருவது உலக மறிந்த விஷயம். இது அவர்களுடைய கடமைகளில் ஒரு பகுதி என்றுகூட நினைக்கிறார்கள். இது தவறு; நிர்வாகத்தில் நேர்மைக் குறைவுக்குக் காரணமாகும் என்பது நமது அபிப்பிராயம். இதை எடுத்துக் காட்டுவது பத்திரிகைகளின் உரிமையாகும். நமது அபிப்பிராயத்தை எடுத்துக் காட்டுவது சபையின் கௌரவத்துக்கு ஹானியாகாது. இந்த உண்மையை ஒப்புக் கொண்டே சட்டசபைத் தலைவர் ஒரு காங்கிரஸ் அங்கத்தினர் செய்த ஆட்சேபணையைத் தள்ளிவிட்டார்.

உண்மை எப்போதும் ருசிக்காது; கைக்கும். ஆயினும் கசக்கும் உண்மைகளை எடுத்துச் சொல்லுவது பத்திரிகைகளின் தர்மம். "சட்டசபை கௌரவ உரிமை" என்ற எழுத்திலில்லாத சாஸ்திரத்தைக் கொண்டு இதைத் தடுக்கப் பார்ப்பது நியாயமாகாது. அதை ஒப்புக்கொண்டு தலைவர் தீர்ப்பளித்ததைப் பாராட்டுகிறோம்.

# அருள் வாக்கு

வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டும் என்பதை ஒரு லட்சியமாக இப்போதெல்லாம் சொல்லுகிறார்கள். மேற்கு நாடுகளில் வாழ்க்கைத் தரம் உயர்ந்திருக்கிறது. இன்னமும் உயர்ந்து கொண்டே வருகிறது. ஒவ்வொருவனும் செலவு செய்யும் தொகை அதிகமாக இருக்கிறது. அவர்களுடைய வருமானம் அதிகம். செலவு செய்வதும் அதிகம். அதே மாதிரி நாமும் நமது வாழ்க்கைத் தரத்தைப் படிப்படியாக உயர்த்திக் கொண்டே போக வேண்டும். அதுதான் நாம் முன்னேறிக் கொண்டிருப்பதற்கு அடையாளம். இப்படிப் பேசப்படுவதை நாம் கேட்கிறோம்.

நமது லட்சியம் சுக வாழ்வு வாழ வேண்டும் என்பதே. ஒவ்வொருவனும் சுகமாக வாழ வேண்டும் என்றுதானே கோருகிறான். வாழ்க்கைத் தரத்தை உயர்த்தி விட்டால் சுக வாழ்வு கிடைத்து விடுமா என்பதைக் கவனிக்க வேண்டும். வாழ்க்கைத்தரம் உயர்ந்தால் மனிதனின் தேவைகள் அதிகரிக்கும். தேவைகள் அதிகரிக்க அதிகரிக்க ஆடம்பரம் அதிகரிக்கும். அவற்றைப் பூர்த்திசெய்ய அதிகப்பணம்செலவழிக்க வேண்டும். அது கிடைக்கா விட்டால் கவலை. ஒரு தடவை ஒரு வஸ்து பழகிப் போய்விட்டால் அதைப் பிறகு விட்டு விட முடிகிறதில்லை. கஷ்டப்படுகிறோம்.

ஒவ்வொருவனுக்கும் மிகவும் அவசியமான தேவைகள் கொஞ்சமே. இருக்க இடம், உடுக்க உடை, உண்ண உணவு— இவை மூன்றும் எல்லோருக்கும் கிடைக்க வேண்டியது. இவை கிடைத்து விட்டால் கவலையற்று வாழலாம். இவற்றிலும் கூட அவசியமான அளவு கிடைத்தால் போதும். அளவுக்கு அதிகமானால் ஆடம்பரம்தான் மிகும்.

வசிக்க வீடு அவசியம் இருக்க வேண்டியது. மண் சுவரினால் ஆன சாதாரண எளிய வீடு வசிப்பதற்குப் போதும். அது கிடைத்தாலே திருப்தியடைய வேண்டும். மாடி வீடு இருந்தால்தான் குடியிருக்க முடியும் என்று எண்ணவேண்டியதில்லை. சிற்சில இடங்களில் இடவசதி இல்லாவிட்டால் முதல் மாடி, இரண்டாவது மாடி என்று மேலே உயர்ந்து கொண்டே போக வேண்டும். மேல் நாடுகளில் நாற்பது மாடி, ஐம்பது மாடிக் கட்டடங்கள் கட்டப்படுகின்றன. விஸ்தாரமான இடம் இருந்தாலும் அவர்கள் மாடிக் கட்டடங்களைக் கட்டி மகிழ்கிறார்கள். அது அவர்களுடைய செல்வத்தின் பகட்டு.

நம் நாட்டில் அம்மாதிரி அவசியம் இல்லை. பம்பாய் போன்ற சில இடங்களில் விஸ்தாரமான இடவசதி இல்லை. தொழில் வளமும் அதிகம். தொழிலை உத்தேசித்துச் சுற்றுப் புறங்களிலிருந்து மக்கள் அங்கே குவிந்திருக்கின்றனர். நெருக்கமாகவே வாழ வேண்டியிருக்கிறது. அங்கே மாடிக் கட்டடங்கள் அவசியமாக இருக்கும்.

மற்ற இடங்களில் அம்மாதிரி இல்லை. நமது தென்னாட்டிலே இடம் விஸ்தாரமாக இருக்கிறது மாடிக் கட்டடங்களே வாழ்க்கைக்கு அவசியமில்லை. சாதாரண வீடுகளே போதும்.

நாம் சின்னஞ்சிறு வீடுகளைக் கட்டிக் கொண்டுதான் வாழ்ந்து வந்திருக்கிறோம். இதற்கு விலக்காக இருந்தது ராஜக்கிரஹமும், அதாவது அரசர்களுடைய அரண்மனைகளும்; தேவக்ரஹமும் அதாவதுகோவில்களும். எந்த ஊரிலும், சிறிய நகரங்களிலும் பெரிய பட்டணங்களிலும், இவ்விரண்டு இடங்களில்தான் கட்டட அழகையும் வேலைப்பாடுகளையும் காணலாம். கலைக் களஞ்சியங்களாக இவை விளங்கின. விலையுயர்ந்த பொருள்களெல்லாம் அங்கேதான் இருக்கும். நாகரிகத்தின் சின்னங்கள் எல்லாம் அங்கேதான் பார்க்கலாம். இப்போதெல்லாம் 'மியூஸியம்' என்று அபூர்வ வஸ்துக்களைச் சேகரித்து ஓரிடத்தில் பொருட்காட்சிக்கென்று வைக்கிறோம். நாகரிகத்தின் உயர்வைக் காண வேண்டுமானால் இந்த மியூஸியத்துக்குச் சென்றுதான் பார்த்துரசிக்கிறோம். முன் காலத்தில் ராஜாவின் அரண்மனையும் கோவில்களும்தான் நமது நாட்டு மியூஸியங்கள். அங்கே வைப்பதற்காகச் செய்யப்பட்ட சாமான்களும் மிகுந்த வேலைப்பாடுகளுடன் கூடியிருந்தன. தெய்வ பக்தியுடனும் ராஜ விசுவாசத்துடனும் செய்யப்பட்ட வஸ்துக்களெல்லாம் உயர்ந்த ரகங்களாக இருந்தன. அவற்றைச் செய்தவர்களும் திருப்தியுடன் செய்தனர். எல்லாம் கைவேலைப்பாடுகள்.

ஸ்ரீ சங்கராச்சாரியார் ◇ காஞ்சி காமகோடி பீடம்

# விடுதலை அடைந்தனர்

கொழும்பு, செப். [illegible]௨

அரசியல் கைதிகளாகத் தடுப்புக் காவலில் வைக்கப்பட்டிருந்த தமிழ் அரசுக் கட்சித் தலைவர்கள் அனைவரும் இவ்வாரம் நிபந்தனையின்றி விடுதலை செய்யப்பட்டு விட்டார்கள். நாட்டில் திரும்பவும் பூரண அமைதியேற்பட்டு விட்டதாக அரசாங்கம் சொல்லிக் கொள்ளுகையில் தமிழ்த் தலைவர்களைத் தொடர்ந்து காவலில் வைத்திருக்க எவ்வித மான நியாயமும் கிடையாதென்று பார்லிமெண்டிலும் பார்லிமெண்டுக்கு வெளியிலும் பலமான கிளர்ச்சி நடந்து வந்ததோடு, விசாரணையின்றிப் பலரைக் காவலில் வைத்திருப்பது ஜனநாயகத்தைக் கேலிக்கூத்தாக்குவதாகும் என்று பொறுப்பு வாய்ந்தவர்களெல்லாம் கண்டித்து வந்தார்கள். அகில உலகிலுமுள்ள பத்திரிகைகளும் பொதுஜன அபிப்பிராயமும் அரசாங்கத்தின் போக்கை ஒரு முகமாகக் கண்டித்தன. இதற்கிடையில் காவலிலிருந்த தலைவர்களும் பிரதம மந்திரிக்கு மூன்று கோரிக்கைகளை அனுப்பி யிருந்தார்கள். அவைகளில் ஒன்று தங்களை உடனே கோர்ட்டில் நிறுத்தி விசாரணைக்கு உட்படுத்த வேண்டும். அல்லது நிபந்தனையின்றி விடுதலை செய்ய வேண்டுமென்பதும் விசாரணையின்றிக் காவலில் வைத்திருப்பது பெரிய அநியாயம் என்பதுமாகும். இந்தக் கோரிக்கைக்குச் சரியான பதில் கிடைக்காவிடில் சாகும்வரை உபவாசத்தை மேற்கொள்ளுவதென்று தமிழ்த் தலைவர்கள் தீர்மானித்திருந்தார்கள். இதுமாதிரியான பல காரணங்களை முன்னிட்டும் புதிய நெருக்கடியை விளைவிக்காமல் இருப்பதற்காகவுமே தமிழ்த் தலைவர்களைப் பிரதமர் நிபந்தனையின்றி விடுதலை செய்ய உத்தரவிட்டதாக நம்பப்படுகிறது.

தமிழ் அரசுக் கட்சியின் தலைவரான திரு ராஜவரோதயம், பொதுக் காரியதரிசி டாக்டர் இ. எம். வி. நாகநாதன், கட்சியின் உயிர்நாடியான திரு எஸ். ஜே. வி. செல்வநாயகம், திரு கு. வன்னியசிங்கம், திரு வி. ஏ. கந்தையா முதலியவர்களும் தமிழ் எம். பி. க்கள், செனட்டர்கள் முதலியவர்களும் சரியாக மூன்று மாத காலம் காவலில் இருந்துவிட்டு விடுதலை பெற்றிருக்கிறார்கள். இதோ பக்கத்தில் இருப்பவர் தான் சாவகச்சேரி பார்லிமெண்ட் அங்கத்தினர் திரு வி. என். நவரத்தினம். விடுதலை பெற்று வெளியே வந்ததும் திரு கந்தையா கல்கி பிரதிநிதியிடம் பேசியபோது, அரசாங்கத்தின் கட்டுக்காவல் தங்களுடைய மனோதிடத்தையும் வைராக்கியத்தையும் பன் மடங்கு அதிகரித்துள்ளதே தவிர, சிறிதளவும் சோர்வை ஏற்படுத்த வில்லை என்று அழுத்தமாகக் கூறினார்.



திரு வி. என். நவரத்தினம்.

விடுதலை செய்யப்படுவதற்கு முன்னால் திரு செல்வநாயகம் காரசாரமான கடிதம் ஒன்று பிரதம மந்திரிக்கு அனுப்பியிருந்தார். அரசியல் காரணங்களுக்காக எதிர்க் கட்சியினரைப் பட்டினி போட்டுக் கொல்லுவது மகா பெரிய பாபமும் மிலேச்சத்தனமானதுமாகுமென்று அந்தக் கடிதத்தில் அவர் இடித்துக் காட்டியிருந்தார். ''தைரியமிருந்தால் எங்களைப் பகிரங்கமாகக் கோர்ட்டில் நிறுத்தி விசாரணை செய்யுங்கள், அல்லது நிபந்தனையின்றி உடனே விடுதலை செய்யுங்கள்'' என்று அவர் கோரியிருந்தார்.

இதற்கிடையில் யாழ்ப்பாணத்திலிருந்து கிடைக்கும் செய்திகளைப் பார்க்கும்போது காவலில் இருப்பவர்களின் குடும்பங்கள் சாப்பிட வழியின்றிக் கஷ்டப்படுவதாகத் தெரிகிறது. இதுமாதிரி அரசாங்கம் நடந்து கொள்ளுவது வெந்த புண்ணில் வேல் பாய்ச்சுவதைப் போலிருக்குமே தவிர நல்லெண்ணத்தை வளர்க்க நிச்சயம் உதவமாட்டாதென்றும் சுட்டிக்காட்டப்படுகிறது. இதைப் பார்லிமெண்டில் சில எதிர்க்கட்சி அங்கத்தினர்கள் சுட்டிக் காட்டியபோது காவல் கைதிகளின் குடும்பங்களுக்கு அலவன்ஸ் கொடுப்பதைப்பற்றி அரசாங்கம் ஆராய்ந்து வருவதாகப் பதிலளிக்கப்பட்டது. அரசாங்கம் ஆராய்ந்து முடிப்பதற்குள் அந்த எளிய குடும்பங்கள் கொட்டாவி விட்டுவிடும் போலிருக்கின்றன.

ஸ்ரீ தொண்டமான் தலைமையிலுள்ள இலங்கை ஜனநாயக காங்கிரஸ் ஸ்தாபனத்தின் வருடாந்திர மகாநாடு இம்மாதம் நடைபெற இருப்பதை முன்னிட்டு நாடு முழுவதிலும் உள்ள காங்கிரஸ் ஜில்லாக் கமிட்டிகள், தோட்டக் கமிட்டிகள் ஆகியவற்றின் வருடாந்திரக் கூட்டங்கள் நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன. அவற்றில் பல்லாயிரக் கணக்கான தொழிலாளர் உற்சாகத்துடன் கலந்து கொண்டிருக்கிறார்கள்.

காங்கிரஸுக்கு ஸ்ரீ எஸ். தொண்டமான் மீண்டும் தலைவராக ஏகமனதாய்த் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார். தலைவர் தேர்தலுக்கு அவருடைய பெயரும் திரு எஸ். சோமசுந்திரம் என்பவரின் பெயரும் பிரேரேபிக்கப்பட்டன. திரு சோமசுந்திரம் தமது அபேட்சையை வாபஸ் பெற்றுக் கொண்டு விட்டபடியால் ஸ்ரீ தொண்டமான் போட்டியின்றித் தெரிவு செய்யப்பட்டிருப்பதாக உத்தியோக ரீதியில் அறிவிக்கப்பட்டிருக்கிறது. ஸ்ரீ தொண்டமான் பலமுறை காங்கிரஸ் அக்கிராசனரா யிருந்து மீண்டும் தேர்ந்தெடுக்கப்பட்டிருப்பது அவரிடம் பொதுஜனங்களுக்கு இருக்கும் பரிபூரண நம்பிக்கையை எடுத்துக் காட்டுவதாக உள்ளது. —ரஜனி

# யுவர்களுக்கு வேண்டுகோள்

ராஜாஜி

முன்னேற்றத்துக்கு மாறுதல்கள் அவசியம். ஆனால் தாறுமாறாக மனம் வந்தபடி நடப்பது சீர்திருத்தம் அல்ல. திருந்த வேண்டிய வழக்கங்களை அகற்றும் போது நல்லனவற்றையும் சேர்த்து எறிந்துவிட வேண்டியதில்லை. இதை எல்லோரும் ஒப்புக் கொள்வார்கள். யாருக்கும் அபிப்பிராய பேதமிருக்காது. ஆனால் நடைமுறையில் நல்ல பழக்க வழக்கங்கள், சமுதாயத்துக்கு மிக நன்மை தரும் பரம்பரைப் பழக்க வழக்கங்கள் புறக்கணிக்கப்பட்டு வருவதைத் தான் பார்க்கிறோம். இவ் விஷயத்தில் நமது இளைஞர்கள் சரியாக நடந்து கொள்ள வேண்டும் என்பதை வற்புறுத்த விரும்புகிறேன்.

சமுதாய சீர்திருத்தம் என்பதன் பெயரால் பண்டை நெடுங்காலமாக, பரம்பரை பரம்பரையாக வந்துள்ள ஆரோக்கிய சாதகமான பழக்கங்களை இளைஞர்கள் இரு பாலாரும் விட்டுத் தொலைப்பதைப் பார்க்கிறோம். சாதி வித்தியாசங்கள் ஒழிய வேண்டும் என்று விரும்புவது நியாயமே. அந்த வித்தியாசங்கள் ஒழிவதற்கு முன்னாலேயே நீண்ட காலமாக வந்துள்ள நல் ஒழுக்கங்கள் ஒழிந்து போய்க் கொண்டிருக்கின்றன. விலை மதிக்க வொண்ணாத பரம்பரைச் செல்வமாகிய பழக்கங்களை ஒரு பயனுமின்றி அனாவசியமாக இழந்து வருகிறோம்.

சைவ வேளாளர்களும் பிராம்மணர்களும் அனுசரித்து வந்த விரதங்களை அவர்களில் படிப்பும் உத்தியோகமும் பெற்றவர்கள் புறக்கணித்து வருகிறார்கள். பரம்பரை பரம்பரையாகப் புலால் உணவு மறுத்தவர்களும், மது பானம் செய்யாதவர்களும் சிகரெட் பீடி பிடிக்காதவர்களும் தற்போது அவற்றைச் செய்து வருகிறார்கள். தினமும் அவர்கள் சாஸ்திரோக்தமாக ஸ்நானம் செய்து மடித் துணிகளை உடுத்தி உடம்பையும் உடையையும் சுத்தமாக வைத்துக் கொண்டிருந்ததோடு, இந்தச் சமூகத்தார் அனைவரும் சைவ உணவை யுண்டு எந்தவிதமான குடிப்பழக்கமும் இல்லாதிருந்தார்கள். புகை பிடித்தல் என்பதே தெரியாதிருந்தார்கள். ஆனால் இந்தச் சமூகங்களைச் சேர்ந்த பல இளைஞர்கள் இப்போது புகை பிடிக்க ஆரம்பித்து, தங்கள் இனத்தைச் சேர்ந்தவர்களையும் கெட்டுப் போகத் தூண்டுகிறவர்களாக இருக்கிறார்கள். பலர் குடிப் பழக்கத்தையும் ஆரம்பித்து வருகிறார்கள். வீட்டில் புலால் உணவு இல்லை என்று அது கிடைக்கும் சாப்பாட்டுக் கடைக்குப் போகிறார்கள். படித்தவர்கள், பணக்காரர்கள், சர்க்காரில் அல்லது கம்பெனிகளில் நல்ல உத்தியோகம் பெற்ற அதிர்ஷ்டசாலிகள் தான் முதலில் இந்தக் கெட்ட பழக்கங்களை ஆரம்பித்து, பல தலைமுறைகளாகப் பழகி வந்த நல்ல பழக்கங்களைச் சமூகம் இழந்து விடுவதற்கு வகை செய்து வருகிறார்கள்.

அன்பார்ந்த இளைஞர்களே! நீங்கள் சாதி வித்தியாசத்தைப் போக்க வேண்டும் என்று விரும்பினால் அதற்கு வழி நியாயமான, பகிரங்கக் கலப்பு மணம் தான். கூடுமானால் அதைச் செய்யுங்கள். சாதிப் பிரிவினைகளைப் போக்க அதை விட வேறு வழியில்லை.

உங்களுக்கு வைதீகச் சடங்குகளில் நம்பிக்கை இல்லை யென்றால், அவை தொல்லையாக இருப்பதாகக் கருதினால், வீண் செலவாகிறது என்று கருதிப் பணத்தை மிச்சப்படுத்த விரும்பினால் அவற்றை விட்டுத் தொலையுங்கள். ஆனால் நீங்கள் ஏன் சிகரெட் பிடிக்க வேண்டும்? ஏன் விஸ்கியும் பிராந்தியும் குடிக்க வேண்டும்? வள்ளுவர் வேண்டாம் என்று சொல்லிய உணவை, மீனும், கோழியும், மற்ற உயிரைக் கொன்ற ஊனும் உங்கள் சாப்பாட்டுடன் ஏன் சேர்த்துக் கொள்ள வேண்டும்? பரந்த நோக்கத்தோடு வாழ வேண்டுமென்று விரும்பினால் வாழுங்கள். பாபம் கலவாத பரந்த நோக்கம் உங்களுக்குத் தெரியாதா? எல்லாச் சாதி மக்களுடன் கலந்து உறவாடுங்கள். மூடப் பழக்க ஒழுக்கங்களை ஒதுக்குங்கள். நீண்ட நெடு நாட்களாக, பரம்பரை பரம்பரையாக வந்த நல்லொழுக்கங்களை விடாதீர்கள். புலால் மறுப்பும், மதுவிலக்கும் நமக்கு இயல்பாகவும் எளிதாகவும் ஆகிவிட்ட விரதங்களாகும். அவற்றை ஏன் விட்டுவிட வேண்டும்?

இந்தத் தூய பழக்கங்களை மற்ற நாடுகள் பெற எவ்வளவு பாடுபட வேண்டியிருக்கும் என்பதை நினைத்துப் பாருங்கள். நீண்ட பழக்கம் காரணமாக, பரம்பரைச் சொத்தாக, தாய்மொழி பேசுவது எவ்வளவு சுலபமோ அவ்வ

எவு கலபமாக நமக்கு இப் பழக்கங்கள் ஏற்பட்டுள்ளன. இதை நீங்கள் உணராமல் ஒரு பயனுமின்றி விட்டு விடப் பார்க்கிறீர்கள். ஒரு விஷயத்தைச் சீக்கிரத்தில் அழித்து விடலாம். ஆனால் திரும்பக் கட்டுவது என்பது கஷ்டம். இவ்வளவும் எதற்காக விடுகிறீர்கள்? ஒரு அற்ப சந்தோஷத்துக்காக. உண்மையில் ஒழுக்கத்தினுல் பெறும் சந்தோஷத்தில் பத்தில் ஒரு பங்கு கூட இல்லை இந்த அற்ப சந்தோஷம்.

புலால் மறுத்தல், மதுவிலக்கு முதலிய பழக்கங்கள் உங்கள் சமூகத்தில் தலைமுறை தலைமுறையாக வந்த நல் பழக்கங்களாகும். அந்தப் பழக்கங்களைக் காப்பாற்றி வருவது தேசத்துக்குப் புரியும் தொண்டாகும். மற்ற இனத்தார் உங்களைப் பார்த்துப் பின்பற்ற விரும்பும் லட்சிய வாழ்வாகும். கெட்ட பழக்கங்களில் சிக்கிக் கொள்வது எளிது. அவற்றை விடுவது மிக கஷ்டமாகும். புலால் மறுத்தலும், மதுவிலக்கும், புகை பிடிப்பதும் ஹிந்து சமுதாயத்தைப் பிரிவினைப் படுத்தும் வேலிகளாகக் கருத வேண்டாம். அவையே நமது பலம். அந்த நற் பழக்கங்களை மற்றவர்களிடையே பரப்புவோமாக. சில சமூகங்களில் நிலவும் நல்ல சுகாதார பழக்க வழக்கங்களை அழித்து விடாதீர்கள். படித்தவர்களிடையேயும் படியாதவர்களிடையேயும், ஏழைகளிடையேயும், பணக்காரர்களிடையேயும் எண்ணி முடியாத தலைமுறை தலைமுறையாக வந்து இயல்பாகவே படிந்து விட்ட நல்ல பழக்கங்களாகும் இவை. உலகில் எந்த நாட்டிலும் இப்படி உயரிய ஒழுக்கம் எந்தச் சமுதாயத்திலும் படிந்ததில்லை. இது உலகத்துக்கோர் அதிசயம்.

இந்த நல்ல பழக்கங்கள் நம்மிடையே இருக்கின்றனவே என்று ஆணவமின்றிப் பெருமைப்படலாம். இப்படிப் பட்ட செல்வத்தைச் சமுதாய மாறுதல் என்றும், சீர்திருத்தம் என்றும் முதல் பலியாகக் கொடுத்துவிட வேண்டாம்.

சில கெட்ட பழக்கங்களினுல் நாம் அடையும் சந்தோஷம் அற்பமானது. பழக்கப்பட்டவனுக்குக் கட்குடியையும் புகை பிடிப்பதையும் விடுவது ரொம்பக் கஷ்டமாகும். விடுவது கஷ்டம் என்பதினுல் அந்தப் பழக்கத்தினுல் சுகம் காண்கிறோம் என்பது மோசம். ஆகவே, இளைஞர்களுக்குச் சொல்லுகிறேன். அவசரப்பட்டு இந்த வலையில் சிக்கிக் கொள்ளாதீர்கள். கெட்ட புதுப் பழக்கங்களை ஏற்படுத்திக் கொள்ள வேண்டாம். பழக்கப்பட்டுப் போனவர்களுக்கு நான் உபதேசம் செய்யவில்லை. அவர்களுக்கு இதிலுள்ள கெடுதல் நன்கு தெரியும். ஆயினும் அதிலிருந்து விடுபடத்தான் அவர்களால் முடியவில்லை. சர்க்கார் காரியாலயங்களிலும் தொழில் துறைகளிலும் வர்த்தகத் துறைகளிலும் உத்தியோகம் பெற்ற இளைஞர்களைத்தான் வேண்டிக் கொள்கிறேன். நற் பழக்கங்கள் பெரும் செல்வமாகும், பெற்றோர்களிடமிருந்து வந்த பரம்பரைச் செல்வமாகும். இந்தச் செல்வத்துக்கு 'எஸ்டேட் டியூடி' கிடையாது. எந்தச் சர்க்காரும் பறிக்க முடியாது; அதன் மீது எந்த வரியும் விதிக்க முடியாது!

இளைஞர்களே! நாட்டுக்கு நீங்கள் புரிய வேண்டிய மகத்தான பணியிருக்கிறது. மகத்தான ஒழுக்கப் புரட்சி உங்களால் செய்யப்பட வேண்டும் என்று தேசம் காத்திருக்கிறது. பேராசையையும் மோசடியையும் மக்கள் வெறுக்கச் செய்ய வேண்டும். அந்தப் புரட்சிக்கு நீங்கள்தான் தலைவர்களாக இருந்து நடத்த வேண்டும். அதை அரசியலார் நடத்த முடியாது.

அத்தகைய ஆத்மீகப் புரட்சி நடத்த நீங்கள் பெற்றுள்ள பரம்பரைச் சொத்தை இழந்து விடாதீர்கள்!

# வாழ்வும் வடிவும்

பரம்பரை மெருகும் எழிலான சூழ்நிலையும் உற்சாகமூட்ட, இந்தியக் கைத்தொழில் கலை மேதைகள் நூற்றாண்டு நூற்றாண்டாக அழகிய பொருள்களைப் படைத்து வருகிறார்கள். சமூகம் மறுமலர்ச்சி யடைகிறது : புதுமை வடிவு(டிசைன்)களின் தேவை அதிகரிக்கிறது.

இந்த வகையில் கலைஞர்களுக்கு உதவுவதற்காக, கைத்தொழில் போர்டு டெல்லி, பம்பாய், பெங்களூர், கல்கத்தா ஆகிய இடங்களில் வடிவமைப்பு நிலையங்களை ஏற்படுத்தியுள்ளது. இந்த நிலையங்கள் பழைய வடிவுகளைப் புதுப்பித்தும் புதிய கவர்ச்சிகரமான வடிவுகளை அமைத்தும்— உலோகங்களிலும், மரத்திலும், உறுப்பாங்களி(டெரகோட்டா)யிலும், களிமண்ணிலும், கொம்பிலும், தந்தத்திலும், துணியிலும் அவைகளை நிலைநிறுத்துகின்றன. 'ஆம், நமது மக்களின் கலை ஆர்வம், காலத் தேவைக்கேற்ற நவநவமான வடிவுகளாக உருவாகிக் கொண்டே யிருக்கிறது.

அகில இந்தியக் கைத்தொழில் போர்டு

## கைத்தொழில் பொருள்கள் – நல்ல வீடுகளை அலங்கரிக்கின்றன

DA 58-181

# ருஷ்ய ஞானி டால்ஸ்டாய்

மகாகவி பாரதியாரின் நினைவுநாளைக் கொண்டாடும் இவ்வாரத்தில் நமது நினைவு ருஷ்ய ஞானி டால்ஸ்டாயிடம் செல்கிறது.

ருஷ்ய ஞானி டால்ஸ்டாய் இன்றும் உயிருடன் இருந்தால் அவருக்கு இந்தச் செப்டம்பர் 9ம் தேதியுடன் 130 ஆண்டுகள் ஆகியிருக்கும். இந்த 130வது பிறந்த தினத்தை உலகம் மிக விமரிசையாகக் கொண்டாடியிருக்கும். உலகம் விமரிசையாகக் கொண்டாடினாலும் கொண்டாடா விட்டாலும் நாம் அவரை நினைவுகூர்ந்து அவருக்கு அஞ்சலி செலுத்துவது நமது கடமையாகும்.

அவருக்கும் நமக்கும் என்ன தொடர்பு என்று கேட்கலாம். நம்முடைய சுதந்திரப் போராட்ட முறைக்கு ஆக்கமும் ஆசியும் தந்தவர் டால்ஸ்டாய் என்று சொன்னால் வியப்பாக இருக்கும்.

காந்திமகான் சத்தியாக்கிரக முறையில் பாரத தேசத்துக்குச் சுதந்திரத்தை வாங்கித் தந்தார். இது உலகத்துக்கொரு புதுமை என்று போற்றுகிறோம். இந்த முறை முதன் முதலில் தொடங்கியது தென்னாப்பிரிக்காவில்.

காந்தி மகான் இளம் பிராயத்தில் தென்னாப்பிரிக்காவிலிருந்தபோது, சாத்வீகப் போர் முறை அவர் உள்ளத்தில் உதித்தது. ஏழை எளிய மக்கள் தங்கள் உரிமைகளைப் பெறப் பலாத்காரம் வழியல்ல; சத்தியமே பலம் என்பதைக் கண்டார். இது சம்பந்தமாகத் தமது சந்தேகங்களைத் தீர்த்துக் கொள்ள ருஷ்யாவில் அப்பொழுது காந்தி மகானைப் போலவே தீவிரமாகச் சிந்தித்து எழுதி வந்த ருஷ்ய ஞானி டால்ஸ்டாய்க்கு எழுதினார். டால்ஸ்டாய் எழுதிய பதில் காந்தி மகானுக்குப் பெருத்த உற்சாக மளித்தது. தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரகப் போர் நடத்தி ஓரளவு வெற்றியும் கண்டார். உண்மையில் காந்தி மகான் லண்டனில் படித்து வந்த நாட்களிலேயே டால்ஸ்டாயின் இலக்கியங்களைப் படித்து ஈடுபாடு கொண்டார். தென்னாப்பிரிக்காவில் காந்திமகான் இருந்தபோது, தாம் நடத்திவந்த ஆசிரமத்துக்கு டால்ஸ்டாய் பண்ணை என்றே பெயரிட்டார் என்றால் காந்திமகானுக்கு டால்ஸ்டாயிடம் எவ்வளவு ஈடுபாடு இருந்திருக்கவேண்டும் என்பதை ஊகித்துக்கொள்ளலாம். காந்தி மகான் டால்ஸ்டாயைத் தமது குரு என்றே சொல்லி மதித்துப் போற்றியிருக்கிறார்.

இப்படி காந்தி மகானுக்கும் டால்ஸ்டாய்க்கும் நடந்த கடிதப் போக்குவரத்துக்களையெல்லாம் இன்றைய ருஷ்ய சர்க்கார் பத்திரமாகப் போற்றிப் பாதுகாத்து வருகிறார்கள் என்று கேள்விப்பட மெய் சிலிர்க்கிறது. ருஷ்யாவுக்குச் செல்லும் ஒவ்வொரு யாத்திரிகரும் டால்ஸ்டாய் இல்லத்துக்கு ஒரு கோயிலுக்குப் போவது போல் போய் வருகிறார்கள். அங்கு போகும் இந்தியர்கள் இந்த இரு மகான்களும் எழுதிக்கொண்ட கடிதங்களைப் பார்க்கத் தவறுவதில்லையாம்.

டால்ஸ்டாயை உலகம் முழுதும் இன்று கொண்டாடுகிறது. ஏன்? அவர் ஓர் பெரிய இலக்கிய மேதை; போரும் சமாதானமும், அன்னகரீனா போன்ற உலகப் பேர் இலக்கியங்களை வழங்கிய மேதை என்று போற்றுகிறது. ஆனால் அவரோ பின்னாட்களில் இந்தப் புகழைக் கேட்டு வெட்கப்பட்டார். தாம் இந்த இலக்கியங்களை எழுதியதற்காக அவமானப்பட்டார்.

ஏனெனில் அவர் உள்ளம் வேறு விதத்தில் பரிபக்குவம் அடைந்து வந்தது. உயர்ந்த எண்ணங்கள், ஆண்டவனின் சிந்தனை, மக்களுக்குத் தொண்டு புரிதல் முதலியவற்றுடன் தாமும் பரம ஏழைக் குடியானவன் போல் வாழவேண்டும்; இதுவே சிறந்த வாழ்வு என்பதைக் கண்டார்.

டால்ஸ்டாய் அரச போகத்தில் பிறந்தார். நாற்பத்து நான்கு பெரிய அறைகள் கொண்ட மாபெரும் மாளிகையில் பிறந்தார். வாழ்க்கையில் எல்லாச் சுகங்களையும் அனுபவித்தார். அப்படி அனுபவித்தவர், தமது நிலங்கள், சொத்துடைமை யெல்லாம் வாரி வழங்கி விட்டுப் பரம ஏழைக் குடியானவனைப் போல் கையில் கலப்பை எடுத்து உழுது வாழ்வதே உயர்ந்த வாழ்வு என்ற முடிவுக்கு வந்து அப்படியே வாழவும் செய்தார்.

இன்னொரு விந்தை, டால்ஸ்டாய் சிறு பிராயத்திலிருந்தபோது, இவருக்குப் பாடம் சொல்லிக் கொடுத்து வந்த ஆசிரியர்கள் 'இந்தச் சிறுவன் மூளைக்குள் ஒன்றையும் ஏற்ற முடியாது; மகா மண்டு' என்று முடிவு கட்டினார்களாம். அந்த மண்டுதான் பிற்காலத்தில் இலக்கிய மேதையாக விளங்கியிருக்கிறது.

டால்ஸ்டாய் தமது இலக்கியங்களைப்பற்றிக் குறைவாக மதித்தாலும் இன்றைக்கும் உலகிலுள்ள பேரறிஞர்கள் எல்லாரும் வியந்து வருகிறார்கள். சமீபத்தில் ருஷ்ய சர்க்கார் வெளியிட்ட டால்ஸ்டாயின் கதைத் தொகுதியைப் படித்து விட்டு ராஜாஜி ''இந்தத் தொகுதியில் எந்தக் கதையைப் படித்தாலும் உள்ளம் உயர்கிறது; ஆத்மா நிறைவு பெறுகிறது. 'இந்தப் பாபத்தைச் செய்யாதே, அந்தப் பாபத்தைச் செய்யாதே. உன்னை நீயே பார்த்துப் பார்த்துப் பரிதாபப்படும் தவற்றைச் செய்யாதே' என்று எச்சரிக்கை செய்துகொண்டே மெள்ள இந்த ருஷ்ய ஞானி அழைத்துக்கொண்டு போகும் பாங்கைப் பார்க்கும்போது, நாம் ஏதோ கடவுளுடனேயே கைகோத்து நடப்பது போன்ற உணர்ச்சி ஏற்படுகிறது!'' என்றார்.

தமிழ்மக்கள் டால்ஸ்டாயின் பல நூல்களை மொழிபெயர்த்து வாசித்திருக்கிறார்கள். டால்ஸ்டாயின் இலக்கியங்கள் தொடர்ந்து தமிழ்மக்களுக்குஉன்னதநோக்கங்களும் ஆத்ம சாந்தியும் அருளும் என்பதில் சந்தேகமில்லை.

பாரத நாட்டுப் பழங்கால ரிஷிகளுக்குச் சமானமாக வாழ்ந்த மகானின் சில தோற்றங்களை எதிர்ப் பக்கத்தில் காணலாம்.

---

1. டால்ஸ்டாயும் அவரது மனைவியாரும். 2. டால்ஸ்டாய் அவரது தோட்டப் பண்ணையில். 3. அவரது படிக்கும் அறையில். 4. டால்ஸ்டாயும் பேரக் குழந்தைகளும்.

### தானே இயங்கும் ஸர்பேஸ் கிரைண்டர்

இக்கருவிமூலம் ஸிலிண்டர் பிளாக், ஸிலிண்டர் ஹெட்டுகள் மற்றும் இதர பாகங்கள் மீதுள்ள வளைவுகள் அகற்றப்படுகின்றன.



### பிரஷர் பர்ஜர்

ரேடியேட்டரில் விடப்படும் ஜலத்திலுள்ள அசுத்தங்கள் சில சமயம் நீரோட்டத்தைத் தடுத்து, இன்ஜின் உஷ்ணத்தை அதிகரித்து விடும். இப்பிரஷர் பர்ஜர் கருவி பிரத்யேக ரஸாயனங்கள் மூலம் தடைகளை நீக்குகிறது.



### டைனமோவிலும் ஸெல்ப் ஸ்டார்டரிலும் உள்ள கோளாறுகளை இக்கருவி சோதிக்கிறது



### மாக்னடிக் டிடெக்டர்

இந்த நுட்பமான கருவிமூலம் கிராங்க் ஷாப்ட் மற்றும் இதர ஷாப்டுகள் மீதுள்ள கண்ணுக்குப் புலப்படாத விரிசல்கள் பிரத்யேகமான வகையில் கண்டுபிடிக்கப்படுகின்றன.



### டைனமிக் பாலன்ஸர்

சரியாக இயங்காத கிராங்க்ஷாப்ட் காரின் இன்ஜினைப் பாழ்படுத்திவிடும். இக்கருவி கிராங்க் ஷாப்டிலுள்ள ஊனங்களைக் கண்டு பிடித்து, சீர்செய்ய உதவுகிறது.



### கிராங்க் ஷாப்ட் கிரைண்டர்

புதிதாக உருவாக்கப்பட்ட கிராங்க் ஷாப்டை நிபுணர்கள் மிக நுட்பமான அளவிற்கு இக்கருவி மூலம் இழைக்கின்றனர்



# & ஸன்ஸ் பிரைவேட் லிமிடெட்

புதுக்கோட்டை • சேலம் • கோயமுத்தூர்

# பிரைவேட் லிமிடெட், மதராஸ்

TVS 255

[அன்னியச் செலாவணி சம்பந்தமான ஆராய்ச்சி அரங்கக் கட்டுரைகளைப் படித்துவிட்டுத் தங்கள் அபிப்பிராயங்களையும் ஆலோசனைகளையும் பலர் கடிதம் மூலம் தெரிவித்திருக்கின்றனர். அவர்களுள் திரு ஸி. எச். பாபாவும் ஒருவர். திரு பாபா அவர்கள் மத்திய சர்க்காரின் வர்த்தக மந்திரியாக முன்னாட்களில் பதவி வகித்தவர். இந்தியாவின் தொழில் முன்னேற்றத்தில் ஆழ்ந்த அக்கறை கொண்டவர். ஸென்ட்ரல் பாங்கிக்கும் ஓரியன்டல் அஷ்யூரன்ஸ் கம்பெனிக்கும் உப அக்ராஸனர்; ஈஸ்டர்ன் ஷிப்பிங் கார்ப்பரேஷனின் அக்ராசனர். நமது நாட்டின் உணவுப் பிரச்னையையும் செலாவணி நெருக்கடியையும் சமாளிக்க அவர் தமது ஆலோசனையை நமக்கு அனுப்பியிருக்கிறார். அதைக் கீழே பிரசுரிக்கிறோம். — ஆசிரியர்.]

# அன்னியச் செலாவணிப் பிரச்னை

ஸி. எச். பாபா

தற்போது நீடித்துக் கொண்டிருக்கும் பொருள்நிலையானது நமது அன்னியச் செலாவணிப் பிரச்னையை மற்றெல்லாவற்றையும் விட மிகக் கடுமையான பிரச்னையாகச் செய்துவிட்டது. இதைச் சிலர் அலட்சிய மனப்பான்மையுடன் முதலில் கருதினாலும் இப்போது அதிகாரிகளிடையேயும் இதரர்களிடையேயும் இது ஒரு நீண்ட காலப் பிரச்னைதான் என்ற எண்ணம் நிலவி வருகிறது.

இதைக் குறுக்கு வழியில் "சமாளிக்கச் சில அறிஞர்கள் ஒரு சுலபமான யோசனையைச் சொல்லுகின்றனர். நம்மிடையே புழக்கத்திலிருக்கும் நாணயத்துக்குப் பாதுகாப்பாக அன்னியச் செலாவணியே தேவையில்லை என்பது அவர்கள் கருத்து. எனவே நமது கையிருப்பிலுள்ள அன்னியச் செலாவணியை முற்றிலுமே கரைத்து விடலாம் என்பது இதிலிருந்து ஊகித்துக் கொள்ள வேண்டும். நம்முடைய தற்போதைய நிலைமையிலும் வேகமாக முன்னேறிக் கொண்டிருக்கும் நிலைமையிலும் இம்மாதிரி சம்பிரதாயத்துக்கு மாறான செய்கை நமக்கு ஆபத்தாகத்தான் முடியும். ஆகையால் இது சம்பந்தமாகச் சர்க்கார் தங்கள் கொள்கையைத் திட்டவட்டமாக உடனடியாகத் தெரிவித்து விட வேண்டும். அவ்வித அறிக்கை நமது அன்னியச் செலாவணி நிலைமையைச் சமாளிக்க உதவுவதோடு உலகத்திலுள்ள கட்டுப்படுத்தாத நாணயங்களிடையே ரூபாயின் ஸ்தானமும் நிர்ணயமாகத் தெரியும்.

ரூபாயின் மதிப்பும் கௌரவமும் நீடித்து நிலைக்க உள்நாட்டில் உற்பத்தியாகும் தங்கம் அனைத்தையுமாவது நாணயப் பாதுகாப்பு நிதியைப் பலப்படுத்துவதற்காகவே உபயோகப்படுத்த வேண்டும். குறைந்தபக்ஷம் இந்த நடவடிக்கையையாவது நமது சர்க்கார் மேற்கொள்ள வேண்டும். நாட்டில் உற்பத்தியாகும் தங்கம் முழுவதும் முதன் முதலாக அரசாங்கத்துக்குத்தான் வழங்கப்பட வேண்டும். அதுவும் நாணயக் காப்பு நிதிக்காகவே.

அன்னியச் செலாவணி நெருக்கடி சம்பந்தமாக, இந்தப் பிரச்னை நீண்ட காலத்துக்கு நமக்குக் கவலை அளிக்கும் என்பதை ஒப்புக் கொண்டால், கீழ்க்கண்ட நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளுவதன் மூலம் இதை முற்றிலும் சமாளிக்க முடியாவிட்டாலும் வெகுவாகக் கட்டுப்படுத்தக் கூடும் ;—

1. மாதா மாதம் நாட்டின் அன்னியச் செலாவணி நிலைமையைப் பரிசீலனை செய்து மூன்று மாதங்களுக்கு ஒரு முறையோ ஆறு மாதங்களுக்கு ஒரு முறையோ இவ்விஷயத்தைப் பற்றி உண்மை நிலைமையை விளக்கி ஒரு அறிக்கை விடுக்க ஒரு உயர்ந்த கட்ட கமிட்டி பிரத்தியேகமாக அமைக்கப்பட வேண்டும். இதில் 'காபினெட்' சபை அந்தஸ்துள்ள ஒரு மந்திரியும், ரிஸர்வ் பாங்கியின் பிரதிநிதியும், கட்சிக் கோட்பாடுகளில்லாத ஒரு பொருளாதார நிபுணரும், அதிகாரப் பற்றில்லாத உயர் அந்தஸ்துள்ள ஒருவரும் அங்கம் வகிக்க வேண்டும். அவர்கள் முக்கிய வேலை அன்னியச் செலாவணி நிலைமையைப் பரிசீலிப்பதுதான்.

2. ஏற்றுமதிப் பெருக்குக்குத் தீவிர முயற்சிகள் மேற்கொள்ளப் படவேண்டும். அவ்வப்போது இம்முயற்சிகள் என்ன பலனளித்திருக்கின்றன என்று பரிசீலனை செய்து அறிக்கை சமர்ப்பிக்க வேண்டும்.



ஸி. எச். பாபா

3. சம்பிரதாயமாக நாம் ஏற்றுமதி செய்யும் பொருள்களைத் தவிர இதரப் பொருள்களின் ஏற்றுமதிக்காகத் தனிக் கொள்கை வகுக்கப்பட வேண்டும். உதாரணமாக, என்ஜினீரிங் சாமான்கள், உருக்கு, எஃகுச் சாமான்கள், விவசாயக் கருவிகள், தையல் மிஷின்கள், மின்சார பம்புகள், மின்சார மோட்டார்கள்—இன்னும் இவை போன்று புதிதாக நாட்டில் உற்பத்தியாகும் சாமான்கள் அனைத்துக்கும் ஏற்றுமதிக்காக ஊக்க மளிக்க வேண்டும். அவசியமானால்

அவர்களுக்கு மானியம் வழங்குவது பற்றிக் கூட யோசனை செய்யலாம். இம்மாதிரி ஏற்றுமதி செய்யும் இனங்களுக்கு அதனதன் மூலம் கிடைக்கும் அன்னியச் செலாவணியில் 15 அல்லது 20 சதவிகிதம் அந்தந்தத் தொழிலுக்குத் தேவையான யந்திரச் சாமான்களையும் அவசியமான மூலப் பொருள்களையும் இறக்குமதி செய்து கொள்ளுவதற்கு லைசென்சுகள் கூட வழங்கலாம். இவ்வாறு அனுமதிக்கப்படும் சாமான்களின் ஜாபிதாவைக்கூட முன்கூட்டியே அறிவித்து விடலாம்.

4. அயல் நாட்டிலிருந்து பதினைந்து வருஷத் தவணைக்குக் குறையாமல் நீண்ட காலச் சாதாரணக் கடன்களாகவும், அல்லது அடமானக் கடன்களாகவும் தொழிலதிபர்களுக்குக் கிடைக்கும் தொகை எவ்வளவானாலும் அவற்றை முழு மனத்துடன் வரவேற்க வேண்டும். அரசாங்கத்துக்கு அரசாங்கம் பேசி இவ்விஷயத்தில் ஏற்பாடு செய்து பல தவணைகளில் கடன் வசதிகளும் உண்டாக்கிக் கொடுக்கலாம்.

5. இப்போதுள்ள நிலை நாம் வர்த்தகம் செய்யும் வெளிநாடுகளுடன் ஒரு நாணய ஐக்கிய ஒப்பந்தம் (Currency Union) செய்து கொள்ள மிகவும் ஏற்றது என்றும் தோன்றுகிறது. இந்தியா, தென்-கிழக்கு ஆசிய நாடுகள், மத்திய கிழக்கு ஆசிய நாடுகள் முதலியவை ஒன்று கூடி ஒரு சுங்க வரி ஒப்பந்த அடிப்படையில் நாணய ஐக்கியம் ஏற்படுத்திக் கொள்ளுவது நல்லது. அம்மாதிரி ஐக்கியம் ஏற்பட்டால் இந்த நாடுகளுடன் நடக்கும் வர்த்தகத்தின் பற்று வரவுகளை இந்திய ரூபாய் நாணயத்திலேயே தீர்த்துக் கொள்ள முடியும். இந்த நாடுகளுக்கிடையே ஏற்படும் வர்த்தகக் கணக்கைத் தீர்க்க இந்திய ரூபாய் சிறிய அளவில் ஒரு மத்திய பாங்கி போல் ஆகிவிடும். நமக்கு வர்த்தகத் தொடர்புள்ள பர்மா, இலங்கை, மலாயா, இந்தோசைனா, எகிப்து, ஈரான் முதலிய நாடுகளின் பொருளாதார அமைப்பும் நமது நாட்டின் பொருளாதார அமைப்பும் சில அம்சங்களில் ஒன்றுக் கொன்று அனுசரணையுள்ளவை போலவே இருக்கின்றன. அதனால்தான் நாணய ஐக்கியம் ஏற்படுத்திக் கொள்வது கஷ்டமல்ல. நடக்கக் கூடியதே. நீண்ட காலத்துக்குப் பலனளிக்கும்.

6. சர்க்காரின் நடவடிக்கைகளையும் சர்க்கார் ஸ்தாபனங்களின் நடவடிக்கைகளையும், தேசிய வர்த்தகக் கார்ப்பரேஷன் நடவடிக்கைகளையுங்கூட, கட்டுப்படுத்திக் குறைத்துக் கொள்ளுவதன் மூலம் அன்னியச் செலாவணி நிலைமையில் நாளடைவில் அபிவிருத்தி ஏற்படலாம். இம்மாதிரி ஸ்தாபனங்கள் மேற்கொள்ளும் நடவடிக்கைகளுக்குத் திட்டவட்டமாக ஒரு வரையறை ஏற்படுத்தினால், அதனாலேயே அன்னியச் செலாவணித் தட்டு குறையும் என்று எதிர்பார்க்கலாம். இந்த ஸ்தாபனங்கள்கூடப் பலனளிக்கும் வகையில் முன்னேறக் கூடும்.

7. எல்லாவற்றுக்கும் மேலாக, விரிவடைந்து வளரும் நமது பொருளாதார முன்னேற்றத்துக்கு இன்றியமையாத தேவை அன்னிய மூலதனம் நம் நாட்டில் வந்து குவிவதற்கு ஏற்ற சூழ்நிலையை நாம் நம் நாட்டில் உண்டாக்க வேண்டியது. இது முக்கியம். இதற்கு என்னென்ன நடவடிக்கைகள் எடுத்துக்கொள்ளப்படவேண்டும் என்பது தெரியாததல்ல. அவை அனைத்தும் மேற்கொள்ள வேண்டியதுடன் அவை சம்பந்தமான கொள்கைகளையும் அவ்வப்போது பகிரங்கமாக அறிவித்து விட வேண்டும்.

## உணவுப் பிரச்னை

இது ஒரு பழைமையான பிரச்னை. தீர்வு காணமுடியாதபடி நம்முடன் இருந்து நமக்குக் கவலை அளித்துக் கொண்டே இருக்கிறது. அவ்வப்போது நிலைமையில் அபிவிருத்தி ஏற்பட்டது போல் தோன்றுகிறது. அம்மாதிரி தோன்றுவதெல்லாம் பல்வேறு இதர காரணங்களாலும் நிலைமையினாலும் ஏற்பட்டவை.

நமது நாட்டில் பெருகிக் கொண்டே வரும் லட்சக்கணக்கான மக்களுக்கு உணவளிப்பது சாமான்ய காரியமல்ல. புத்திசாலித்தனமான கொள்கைகளையும் செயல் முறைகளையும் கடைப்பிடித்தால் நிலைமையில் முன்னேற்றம் காண முடியும். அதாவது கவலை தரும் அளவுக்குப் பெருகிக் கொண்டிருக்கும் ஜனங்களுக்கு உணவளிப்பதே நமது அரசாங்கத்தின் நிர்வாகத் திறனுக்கும் என்ஜினியர்கள் சாமர்த்தியத்துக்கும் ஒரு சவாலை ஏற்பது போலாகும்.

ஜனப் பெருக்கத்துக்குத் தக்கவாறு உணவு உற்பத்தி பெருகவில்லை என்பது அடிப்படையான உண்மை. சுமார் இருபத்தைந்து வருஷங்களாகவே நமக்கு அதிகப்படித் தேவைக்கு அண்டை நாடுகளிலிருந்து உணவுப்பொருள்களைத் தருவித்துக் கொண்டுதான் இருந்தோம். இந்தியாவுடன் பர்மா இணைந்திருந்த காலங்களில் இந்த நிலைமையை நாம் அதிகமாகக் கவனிக்கவில்லை.

நிலைமை கடுமையாக முற்றிக் கவலை ஏற்படும் போது தூரதேசங்களாகிய கனடா, ஆஸ்திரேலியா போன்ற நாடுகளிலிருந்து உணவுப் பொருள்களை இறக்குமதி செய்கிறோம். இதன் விளைவுகள் ஏற்றுமதி நம் நாட்டில் குறைந்து போய், இறக்குமதி அதிகரிக்கும் சமயங்களில் நமக்கு நன்றாகத் தெரிகின்றன. தற்போதைய நிலைமை என்னவென்றால் நம்முடைய கையிருப்பு எல்லாம் கரைந்து போய், மேலும் இறக்குமதிக்குக் கொடுக்கப் பணமில்லாது, நமது உணவு உற்பத்திக் கொள்கைகளும் செயலும் ஒன்றையொன்று பரிகசிப்பது போல இருக்கின்றன.

என்னுடைய அபிப்பிராயத்தில் இப்பிரச்னைக்குக் கீழ்க்கண்ட முறைகளில்தான் தீர்வு காண வேண்டும்.

1. நம் நாட்டின் நீண்டகாலத் தேவை எவ்வளவு என்பதை முன்கூட்டியே மதிப்பீடு செய்ய வேண்டும். அதைப் பூர்த்தி செய்ய நிரந்தரமான கொள்கைகளை வகுக்க வேண்டும். இக்கொள்கைகளில் குறைந்த பட்சம் பத்து வருஷங்களுக்காவது மாறுதல் இருக்கக் கூடாது. கொள்கைகள் திட்டவட்டமாகச் சொல்லப்பட வேண்டும். அதை அமுல் செய்வதில் மாறுதல் இருக்கக் கூடாது. இந்த விஷயத்தில் கவைக்கு உதவாத கருத்துக்களைப் பின்பற்றினால் நாட்டுக்கு ஆபத்துக்

தான் விளையும். உணவு நிலைமையில் அபி விருத்தி ஏற்படாது.

2. குறைந்தபட்ச அளவு உணவுப் பொருள்கள் சேமிப்புக்காக வைத்தே தீர வேண்டும். இதன் அளவுகளை அவ்வப்போது பகிரங்கமாகவே தெரிவிக்க வேண்டும். பண்டங்கள் பழைமையாகி விட்டால் அதை மாற்றிக் கொள்வதற்கு மட்டும் புதுப் பண்டங்கள் தருவித்துக் கொள்ள வேண்டும். குறைந்த பட்ச அளவுக்கு மேல் முடிந்தவரையில் சேமிப்பை அதிகரிக்க முயல வேண்டும்.

3. சாதாரணமாக உணவுப் பண்டங்களை நமக்கு அனுப்பி வைக்கும் நிலையிலுள்ள அமெரிக்க ஐக்கிய நாடு, கனடா, ஆஸ்திரேலியா, பர்மா, தாய்லாந்து போன்ற நாடுகளுடன் பத்து வருஷ காலத்துக்கு அமுலிலிருக்கும்படி சாதகமான விலை விகிதத்தில் உணவு இறக்குமதி ஒப்பந்தங்கள் செய்து கொள்ள வேண்டும்.

4. மக்களின் உணவுப் பழக்கத்தை மாற்றத் தீவிரமான நடவடிக்கைகள் மேற்கொள்ளப்பட வேண்டும். இதை நிறைவேற்றி வைக்க முயற்சி செய்வதுடன் அவ்வப்போது ஏற்பட்ட பலன்களை மக்களுக்குத் தெரிவிக்க வேண்டும்.

5. தற்போது மேற்கொள்ளப்பட்ட நிலச் சீர்திருத்தக் கொள்கைகளினால் எவ்வளவு ஹானி விளைந்திருக்கிறதென்பதைப் புனராலோசனை செய்ய வேண்டும். அதன் பிறகு நில சம்பந்தமாக ஒரு புதுக் கொள்கை வகுக்கப்பட வேண்டும். நிலங்கள் துண்டாடப்படுவதைக் கண்டிப்பாகத் தடுக்க வேண்டும். இம்மாதிரி உருவாக்கப்படும் கொள்கை மக்களின் மனப்போக்கைக் கவனித்துக் குறைந்த பட்சம் பத்து வருஷங்களுக்காவது மாறாது இருக்கும்படியாக அமைக்க வேண்டும்.

6. சாகுபடியாகிக் கொண்டிருக்கும் நிலத்தில் குறைந்த பட்சம் இரண்டு சதமாவது தானிய வகைகளைத் தவிர இதர விவசாயப் பண்டங்கள் உற்பத்திக்கென்று கட்டாயமாக ஒதுக்கப்பட வேண்டும். இப்படி ஒதுக்கப்பட்ட நிலத்தில் உயர்ந்த சத்துள்ள உணவுப் பண்டங்கள் உற்பத்தி செய்யும்படி வற்புறுத்துவதற்காக அவ்வாறு செய்யத் தவறியவர்களுக்கு அதிகபட்ச வரி விகிதத்தை விதித்து, ஊக்குவிக்கலாம்.

7. புதிதாக நீர்ப்பாசன வசதி அளிக்கப்பட்ட பிரதேசங்களில் மின்சாரம், பம்பு முதலியவை உபயோகிப்போருக்குச் சுமார் மூன்று வருஷ காலத்துக்குத் தண்ணீர்த் தீர்வை முற்றிலும் வஜா செய்தோ, அல்லது சர்க்காருக்கு நஷ்டமானாலும் குறைந்த அளவுக்குத் தீர்வை விதித்தோ, விவசாயிகளுக்கு ஊக்கமும் உற்சாகமும் உண்டாகும்படி செய்ய வேண்டும்.

8. மக்கள் கவனத்தில் நமது உணவுப் பிரச்னை முன்னணியில் எப்போதும் இருக்கும்படி செய்ய வேண்டும். அதற்காக ஆறு மாதத்துக்கொரு தரமாவது சேமிப்புக் களஞ்சியத்தில் கையிருப்பு நிலை, உற்பத்திகள், நாட்டில் உணவுப் பழக்கத்தில் கண்ட மாறுதல்கள், இவை போன்ற இதர விவரங்களைப் பற்றிய தகவல்கள் வெளியிட வேண்டியது அவசியம்.

9. இயந்திரங்களைக் கொண்டும் ரஸாயன உர வகைகளைக் கொண்டும் விவசாயம் நடத்தப்படுவதைச் சர்க்கார் ஆதரிக்க வேண்டும். அதற்காகச் சலுகைகள், மானியங்கள், கடன் வசதிகள் அரசாங்கங்கள் தங்கள் மேற்பார்வையிலேயே வழங்க வேண்டும்.

10. நாட்டின் ஜனப் பெருக்கத்தைக் கண்டிப்பாகக் கட்டுப்படுத்த முயற்சி செய்ய வேண்டும். இதற்காக, அரசாங்கத்தார் தங்கள் கொள்கையைப் பகிரங்கமாகவும் திட்டவட்டமாகவும் மக்களுக்குத் தெரியப்படுத்துவது பலனளிக்கும். பெரிய குடும்பங்களுக்கு அதிகப்படி வரிவிகிதங்கள் மூலமும் இதர வகைகள் மூலமாகவும் குடும்பக் கட்டுப்பாட்டை வற்புறுத்துவதையும் சர்க்கார் யோசிக்கலாம்.

10. விரிவான பண்ணை விவசாய முறையை ஊக்குவிக்கவும், தொழிலதிபர்களையும் உயர் தரத்திலுள்ள மக்களையும் பண்ணை விவசாயத்தில் ஈடுபடும்படி உற்சாகமூட்டவும் தீவிரமான பிரசாரம் செய்யப்பட வேண்டும். அத்துடன் ஒரு கொள்கையும் அறிவிக்க வேண்டும். குறைந்தது மூன்று அல்லது ஐந்து வருஷங்களுக்கு அக்கொள்கை மாறாமல் இருக்க வேண்டும்.

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

47

நற்குணங்களாகிய செல்வத்தை நிறையப் பெற்றவனை வடமொழியார் குணாட்யன் என்பார்கள். ஆட்யம் என்றால் செல்வம். குணச் செல்வம் பெற்றவன் குணாட்யன். குணமே பெரும் செல்வம். அதைப் பெற்ற குணாட்யனுக்கு நாம் எல்லாம் பெரிதாக மதிக்கும் செல்வமும் வந்து சேர்ந்து விட்டால் அவன் ஒரு மருந்து மரம் ஆகிவிடுகிறான்.

மருந்தாகித் தப்பா
மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண்
படின்

பரந்த அன்பு நிறைந்த மனம் பெற்றவன் பெருந்தகையான். எங்கே எங்கேயோ போய்ச் சேரும் செல்வம் பெருந்தகையானிடம் வந்து சேர்ந்து விட்டால் அவன் சமூகத்தின் தொல்லைகளை யெல்லாம் சொஸ்தப்படுத்தும் ஔஷதியாகி விடுகிறான். மருந்துக்குரிய மரமாகிறான்.

தப்பா மரம்—வியாதியைச் சொஸ்தப் படுத்துவதில் தவறாத மரம்—தப்பாத மருந்தைத் தரும் மரம்.

* * *

ஊருணி தண்ணீரை வீண் போகாமல் சேர்த்து வேண்டியபோது வேண்டியவர்களுக்குத் தரும். அதைப் போல் ஒப்புரவறிந்த அறிஞன் செல்வம் ஈட்டிப் பாதுகாத்து அதைக் கொண்டு பிறருக்கு உதவுகிறான். உள்ளூர் மரம் தன் பழத்தைத் தாராளமாக ஊருக்குத் தருகிறது. அதைப் போல் ஒப்புரவறிந்த செல்வன் தன் செல்வத்தைப் பின்வாங்காமல் வேண்டியவர்களுக்குத் தருவான். லோபியாக இருக்க மாட்டான். பழுத்த பழம் தானாக மரத்தினின்று விழுவது போல் அவனுடைய செல்வம் அவனைப் பற்றிக் கொண்டு நிற்காமல் எளிதில் அவனிடமிருந்து நழுவிப் பிரியும். மருந்துக்கு உதவும் மரம் தன் இலை, பழம், பட்டை, வேர் அனைத்தும் மக்களின் வியாதிகளைத் தீர்த்துத் தர உதவும். பெருந்தகையானுடைய செல்வம் அவ்வாறே மக்களின் தொல்லைகளைத் தீர்க்க உதவும். மரம் பூமியிலிருந்து ரஸங்களை எப்படி உறிஞ்சி யெடுத்து உருவாக்கித் தருகிறதோ, அவ்வாறு பெருந்தகையாளன் தன்முயற்சியால் செல்வம் உண்டாக்கிச் சமூகத்துக்குக் கஷ்டம் நீங்கும் வகையில் அதை விநியோகம் செய்கிறான். நாமாக மண்ணிலிருந்து மருந்து எடுக்க இயலாது. ஔஷதிச் செடிக்குத்தான் அதைச் செய்ய முடியும். அப்படியே பெருந்தகையானுடைய முயற்சியால் பிறருக்கு உதவக் கூடிய செல்வம் உண்டாகிறது.

# செங்கோலும் ஜனநாயகமும்

**• க. சந்தானம் •**

## 7. அறிவு

மனிதனின் தனிச்சிறப்பு அறிவு. ஆகலின் அறிவை வளர்ப்பது சமூகத் தலைவர்களின் முக்கிய பணியாக எங்கும் எப்பொழுதும் கருதப்பட்டு வருகிறது. முன் காலங்களில் இது உலகத்தைத் துறந்த ஞானிகளாலும், வறுமையை வாழ்க்கைத் துணையாகக் கொண்ட பெரியோர்களாலும், மத குருக்களாலுமே செய்யப்பட்டு வந்தது. அவ்வப்போது சாதாரண மன்னர் அறிவைப் பெருக்குவதில் அக்கறை கொண்டு இருந்திருக்கின்றனர். ஆனால் தம்மைப் புகழும் கவிகளையும் யுத்த கலைக்குச் சாதகமாக உள்ள அறிஞர்களையும், ராஜ தந்திரிகளையுமே பெரும்பாலும் அரசர்கள் ஆதரித்து வந்திருக்கின்றனர். விவசாயம், குடிசைத்தொழில் முதலிய துறைகளில் பரம்பரையான அனுபவமே திறமைக்கு ஆதாரமாக இருந்தது. மத ஒழுக்கங்கள் மூலமும், சமூக ஆசாரங்கள் வாயிலாகவும் தர்மம் காக்கப்பட்டு வந்தது.

இப்பொழுது இதெல்லாம் அடியோடு மாறி வருகிறது. மனிதத் தொழிலுக்கும் சக்திக்கும் அறிவு ஆதாரமாகி விட்டது. அது கல்விக்கூடங்கள் மூலமாகவே போதிக்கப்படுகிறது. கட்டாயமாக 15, 16 வயது வரையில் பையன்களும், பெண்களும் பள்ளிக்கூடத்தில் படிப்பது முற்போக்கான நாடுகளில் அத்தியாவசியமாகி விட்டது. அதன் பிறகும் பல வருஷங்கள் உயர்தரக் கலாசாலைகளில் தேர்ச்சி பெற்றாலொழிய, சமூகத்தின் சிறந்த சேவைகளைச் செய்ய முடியாது.

கல்விக்குப் போதிய ஏற்பாடுகள் செய்வது இக்காலத்திய செங்கோலுக்கு முக்கிய அறிகுறியாகும். ஒரு நபரின் அறிவு வளர்ச்சி அவருடன் பிறந்த சக்திகளையும், அவைகளை வளர்க்கவோ தடுக்கவோகூடிய சூழ்நிலையையும் பொருத்திருக்கிறது. எல்லாக் குழந்தைகளுக்கும் தமது சக்திகள் பூரணமாக வளரக்கூடிய வசதிகள் இருக்க வேண்டும், எல்லாவிதத் தடைகளும் நீக்கப்பட வேண்டும் என்பது இக்காலத்திய சமூக லட்சியம். அது பூரணமாக நிறைவேற வேண்டுமானால் ஒவ்வோர் குழந்தைக்கும் ஒரு தனி ஆசிரியர் இருக்க வேண்டும். அவரும் பெரிய மனத்தத்துவ ஞானியாக இருக்க வேண்டும். இது சாத்தியமில்லை. ஆகலால் கூடிய வரையில் குறைந்த மாணவர்களை ஒரு வகுப்பில் வைத்துக் கொண்டு, ஒவ்வோர் குழந்தையின் சக்திகளையும், மனப் போக்குகளையும் ஓரளவு கவனித்து வந்து, அபூர்வமான சக்தி பெற்ற குழந்தைகளைத் தனி முறையில் கவனித்துக் கொள்ள வேண்டுமென்று அறிஞர்கள் கூறுகின்றனர். பாரதத்தில் முற்காலத்தில் நடைபெற்ற ஆசிரமங்களில் இம்முறை அனுசரிக்கப்பட்டது. ஆனால் அக்காலத்தில் வெகு சிலரே கல்வியை நாடினர்.

இக்காலத்திய கல்விக்கு அதிகம் செலவாகிறது. நியூயார்க் நகரசபையால் மட்டும் வருஷம் 200 கோடி ரூபாய் செலவிடப்படுகிறது. விஞ்ஞானத்தின் விபாகங்கள் கணக்கின்றிப் பெருகி வருகின்றன. அவ்வாறே பொருளாதாரம், அரசியல் முதலிய சமூக சாஸ்திரங்களும் விரிவடைந்து வருகின்றன.

பொதுவுடைமைக்குக் கேந்திர தேசமான சோவியத் ருஷியாவில் கல்விக்குப் பிரதம ஸ்தானம் அளிக்கப்பட்டு அமெரிக்காவைக் காட்டிலும் அதன் வருமானத்தில் அதிக பாகம் செலவழிக்கப்படுகிறது. 40 வருஷங்களில் அதற்கு முன்னிருந்த 100 வருஷப் பிற்போக்கைத் தீர்த்து விட்டு எல்லாவிதக் கல்வியிலும் முன்னணியில் நிற்கிறது.

பாரதம் போன்ற சில ஆசிய நாடுகளில் கல்வியில்லாத மக்களைக் கொண்டு ஜனநாயகம் அமைக்கப்பட்டிருக்கிறது. இது தவறு. எல்லோருக்கும் கட்டாயமாகக் கல்வி போதித்து, எழுதப் படிக்க நன்கு தேர்ந்த பிறகே ஜனநாயகம் சரிவர நடைபெறும் என்று பிரிட்டிஷ் அதிகாரிகள் கூறி வந்தனர். ஆனால் அவர்களின் ஆட்சியில் அவ்விதக் கல்வி என்றும் நடைபெறாத வழியில் அரசாங்கம் சென்று கொண்டிருந்தது. பிரிட்டிஷ் ஆட்சிக்குப் பின் விரைவில் கல்வியையும் பொருளாதாரத்தையும் பெருக்கக்கூடிய ஓர் எதேச்சாதிகாரம் தேவை என்று பலர் கருதினர். பொதுவுடைமைக் கட்சியின் வாதமும் இதுவே. எதேச்சாதிகாரம் ஓர் கொடிய ஆயுதம். அதற்கு இடம் கொடுத்து விட்டால் நாட்டை அழித்து விடும். ஜனங்கள் கல்வியில் எவ்வளவு உயர்ந்தாலும் அதனால் சுகமடைய மாட்டார்கள் என்பதை ஹிட்லர், முஸோலினி முதலிய எதேச்சாதிகாரிகள் நன்கு நிரூபித்து விட்டனர்.

ஆயினும், தற்குறிகளான வாக்காளர்களைக் கொண்டு நீண்டகாலம் நடத்துவது பேரபாயமாகும். வறுமையிலும், சமூக வாழ்விலும் தாழ்ந்த வகுப்பாரே இந்நிலையிலிருப்பதால் அவர்களுடைய உணர்ச்சிகளை எழுப்பி ஜனநாயகத்தின் மீது வெறுப்பை வளர்ப்பதற்கு இது சாதகமாகும். கட்டாயக் கல்வியை உடனே நிறுவ வேண்டியது அவசியம்.

கட்டாய ஆரம்பக் கல்வியைப் போலவே, தொழிற் பயிற்சியும் மிகவும் அத்தியாவசியமானது. இக்காலத்தில் விவசாயத்தைக் கூடப் பழைய முறையில் நடத்தினால் போதாது. இயந்திர சக்தியாலும், மின்சாரத்தாலும் நடைபெறும் எத்தொழிலையும் நன்கு தேர்ச்சியடையாதவர்களைக் கொண்டு நடத்துவது அபாயமாகும்.

விஞ்ஞான, இயந்திர ஆராய்ச்சியின் முக்கியத்வத்தை மிகைப்படுத்திக் கூற முடியாது. அதன் மூலமாக, மனிதன் வருங்காலத்தில் சந்திரன் முதலிய கிரகங்களுக்குச் செல்லவும், ஒரு வேளை குடியேறி வசிக்கவும் கூடும் என்று நம்பப்படுகிறது. ஆராய்ச்சியில் பின்னணியில் நிற்கும் நாடுகள் அதில் முற்போக்

குள்ள தேசங்களுக்குப் பல விதங்களில் கப்பம் கட்ட வேண்டி யிருக்கிறது.

கல்வி வளர, பத்திரிகைகளும் புத்தகங்களும் கணக்கின்றிப் பெருகி வருகின்றன. பள்ளிக்கூடங்களிலும், கலாசாலைகளிலும் கற்பதைவிடப் பன்மடங்கு இவற்றின் மூலம் சமூகத்தின் அறிவு வளருகிறது. கட்டாயமாகக் கல்வி போதிக்கப்பட்டு, கிராமந்தோறும் நல்ல புத்தகசாலை ஏற்பட்டு விட்டால் மக்களின் அறிவு வளர்ச்சிக்கு நல்ல அஸ்திவாரம் ஏற்படும்.

பொது அறிவை வளர்ப்பதற்கு ரேடியோவும் மிகவும் சக்தி வாய்ந்த சாதனமாகும். அது சர்க்காரின் ஏகபோக சாதனமாக இருக்க வேண்டுமா, அல்லது பத்திரிகைகளைப் போல் முதலாளிகள் ஸ்தாபனங்களால் நடத்தப்பட வேண்டுமா என்கிற பிரச்னை வாதிக்கப்படுகிறது. முதலாளிகள் கையில் அதை விட்டுவிட்டால் அது முக்கியமாக விளம்பரத்துக்கும், கட்சிச் சண்டைகளுக்கும், ஆசாபாசங்களையும், ஆத்திர உணர்ச்சிகளையும் கிளப்பிவிடுவதற்கும் பயன்படுத்தப்படும் என்ற காரணத்தைக் கொண்டே பிரிட்டன், பாரதம் போன்ற ஜனநாயகங்களில் அது சர்க்கார் வசம் வைக்கப்பட்டிருக்கிறது. இதற்கு மாறாக, அமெரிக்கா, இலங்கை முதலிய நாடுகளில் அது முதலாளிகளால் மிகவும் கவர்ச்சிகரமாக நடத்தப்படுகிறது. இந்தியாவில் ரேடியோ வைத்திருப்பவர்கள் இலங்கை வானொலியை அதிகம் ருசிப்பதைப் பாரதச் செய்தி மந்திரியே ஒப்புக் கொண்டிருக்கிறார்.

எவ்விதம் அதிகமாகச் சாப்பிடுவது தேக ஆரோக்கியத்துக்குக் கெடுதலோ, அவ்விதமே ஒன்றுக்கொன்று சம்பந்தமில்லாத பலவித அறிவுகள் மிகுந்து மனத்துக்குத் தீங்குகளை விளைவிக்கின்றன. உலகெங்கும் மூளைக் கோளாறுகளும், தற்கொலைகளும் அதிகரித்து வருகின்றன. மன அமைதி அபூர்வமாகி வருகிறது. ஒருபுறம் அறிவும், அதன் சாதனங்களும் பெருகியும், மறுபுறம் மன அமைதியும், நல்லொழுக்கமும் தர்மசிந்தனையும் வளரும் சமூகத்தை அமைப்பதே ஜனநாயகத்தின் லட்சியமாக இருக்க வேண்டும்.

## 8. ஆனந்தம்

இவ்வாழ்க்கை முழுதும் துக்கமயம் என்று புத்தர் போதித்தார். பாபமயம் என்பது கிறிஸ்தவ மதம். இரண்டுக்கும் போதிய காரணங்கள் உள. நிச்சயமான மரணம், நோய், ஆபத்து முதலிய கஷ்டங்களுக்கு நடுவில் மனிதன் எப்படிச் சுகப்படமுடியும் என்று கேட்பதில் தவறு இல்லை. காமம், கோபம், அசூயை, ஆசை முதலிய பிசாசுகளுக்கு எவனும் தப்ப முடியாது. பாபமயமான இந்தச் சூழ்நிலையிலிருந்து தப்புவதற்கு உலகைத் துறந்து பரம்பொருளைச் சரணடைவதைத் தவிர வேறு வழியில்லை என்று ஞானிகளும், மத குருக்களும் உபதேசித்ததில் ஆச்சரியமில்லை. ஆனால் ஜலம் கீழ் நோக்கி ஓடுவது போல, ஜீவர்கள் சுகத்தைத் தேடிச் செல்லுவதைச் சாதாரணமாகத் தடுக்க முடியாது. மனித அறிவும், அதனால் ஏற்பட்ட சக்திகளும் சுகத்தின் தன்மையை மிகவும் விசாலப்படுத்தி, அதன் சாதனங்களையும் அளவின்றிப் பெருக்கியிருக்கின்றன. விதம் விதமாகச் சமைக்கப்பட்ட உணவுகள், விசித்திரமான உடைகள், அழகான வீடுகள், கற்பனைக் களஞ்சியங்களான சாகித்யங்கள், மனத்தைக் கவரும் சங்கீதம், நாட்டியம் போன்ற கலைகள் ஆயிரக் கணக்கான வருஷங்களாக மனித சமூகத்தின் ஆனந்தத்தை வளர்த்திருக்கின்றன. இந்தக் காலத்தில் சினிமா, டெலிவிஷன், ரேடியோ, பொருட் காட்சிகள், மிருகக் காட்சிகள் பெருகி வருகின்றன. உலகில் பல பாகங்களிலுள்ள இயற்கை வனப்புகளைக் கண்டும், இன்பமான சீதோஷ்ணமுள்ள இடங்களில் வசித்தும் வாழ்க்கை இன்பத்தை அனுபவிக்கப் பிரயாண வசதிகள் கணக்கின்றி அதிகரித்து வருகின்றன. ஆனந்த வேட்டையே தமது தொழிலாகக் கொண்டுளர் பலர். ஆனந்தங்களை அனுபவிப்பதற்கு மனித வாழ்வும் நீண்டு வருகிறது. பண்டைக் காலத்திலும் சிலர் நூறு வருஷங்களுக்கு மேல் வாழ்ந்திருக்கின்றனர். இப்பொழுதும் அதற்கு மேலுள்ளவர்களின் சங்கியை மிகவும் குறைவு. ஆனால் முன் காலங்களில் சிசுக்கள், பாலர், யுவர், தாய்மார்கள் முதலியோர் ஏராளமாக அகால மரணத்துக்கு ஆளானார்கள். இப்பொழுது செல்வம் பெருகிய நாடுகளில் சராசரி வயது 70 ஆக இருக்கிறது. 80 லிருந்து 90 வரையில் ஜீவித்திருப்பவர்களின் எண்ணிக்கை அதிகரித்து வருகிறது. பிறப்புகளைக் குறைத்து, பிறப்பதற்கு முன்னிருந்து ஆயுட்காலம் வரை நல்ல உணவு, வைத்திய வசதிகள் அளித்து, பொதுவான சுகாதார ஏற்பாடுகளால் தொத்துநோய்களைத் தடுத்ததின் பலன் இது.

சமூகத்தில் அனைவரும் ஆனந்த வாழ்வு பெறுவதற்குச் செல்வப் பெருக்கும், அதன் நியாயமான பிரிவினையும் தேவை. தற்சமயம் எல்லா நாடுகளிலும் பெரும்பாலோர் பிறர் விருந்துண்ணுவதைப் பார்த்துப் பொறாமையால் பரிதவிக்கும் நிலையிலேயே இருக்கின்றனர். எதேச்சாதிகாரத்தில் எதேச்சாதிகாரிகளும், அவர்களைச் சேர்ந்தவர்களும் மற்றவர்களுக்குக் கிடைக்காத போகங்களை அனுபவிப்பது சகஜமாகக் கருதப்படும். ஜனநாயகத்திலோ அதிகார வர்க்கமும், முதலாளிக் கூட்டமும் அவ்விதம் அனுபவிப்பதைக் கண்டு மக்கள் ஆத்திரப்படாமல் இருக்க மாட்டார்கள்.

எவ்வளவு நேர்மையாகச் செல்வத்தைப் பங்கீடு செய்தாலும், தற்சமயம் அனுபவிக்கக்கூடிய சுகங்களில் ஒரு சிறிதளவே பலருக்குக் கிடைக்கக்கூடும். தவிர, ஓயாமல் சினிமா பார்ப்பவனுக்கு அது ஒரு பழக்கமாக இருக்கின்றதே ஒழிய, அதன் ஆனந்தம் படிப்படியாகக் குறைந்து வருகிறது. அப்படியே எல்லா சுகங்களும். ஆதலால் ஓயாமல் புதிய காட்சிகளையும், உணர்ச்சிகளையும் தேடித் திரிந்தால் அதிருப்தியும், கிலேசமுமே அதிகரிக்கின்றன.

மேலும் உடலுக்கும், மனத்துக்கும், சமூகத்துக்கும் தீங்கு விளைவிக்கும் பழக்கங்கள் பெருகி வருகின்றன. மதுபானம், விபசாரம், சூதாட்டம் முதலிய தீமைகள் நீண்டகாலமாக இருந்த போதிலும் அவற்றின் பரப்பும்,




திருவாசகமணி திரு கே. எம். பாலசுப்பிரமணியம் ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த ஸ்ரீ மாணிக்க வாசகரின் 'திருவாசகம்' வெளியீட்டு விழா சென்ற மாதக் கடைசியில் சென்னை ஸ்ரீ சென்னகேசவப் பெருமாள் கோவிலில் சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்குக் கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி தலைமை வகித்தார். போலீஸ் மந்திரி ஸ்ரீ எம். பக்தவத்சலம் விழாவைத் துவக்கி வைத்தார். திருவாளர்கள் எம். பதஞ்சலி சாஸ்திரி, அ. உத்தண்டராம பிள்ளை, கே. எஸ். ராமசாமி சாஸ்திரி, கி. வா. ஜகந்நாதன் முதலியோர் திரு கே. எம். பாலசுப்பிரமணியம் அவர்களின் முயற்சியைப் பாராட்டினர். படத்தில் திருவாசகமணி பேசிக் கொண்டிருப்பதைக் காணலாம்.

---

சொரூபங்களும், சாதனங்களும் இக்காலத்தில் மிதமின்றி அதிகரித்து, பள்ளி மாணவர்களிடம் கூடப் பரவி வருகின்றன.

இவற்றைத் தடுக்க வேண்டுமா, எவ்வளவு தூரம் தடுப்பது சாத்தியம் என்பது ஜனநாயகத்தில் கடினப் பிரச்னையாக இருக்கிறது. தடுக்காவிட்டால் வருங்காலத்தில் சமூகம் சக்தி குன்றி விடும். தடுத்தால் இப்பழக்கத்தில் ஈடுபட்டவர்களின் எதிர்ப்பைச் சமாளிப்பதோடு, தடைச் சட்டங்களை மீறுவதற்கு அவர்கள் செய்யும் சூழ்ச்சிகளைத் தடுப்பதற்கும் தண்டிப்பதற்கும் ஜனநாயகத்துக்கு ஒவ்வாத கடுமையான முறைகளைக் கையாள வேண்டும். அமெரிக்க ஐக்கிய நாட்டில் மதுவிலக்கைச் சட்டத்தால் தடுத்துச் சில வருஷங்களுக்குப் பின் அச் சட்டத்தை அமுல் செய்ய முடியாமல் ரத்து செய்ய வேண்டியிருந்தது. பாரதத்திலும் மதுவிலக்குச் சட்டத்தை மீறித் திருட்டுச் சாராயமும் இதர மதுபானங்களும் பலவிடங்களில் தயார் செய்யப்பட்டு விற்பனையாகி வருகின்றன. சட்டத்தின்மூலம் மனிதனுடைய ஒழுக்கங்களைச் சீர்ப்படுத்த முடியாது என்று பலர் வாதிக்கின்றனர். பண்டைக் காலங்களில் ஞானிகளும் மத குருக்களும் இப் பணியைச் செய்து வந்தனர். ஆனால் இக் காலங்களில் சமூகக் கட்டுப்பாடுகளின் மூலம் எந்த நல்லொழுக்கத்தையும் அமுல் செய்ய முடியாது. சட்டமும் பிரசாரமுமே இதற்கு இப்போதைய சாதனங்கள். இவைகளை உபயோகித்து முதலில் பெரும்பாலோரின் ஆதரவைத் திரட்டிப் பின்னர் தீய ஒழுக்கங்களைப் பின்பற்றுவோரைச் சட்டத்தால் தடுக்க முயல வேண்டும்.

சாகித்தியம், விஞ்ஞானம், கலைகள், தேசாந்தர சஞ்சாரம் முதலியவற்றில் சமூகத்தின் பெரும்பாலோர் ஈடுபட்டால் நல்வழிகளில் ஆனந்தம் அதிகரிக்க முடியும். இதற்கு இரண்டு முறைகள் தேவை என்று தோன்றுகிறது. முதலாவது நல்ல கல்வி முறை. ஜனநெருக்கமுள்ள நகரங்களில் நூற்றுக்கணக்கிலும், ஆயிரக் கணக்கிலும் மாணவர்களை ஒரு பள்ளியிலோ, கலாசாலையிலோ திரட்டி வைத்துக் கல்வி போதிப்பதால் கல்வியும் சரியாகப் போதிக்கப்படுவதில்லை; ஒழுக்கமும் வளர்வதில்லை. மாணவர்களின் அட்டகாசங்களே சமூகத்தின் அமைதிக்கு அபாயங்களாகி விட்டன. சினிமா பார்ப்பதும், காதல் கதைகளைப் படிப்பதும், அரசியல் கட்சிகளில் சேர்ந்து ஆரவாரம் செய்வதும் மாணவர்களின் முக்கிய அலுவல்களாகி விட்டன. ஒரு பள்ளிக்கூடத்திலோ, கலாசாலையிலோ ஐந்நூறுக்கு மேல் மாணவர்கள் இருக்கலாகாதென்று கட்டுப்படுத்தி, அந்த ஸ்தாபனங்களை நகரங்களிலிருந்து 30, 40 மைல் தூரத்தில் அமைத்தாலொழிய, கல்வி முறையைச் சீர்திருத்த முடியாதென்றும் தோன்றுகிறது.

இரண்டாவதாக, தனிநபருக்கு மிதமிஞ்சிய வருமானம் கொடுக்கப்படாமல் வரிவிதி மூலம் சமூகத்தின் வருமானத்தைத் திரட்டி எல்லோரும் அனுபவித்து இன்புறும் வகைகளில் நூல்நிலையங்கள், உத்தியானவனங்கள், கலைக்கூடங்கள் முதலியவற்றைப் பெருக்குவது நலமாகும். தனக்குக் கிடைக்கும் வருமானத்தை வீணாக்குவதைத் தடுப்பது ஜனநாயகத்தில் சாத்தியமல்ல. அந்த வருமானம் மிதமாகவும், அதை நல்ல வழிகளில் செலவு செய்வது சுலபமாகவும் இருக்குமாறு ஏற்பாடுசெய்வதே ஜனநாயகத்துக்குத் தகுந்த முறைகளாகும்.

# கால்கேட் குளோரோபில்* ஈறுகளை பலப்படுத்துகிறது

## வைத்திய சோதனை நிரூபிக்கிறது!



*ஈறுகளைப் பலப்படுத்துகிறது!*

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை வழக்கமாகத் தேய்ப்பதால், குளோரோபில் மூலம் அது ஈறுகளைப்பலப்படுத்துகிறது.

*வாய்நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!*

வேறு சாதாரண பற்பசையை விட மிக மிகத்தீவிரமாக வாய்நாற்றத்தை கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட் ஒழிக்கிறது என்பது ருசுவான உண்மை.

*சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!*

கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால் பல் எனுமலை அரிக்கும் நாச அமிலங்களும், அவற்றை விளைவிக்கும் கிருமிகளும் குறைகின்றன!

**வேறு எந்த பற் பசையிலும் இதை விட அதிக <u>வீரிய</u> குளோரோபில் இல்லை!**




* நீரில் கரையும் குளோரோ-பிலின்ஸ் சேர்ந்தது.

**இதோ!** பெரிய எக்கானமி அளவில் கிடைக்கிறது

பாகவதமாகிய

# பக்தி வயல்

பௌராணிகர்

## 2. பீஷ்மரின் பாக்கியம்

**அசுவத்தாமாவின் கொடுமையும், திரௌபதியின் கருணையும், பீஷ்மரின் மறைவும்.**

சௌனகர் ஸூதரைக் கேட்டார். "உலகத்தில் ஒன்றிலுமே பற்று இல்லாத சுகர் இந்தப் பெரும் புராணத்தை எதற்காகப் பயின்றார்?"

ஸூதர் பதில் அளித்தார்: "தன்னிடமே தான் களிப்புறும் யோகிகள் கூட, ஹரியினிடம் காரணமற்றதும் பிரதிப் பிரயோசனம் எதிர்பாராததுமான பக்தியைச் செலுத்துகின்றனர். இப்பொழுது, கண்ணனுடைய கதைக்கு முகவுரையாக, ராஜரிஷியான பரீக்ஷித் பிறந்த வரலாற்றையும், பாண்டவர்கள் விண்ணுலகம் சென்றதையும் கூறுகிறேன்" என்றார்.

மகாபாரதப் போரில், பீமன் துரியோதனனைத் தன் கதையினால் புடைத்துத் துடை எலும்பை முறித்து விட்டான்.

இதைக் கண்டு பொறுக்காத அசுவத்தாமா, இரவில் உறங்குகின்ற திரௌபதி குமாரர்களின் தலையை வெட்டித் துரியோதனனிடம் கொண்டு வந்தான். துரியோதனன் உட்பட அனைவரும் இக்கொடுஞ் செயலை இகழ்ந்தார்கள். ஆறாத் துயரத்தினால் திரௌபதி கண்ணீர் சொரிந்தாள். இதைப் பார்த்த அர்ச்சுனன் "என்றைக்குமைந்தனைக் கொன்ற அசுவத்தாமாவின் தலையை அம்பால் அறுத்து உன்னிடம் கொண்டு வருவேனோ, அன்றுதான் உன் கண்ணீரைத் துடைத்தவனாவேன்" என்று துயர் ஆற்றி விட்டுக் கவசம் அணிந்து கொண்டு, வில்லும் கையுமாகக் குருமகனைத் தேடிக் கண்ணன் ஓட்டும் தேரில் ஏறிச் சென்றான்.

பாய்ந்து வரும் அர்ச்சுனனைத் தூரத்திலேயே பார்த்த அசுவத்தாமா உயிருக்குப் பயந்து தன் தேரில் ஏறிக் கொண்டு இயன்றவரை ஓடினான். களைத்த குதிரைகளைக் கண்ட அசுவத்தாமா, இனிமேல் வேறு வழியில்லை என்று கருதி, பிரும்மாஸ்திரத்தை தொடுத்தான். ஆனால் அவனுக்கு அந்த அஸ்திரத்தைவிடத் தெரியுமே அல்லாது வாங்கத் தெரியாது.

அஸ்திரமோ நெருப்பென நாலாபக்கமும் சூழ்ந்து கொண்டது. அர்ச்சுனன் தன் உயிருக்கு முடிவு வருகிறதென்று அஞ்சினான். கண்ணனை நோக்கித் துதித்தான். கண்ணன் - "இந்த பிரும்மாஸ்திரத்துக்கு நிகர் வேறொன்றும் இல்லை. மற்றொரு பிரும்மாஸ்திரத்தை விட்டு இதன் நெருப்பை அணைக்க வேண்டும்" என்று கூறினார். உடனே அர்ஜுனன் ஒரு பிரும்மாஸ்திரத்தைத் தொடுத்தான். ஒன்றோடொன்று மோதிக் கொண்ட இரண்டு



அஸ்திரங்களும் பிரளய காலத்துக் கதிரவனும் நெருப்பும் போல் பொங்கி வானையும் பூமியையும் சூழ்ந்து கொண்டன. உடனே அர்ச்சுனன் இரண்டு அஸ்திரங்களையும் மந்திரத்தால் இழுத்துக் கொண்டான்.

கண்களில் கோபம் கொதிக்க, அசுவத்தாமாவைக் கயிற்றால் கட்டி, யாகத்துப் பசுவென, தங்கள் பாசறைக்கு அர்ச்சுனன் இழுத்துச் சென்றான். அப்பொழுது கண்ணன் சினம் வந்தவர் போல் பாசாங்கு செய்து கொண்டு, "அர்ச்சுனா! குற்றமற்ற குழந்தைகளைக் கொன்ற இந்தக் கொடியவனைக் கொன்று விடு. தன்னுயிரைப் பிற உயிரால் காப்பவனைக் கொல்லுவது அவனுக்கே நலம்" என்றான். ஆனால் அர்ச்சுனனுக்கு குருமகனைக் கொல்ல மனம்வரவில்லை. கூடாரத்தை அடைந்ததும் அலங்கோலமாக இருக்கும் அசுவத்தாமாவைத் திரௌபதி பார்த்தாள். குருமகன் ஆயிற்றே என்று வணங்கினாள். அவள் மனத்தில் கருணை வளர்ந்தது. அர்ச்சுனனைப் பார்த்துத் திரௌபதி "உங்களுக்கு வில் வித்தை போதித்த குருவின் குமாரர் இவர். இவருடைய அன்னை உயிருடன் இருக்கிறாள். குருவின் குலம் உங்கள் கையால் அழிய வேண்டாம். குழந்தைகளைப் பறி கொடுத்த நான் அழுவதைப் போல் இவருடைய தாயும் அழ வேண்டாம்" என்று உரைத்தாள்.




கருணை மிகுந்ததும் கபடம் அற்றதுமான இந்தச் சொற்களைத் தருமன் மெச்சினான். பீமன் மட்டும், தனக்குப் பயன்படாத செயலைச் செய்த அசுவத்தாமாவைக் கொல்லத்தான் வேண்டும் என்றான். அப்பொழுது கண்ணன் ஒரு உபாயம் சொன்னான். அதை அறிந்து கொண்ட அர்ஜுனன் அசுவத்தாமாவின் தலைமயிரைக் கத்தியினால் வேழுக்கி வீழ்த்திக் களையற்ற அவனை வெளியே துரத்தி விட்டான்.

* * *

போர் முடிந்ததும் பாண்டவர்கள் ராஜ்யத்தை அடைந்து அறம் தவறாமல் அரசாண்டு வந்தனர். ஆனால் அசுவத்தாமா தான் அடைந்த அவமானத்தை மறக்கவில்லை. எப்படியும் பாண்டவ குலத்தையே அழித்து விட வேண்டும் என்ற வஞ்சம் அவனிடம் குடி கொண்டே இருந்தது. பாண்டவர்களை அரசாளச் செய்து விட்டுச் சில நாட்களுக்கெல்லாம் கண்ணன் துவாரகைக்குத் திரும்புவதற்குத் தயாராக இருந்தான். அச்சமயம் அபிமன்யுவின் மனைவியான உத்தரை ஓலமிட்டுக் கொண்டே ஓடி வந்தாள்.



"தேவ தேவ! நெருப்பில் காய்ச்சின இரும்பென ஒரு பாணம் எதிர்க்கிறது. என்னை வேண்டுமானால் அது கொன்று விடட்டும். ஆனால் என் வயிற்றில் இருக்கும் கருவானது அழியாதிருக்க அருள வேண்டும்" என்று கதறினாள்.

இதுவும் அசுவத்தாமாவின் செயல் என்று கண்ணன் அறிந்து கொண்டான். உடனே தன்னுடைய 'ஸுதர்சனம்' என்ற அஸ்திரத்தினால் அனைவரையும் காப்பாற்றினான். ஒவ்வொரு உயிருக்கும் உயிரான கண்ணன், உத்தரையின் உள் இருந்து தன்னுடைய பீஜாதியினால் எதிர் வரும் அஸ்திரத்தை அழித்தான். உத்தமியான குந்தி, இந்த விந்தை

யைக் கண்டு கண்ணனை வாய்விட்டுப் புகழத் தொடங்கினாள். பாகவத புராணத்தில் எத்தனையோ துதிகள் உண்டு. ஆனால் அவை அனைத்திலும் குந்தி செய்த துதி நிகரற்றது. யாவரும் அடிக்கடி படித்தும், சொல்லியும் பரம் பொருளைப் பெற வேண்டிய வழியாகும் அந்தத் துதி என்று சொல்லலாம்.

1 ஆதி புருஷனும், இந்த
இயற்கைக்கு அப்பால் இருப்பவனும்
உள்ளும் புறமும் நிறைந்து நிற்பவனும்,
புலன்களுக்குப் புலப் படாதவனும்,
மாயையால் மறைக்கப்பட்டவனும்
ஆகிய உன்னை வணங்குகிறேன்.

2 வசுதேவன் மைந்தனே!
தேவகியின் செல்வமே!
நந்தகோபன் குமரனே!
கண்ணா! கோவிந்தா!
உனக்கு நமஸ்காரம்.

3 நாபியில் விளங்கும்
தாமரை தரித்தவா!
தாமரை மாலை அணிந்தவா!
தாமரைக் கண்ணா!
தாமரைத்தாள் உடையாய்!
உனக்கு வணக்கம்.

ஸ்ரீ அருணகிரிநாத சுவாமிகளின் நான்காவது ஆண்டு திருவிழா ஆகஸ்டு 15ந் தேதி திருவண்ணாமலையில் பல்லாயிரக்கணக்கான அடியார்களால் கொண்டாடப்பட்டது. ஓமந்தூர் திரு இராமசாமிரெட்டியார் அவர்கள் சொற்பொழிவாற்றுவதையும் மேடையில் திருமுருக கிருபானந்தவாரியார் அவர்கள் அமர்ந்திருப்பதையும் படத்தில் காணலாம்.



4 சிறையுண்ட தேவகியின்
தாபத்தைத் தீர்த்தது போல்,
துயருண்ட எங்களையே
பலமுறையும் காத்தருளி,

5 நஞ்சும், நெருப்பும்,
புலியோரைப் புசிக்கும் பூதங்களும்,
தீமை செய்யும் கூட்டமும்,
கானகத்தில் கண்ணுற்ற
கொடுமையும்,
போர் வீரர்களின் அம்பும்,
துரோணன் மகன் கை நின்று
மேல் பாய்ந்த அஸ்திரமும்—
இவ்வளவும் எங்களைச்
சிறிதேனும் வருத்தாது
விலக்கினாய் ஹரியே!

6 ஆங்காங்கு எங்களுக்கு
எப்பொழுதும் தீமைகளைத்
தந்திடுவாய்,—
பிறவியென்ற பிணிநீக்கும்
உன் முகத்தை
இல்லையேல் காண்பதரிது!

7 பிறப்பிலும், படிப்பிலும்,
ஆண்டுவரும் தோரணையிலும்,
செல்வத்திலும் பெருமையுடன்
உன்பேரை ஏன் உரைப்பார்?—
நீ யன்றிச் செல்வமே
வேறொன்றும் இல்லாதோர்
கண்ணுக்குப் புலனாவாய்!

8 உன் உள்ளே ஆனந்தம்
அனுபவிப்பாய். சற்றேனும்
சாந்தத்தை விட்டகலாய்!
முக்தியென்னும் நன்னிலையை
அளிக்கவல்லாய்! உன்னை
மீண்டும், மீண்டும்
வணங்குகிறேன்.

9 மானிடனாய் மயக்குகின்ற உன்
மனத்தை யார் அறிவார்?—உனக்கு
அன்பனேது, அரியேது?
வேற்றுமையைத் தெண்ணுபவர்
மானிடரே!

10 பிறப்பில்லாப் பிறவியும்
காரணமில்லாக் காரியமும்
வீண் விளையாட்டே அல்லாமல்
வேறொன்றும் உனக்கில்லை.
தயிர்ப்பானை தானுடைத்துத்
தாய் சினத்துக் காளாகிக்
கயிற்றினால் கட்டுறுங்கால்
மைவழியக் கண்கலங்கி,
அளவிலா அச்சமுடன்
கீழ்நோக்கி நின்றநின்
விளையாட்டின் விந்தையைத்தான்
என்னவென்று நானுரைப்பேன்!
சினமே கண்டஞ்சும்
செல்வனுக்குப் பயம்என்ப
தொன்றுண்டோ?

என்று பலவாறு குந்தி கண்ணனைத் தோத்திரம் செய்தாள்.

இதைக் கேட்ட கண்ணன் மாயப் புன்சிரிப்புடன், "நீ கோரியபடியே உனக்கு என்னிடத்தில் அசையாத பக்தி இருக்கட்டும்" என்று அருள் பாலித்து விட்டு, மற்றுமுள்ள அரண்மனை மாதர்களிடமும் விடைபெற்றுக் கொண்டு துவாரகைக்குத் திரும்பினார். அந்தச் சமயத்தில் தர்மபுத்திரர் அவரைப் போக வேண்டாமென்று தடுத்தார். இனத்தாரையும் நண்பரையும் கொன்று விட்டுத் தான் அடைந்த அரச பதவியில் அவருக்குச் சிறிதும் அமைதி ஏற்படவில்லை. மனத்தில் துயரமே மேலிட்டது. "சேற்றைச் சேற்றினாலும், கள்ளைக் கள்ளினாலும் சுத்தம் செய்ய முடியுமா? அது போலவே போர்க்களத்தில் மாய்ந்த வீரரின் மனைவியர் துயரத்தைப் பின்னர் வேள்விகளைச் செய்து போக்க முடியாது" என்று, தாம் குடிகளுக்குச் செய்த கொடுமையை எண்ணி வருந்தித் தம் கடமையைத் தெரிந்துகொள்வதற்காக, குருக்ஷேத்திரத்தில் அம்புப் படுக்கையில் கிடக்கும் பீஷ்மரைக் காணச் சென்றார்.

கண்ணனும் தருமனுடைய தம்பிமார்களும் அவருடன் சென்றனர். போர்க்களத்தில் படுத்திருக்கும் பீஷ்மரை அடைந்து, அனைவரும் வணங்கினார்கள். அச்சமயம் முனிவர்களெல்லாம் அங்கு வந்து கூடினார்கள். அவர்களைப் பார்த்துப் பீஷ்மர் கூறினார்: "பாண்டவர்கள் சிறு வயதினராக இருந்தபொழுது தன் கணவனை இழந்த குந்தி, குழந்தைகளைக் காப்பாற்றுவதற்காக எத்தனையோ துயரங்களுக்கு ஆளாகவேண்டி வந்தது. இது காலத்தின் கொடுமையே! கண்ணபிரானை நண்பனாக அடைந்தவருக்கும் துயரம் வந்தது ஒரு விந்தை. கண்ணன் உள் எண்ணத்தை யாரறிவார்? மாமன் மகனென்றும் அண்டி நிற்கும் தோழனென்றும் நீதி காக்கும் கண்ணன் ஆதி புருஷனான நாராயணனே. அவனுக்குத் தன் பக்தர்களிடமிருக்கும் அன்பை என்னென்று சொல்வேன்! நான் உயிர் விடும் தறுவாயில் என் கண்முன் நேராகவே தோன்றியிருக்கிறான். செந்தாமரைக் கண்ணும், மலர்ந்த மலரெனச் சிரித்த முகமும், நாலு கைகளும் வாய்ந்த தேவதேவனான கண்ணபிரானே நான் இறக்கும்வரை நீ என்னெதிரில் இருக்க வேண்டும்."

அப்பொழுது தருமர் பீஷ்மரிடம் பல தர்மங்களைக் குறித்துக் கேள்விகள் கேட்டார். அவைகளையெல்லாம் பீஷ்மர் விவரமாக உபதேசித்தார். பிறகு வாக்கை ஒடுக்கிக்கொண்டு, மனத்தைக் கண்ணனிடமே செலுத்தி அவனைத் துதி செய்தார். "மூவுலகிலும் மேலானதும் காயாம்பூவெனக் கறுத்த வண்ணமும், காலைக் கதிரவனெனத் தரித்த பொன்னாடையும், போர்க்களத்தில் பரியின் பதத்தில் நின்று பரந்த புழுதியால் மாசுகண்ட மேனியும், என் அம்பினால் துளைக்கப்பட்டவனுமாய்த் தோற்றமளித்த கண்ணனின் பாதங்களில் என் மனம் களிப்புற வேண்டும். 'ஆயுதம் கைத்தொடேன்' என்ற தன் வாக்கைத் தள்ளி விட்டுக் 'கண்ணனை ஆயுதம் எடுக்கச் செய்வேன்' என்ற என்வாக்கை நிலைநிறுத்துவதற்கே தோள் நின்று வழுவின மேலாடையையும் பாராமல் என் எதிரே ஓடி வந்து என் சரத்தால் அடிபட்ட கண்ணனிடம் புகலடைந்தேன்" என்று பல விதத்தில் தாம் நேராகக் கண்டு அனுபவித்த கண்ணனைப்புகழ்ந்து கொண்டு பீஷ்மர் உயிர் துறந்தார்.

இவ்வாறு பீஷ்மர் கடவுளுடன்கலந்து விட்ட ஆச்சரியத்தைப் பார்த்த அனைவரும், மாலைப்பொழுதில் பறவைகளைப் போல் சத்தமின்றி வியந்து நின்றார்கள். பிறகு தருமர் பீஷ்மருக்குச் செய்ய வேண்டிய அந்திக் கடன்களை முடித்து விட்டு நாடு திரும்பினார். கண்ணனும் துவாரகைக்குச் சென்றார். **(தொடரும்)**



# துறவியின் காதல்

இடையாற்று மங்கலம் தீவில் வைகறையின் அழகிய சூழ்நிலையில் வசந்த மண்டபத்துப் பொழிலிலுள்ள மரங்கள் அசைந்தன. இலைகளிலும், பூக்களிலும், புல் நுனிகளிலும், முத்துப் போல் திரண்டிருந்த வெண்பனித் துளிகள் இளங் உதிர்ந்தன. பொழிலில் மலர்ந்திருந்த சண்பகம், கோங்கு, வேங்கை, மல்லிகை, முல்லை மலர்களின் நறுமணத்தைத் தென்றல் காற்று வாரிக் கொண்டு வந்தது.




வாவிகளிலும், சித்திரப் பூங் குளங்களிலும் செம்மையும், வெண்மையுமாக ஆம்பலும், தாமரையும் அலர்ந்து விரிந்து, வண்டுகளை விருந்துக்கு அழைத்தன. காதலனின் பருத்த தோளைத் தன் மெல்லிய கைகளால் அணைத்துத் தழுவும் காதலியைப் போல் கரையோரத்து மரங்களின் பருத்த அடிப் பகுதியைப் பறளியாற்று நீர்த் தரங்கங்கள் தழுவிச் சென்றன. இலைகளிலும், பூக்களிலும், குங்குமக் கரைசல் போல் பொங்கி வரும் செந்நீர்ப் பரப்பிலும், இளங் கதிரவனின் ஒளிக் கதிர்கள் மின்னின. வசந்த மண்டபத்து விமான மதிற்சுவர்களின் மாடங்களில் அடைந்து கிடந்த மணிப் புறாக்கள் கூட்டமாக வெளிப்பட்டுப் பறந்தன.

பொழுது புலர்ந்து விட்டது. ஒளியின் ஆட்சிக்கு உரியவன் கிழக்கே அடிவானத்தைக் கிழித்துக் கொண்டு கிளர்ந்தெழுந்து விட்டான். ஆனால் வசந்த மண்டபத்துப் பள்ளியறையின் பொற்கட்டிலில் இரத்தினக் கம்பள விரிப்புக்களின்மேல் படுத்துக் கொண்டிருந்த அந்த இளந் துறவி மட்டும் இன்னும் விழித்துக் கொள்ளவில்லை. ஐயோ, பாவம்! நன்றாக அயர்ந்து தூங்குகிறார் போலிருக்கிறது. பள்ளியறையின் அழகிய ஓவியப் பலகணி



வழியே ஒளிக்கதிர்கள் கட்டிலின் விளிம்பில் பட்டும் அவர் உறங்கிக் கொண்டு தான் இருக்கிறார்.

அப்போது அந்தப் பள்ளியறையின் கதவுகளைச் செந்தாமரை மலர் போன்ற அழகும், சண்பக அரும்பு போன்ற விரல்களும் பொருந்திய வளை குலுங்கும் கரம் ஒன்று மெல்லத் தட்டியது. செம்பொன் நிறம் பொருந்திய அந்தப் பெண் கரம் முன் கையில் வெண்மையான சங்கு வளையல்களையும் விரல்களில் பொன் மோதிரங்களையும் அணிந்திருந்தது.

வனப்பு நிறைந்த அந்த மலர்க் கரத்துக்கு உரியவள் யார்? அருகில் நெருங்கிப் பார்க்கலாம். ஆ! இடையாற்று மங்கலம் நம்பியின் புதல்வி குழல்மொழி அல்லவா இவள்? அடடா! இந்த விடியற்காலை நேரத்தில் இவ்வளவு அழகான பூம்பொழிலின் இடையே அலங்காரமான வசந்த மண்டபத்தின் கதவருகே தங்கப் பதுமை ஒன்று உயிர் பெற்று நிற்பதுபோல் அல்லவா நிற்கிறாள்? நீராடி அகிற் புகையூட்டிய கூந்தல் மேகக் காடுபோல் விளங்கியது. அந்த மேகக் காட்டில் மின்னும் பிறைமதி போல் கொடை மல்லிகைச் சரத்தை அள்ளி முடிந்திருந்தாள். சுழலும் கருவண்டுகள் போல் பிறழும் கெண்டை மீன்கள்போல் மலர்ந்த விழிகளும், சிரிக்கும் செம்பவழ இதழ்களுமாகக் கதவருகே தயங்கி நின்றாள் குழல்மொழி.

உறங்கிக் கொண்டிருப்பவரை எழுப்பி விட வேண்டுமென்றும் ஆசை; அதே சமயத்தில் கதவைப் பலமாகத் தட்டி ஓசை உண்டாக்குவதற்கும் பயமாக இருந்தது. தயங்கித் துவண்டு மின்னலோ எனச் சிறிய இடை நெளிய அவள் நின்ற தோற்றம் நெஞ்சத்தைச் சூறையாடுவதாக இருந்தது.

பலகணியின் வழியே எட்டிப் பார்த்து, "அடிகளே!" ...என்று கிளி மிழற்றுவது போல் மெல்லக் கூப்பிட்டாள் அவள். பள்ளியறைக் கட்டிலில் படுத்திருந்த இளந் துறவி புரண்டு படுத்தார்.

"அடிகளே! இன்னுமா உறக்கததை உதறி விட்டு எழுந்திருப்பதற்கு உங்களுக்கு மனம் வரவில்லை? பொழுது நன்றாகப் புலர்ந்து விட்டதே?"—இரண்டாவது முறையாகச் சற்று இரைந்தே கூப்பிட்டாள் குழல்மொழி. அதனோடு கதவிலும் தட்டவே, தட்டிய ஒலி, அதைச் செய்த மென்பூங்கைகளில் செறிந்திருந்த வளைகளின் ஒலி— எல்லாமாகச் சேர்ந்து துறவியின் உறக்கத்துக்குத் திருப்பள்ளி எழுச்சி பாடி விட்டன. துறவி கண் விழித்தார். மஞ்சத்தில் எழுந்து உட்கார்ந்தார். விரத நியமங்களாலும், தவத்தாலும் வருத்திய ஒரு துறவியின் உடம்பு போலவா தோன்றுகிறது அது? ஆகா! என்ன கட்டழகு? தீக்கொழுந்து போல் எவ்வளவு சிவப்பான நிறம்? வாலிபத்தின் அழகு முழுமையாய் நிறைந்து ஆசையைக் களையும் தவத் தொழிலில் இருந்து தம்மைக் காண்போர் கண்களின் ஆசையை வளர்த்து விடும் போலிருக்கிறதே. இந்தத் துறவியின் தோற்றம்!

"ஓ! நீயா? இந்த நேரத்துக்குள் எழுந்து நீராடிப் பூச்சூடி அலங்கரித்துக் கொண்டு என்னையும் எழுப்புவதற்கு வந்து விட்டாயே?" — எழுந்து உட்

கார்ந்த துறவி அவள் வெளியே நின்று கொண்டு தம்மை மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்திருப்பதைக் கண்டு இவ்வாறு கூறினார்.

"ஆமாம்! அதிகாலையில் எழுந்திருந்து தவக் கடன்களையும், நியம ஒழுக்கங்களையும் தவறாமல் செய்ய வேண்டிய துறவிகளே இப்போதெல்லாம் அதிக நேரம் தூங்கத் தொடங்கி விட்டார்கள். பெண்களாகிய நாங்களும் அந்த வழக்கத்தை விட்டு விட்டால் அதன் கதி என்ன ஆவது?" — அவள் வேண்டுமென்றே குறும்பாகப் பேசினாள். நீண்ட முகமும், கூரிய நாசியும், பிறரை மயக்கும் வசீகர விழிகளும் பொருந்திய அந்தத் துறவி ஒரிரு கணங்கள் அவளையே உற்றுப் பார்த்தார். அவருடைய இதழ்களில் மோகனப் புன்னகை அரும்பியிருந்தது. தோள்களையும் மார்பையும் சேர்த்துப் போர்த்திக் கொண்டிருந்த மெல்லிய காவித் துணி விலகி நழுவியது. அடியில் சிறுத்து மேலே பரந்து அகன்ற பொன் நிற மார்பு, உருண்டு, திரண்டு வளமான தோள்கள், அவற்றைக் குழல்மொழி கடைக் கண்களால் திருட்டுப் பார்வை பார்த்தாள். பிறகு அவள் தரையைப் பார்த்தாள். கன்னங்கள் சிவந்தன. "இவர் துறவியா? அல்லது நம் போன்ற பேதைப் பெண்களின் உள்ளங்களை யெல்லாம் கொள்ளை கொள்ளுவதற்கு மாரவேள் கொண்ட மாறு வேடமா?" என்று எண்ணி, எண்ணி உள்ளம் உருகினாள் குழல்மொழி.

"பெண்ணே! நீ என்மேல் வீணுகப் பழி சுமத்துகிருய்! மான்தோலில் படுத்துத் தூங்கும் துறவியைப் பஞ்சணைகளோடு கூடிய மஞ்சத்தில் உறங்க வைத்தால் அவன் அந்தப் புதிய சுகத்தில் தன்னையும் மறந்து நேரத்தையும் மறந்து விடுவதுதானே இயற்கை?"

"பரவாயில்லை! துறவியை நாங்கள் மன்னித்துவிடத் தயாராக இருக்கிறோம். எழுந்திருந்து வாருங்கள். நீராடுவதற்குப் போகலாம்."

"நீராடுவதற்கு வேறு எங்கே போக வேண்டும்? இதோ இங்கேயே வசந்த மண்டபத்துக்குப் பின்னுல் பறளியாற்றுப் படித்துறை இருக்கிறது. நீ சிரமப் படவேண்டாம். நான் இங்கேயே நீராடிக் கொள்கிறேன்."

"ஐயோ! கூடாது. அப்பா சொல்லி விட்டுப் போயிருக்கிறார். பறளியாற்றில் புதுத் தண்ணீர் பாய்கிறது. உடலுக்கு ஒத்துக் கொள்ளாது. நீங்கள் பேசாமல் என்னோடு எழுந்து வாருங்கள். நான் சொல்கிறபடி கேளுங்கள்.



நீங்கள் இங்கிருக்கிறவரை உங்களைக் கவனித்துக் கொள்ள வேண்டியது என் பொறுப்பு என்று சிறிது நேரத்துக்கு முன்புதான் அப்பா கூறிவிட்டுப் போனார்" என்றாள் குழல்மொழி.

"அப்படியானால் மகாமண்டலேசுவரர் இப்போது இங்கு இல்லையா?"

"இல்லை! மகாராணியாரைச் சந்திப்பதற்காகப் போயிருக்கிறார்."

"என்ன காரியமாகப் போயிருக்கிறாரோ? என்னிடம் சொல்லிக் கொள்ளாமலே போய் விட்டாரே!"

"எனக்கு அதெல்லாம் ஒன்றும் தெரியாது! அவர் திரும்பி வருகிறவரை தங்களுக்கு இங்கு ஒரு குறைவும் இல்லாமல் கவனித்துக் கொள்ள வேண்டுமென்று எனக்கு உத்தரவு."

துறவி ஒன்றும் மறுமொழி கூறாமல் அவளுடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்துப் புன்னகை புரிந்தார்.

கருகருவென்று அடர்ந்து வளர்ந்திருந்த இளந் தாடிக்கு மேல் சிவந்த உதடுகள் நெகிழ அவர் சிரித்த சிரிப்பு, குழல்மொழியைக் கிறங்க வைத்தது. துறவி நீராடப் புறப்படுவதற்காக எழுந்தார். இரண்டு கைகளையும் உயர்த்தி மேலே தூக்கிச் சோம்பல் முறித்தபோது மூங்கிலின் மேற்புறம் போல மின்னிய அந்த வளமான புஜங்களின் அழகு மகாமண்டலேசுவரருடைய புதல்வியின் உள்ளத்தைக் கொள்ளை கொண்டது.

"வாருங்கள், நேரமாகிறது. அடிகளை அரண்மனை நீராழி மண்டபத்தில் கொண்டு போய் விட்டு விட்டுப் பூசைக்காக நான் மலர் கொய்து வரவேண்டும்" என்று குழல்மொழி துறவியை அவசரப் படுத்தினாள்.

அவர் சிரித்துக் கொண்டே அவளைப் பின்பற்றி நடந்தார். குழல்மொழி அன்னம்போல் நடந்து சென்ற நடையின் அழகைக் கவியின் கண்களோடு பார்த்தார் துறவி. பாம்புப் படம்போல் விரிந்து சுருங்கிய அந்த நடையின் பின்புறக் காட்சி, மலர்சூடிய கரிகுழல், ஆமையின் புறவடிபோல் செவ்விய பாதங்கள் பெயர்த்து நடந்த பெருமை அத்தனை அழகையும் கண் குளிர நோக்கிக் கொண்டே அவளுக்குப் பின்னுல் மெல்லச் சென்றார் அவர்.

வழியில் ஒரு முறை பின்னுல் திரும்பி அவரைப் பார்த்தாள் அவள். அவர் முறுவல் புரிந்தார். காரணமில்லாமல் சும்மா பார்த்ததாக அவர் எண்ணிக் கொள்ளக் கூடாதே என்பதற்காக, "அடிகளே! தாங்கள் வழக்கமாக எந்த மலர்களைக் கொண்டு பூசையில் வழிபடுவீர்கள் என்று நான் அறிந்து கொள்ளலாமோ?" என்று கேட்டாள்.

"பயப்படாதே, பெண்ணே! இந்த இடையாற்றுமங்கலம் தீவில் இல்லாத எந்த மலரின் பெயரையாவது சொல்லி உன்னைத் திண்டாட வைத்துவிட மாட்டேன் நான்."

"ஏன்? அடிகள் கேட்டுப் பார்ப்பது தானே? இந்தத் தீவில் இல்லாத மலர்களே கிடையாதென்பது அடிகளுக்குத் தெரியாது போலும்!"

"இதோ, எனக்கு முன்னுல் நடந்து கொண்டிருக்கிறதே: இந்த மலரையும் சேர்த்துத்தானே சொல்கிறாய்!" துறவி குறும்புப் பார்வையோடு சுட்டு விரலை அவள் பக்கமாக நீட்டிக் காட்டினார். குழல்மொழி விருட்டென்று திரும்பினாள். இரு விழிகளும் மலர்ந்து விரிய அவருடைய முகத்தைப் பார்த்தாள்.

"நீ கோபித்துக் கொள்ளாதே. நான் தவறாக வேறொன்றும் கூறி விடவில்லை.

உன்னை ஒரு மலராக உருவகம் செய்து கூறினேன்'' என்றார் துறவி.

''ஓகோ! உருவகம், உவமை—இந்த மாதிரி கவிதைத் துறையில்கூட அடிகளுக்கு அனுபவம் அதிகமோ?''

''எல்லாம் சூழ்நிலையின் சிறப்பு. இடையாற்றுமங்கலம் நம்பியின் புதல்வி அருகே இருந்தால் கல்லும் மரமும் கூடச் சொல்லுமே கவி? என்னைப்போல் ஒரு சிறு வயதுத் துறவி ஏதோ ஒரு வார்த்தை சொல்லி விட்டதில் என்ன ஆச்சரியம் இருக்க முடியும்?''

''ஏதேது? அடிகளைப் பேச விட்டு விட்டால் விநயமாக—நகைச்சுவையாகப் பேசிக் கொண்டே இருப்பீர்கள் போல் தோன்றுகிறதே.''

''எல்லோரிடமும் அப்படிப் பேசிவிட முடியுமா? ஏதோ உன்னிடத்தில் பேச வேண்டுமென்று எனக்கு ஆசையாயிருந்தது; பேசினேன்.''

இப்படிக்கூறியதும் மறுபடியும் அவள் தன் அகன்று நீண்ட கருவிழிகளால் அவருடைய முகத்தை ஏறிட்டுப் பார்த்தாள். துறவியும் முன்போலவே அவளைப் பார்த்துப் புன்முறுவல் செய்தார்.

பேசிக் கொண்டே இருவரும் அரண்மனைக்குள் நீராழி மண்டபத்தின் கரையருகே வந்து நின்றனர். துறவி நீராடுவதற்குத் தயாரானார். ''நீராடித் தயாராக இருங்கள். நான் நந்தவனத்தில் போய்ப் பூசைக்கு வேண்டிய மலர்களைக் கொய்து கொண்டு வருகிறேன்'' என்று புறப்பட்டாள் குழல்மொழி.

அவள் நந்தவனத்து வாசலில் நுழைய இருந்த போது ஆற்றின் கரையிலுள்ள படகுத் துறைப் பக்கமிருந்து படகோட்டி அம்பலவன் வேளான் வந்து கொண்டிருந்தான். அவன் அவளை நோக்கி வருவது போல் தெரிந்தது. அவசரமும் பரபரப்பும் அவன் வருகையில் தெரிந்தன.

''என்னைத் தேடித்தான் வருகிறாயா?'' என்று அவள் கேட்டாள்.

''ஆமாம் அம்மா. போகும் போது உங்களிடம் தெரிவிக்கச் சொல்லி மகாமண்டலேசுவரர் இரகசியமாக ஒரு செய்தி கூறிவிட்டுச் சென்றிருக்கிறார். அதைச் சொல்லுவதற்காகத்தான் இவ்வளவு அவசரமாக வந்தேன்'' என்று கூறிக் கொண்டே அவளை நெருங்கினான் படகோட்டி அம்பலவன் வேளான்.

## அத்தியாயம் 22
# கோட்டையில் நடந்த கூட்டம்

நாராயணன் சேந்தன் கேட்ட கேள்வியைச் செவியுற்றதும் தளபதி வல்லாளதேவன் திகைத்துப் போனான்.

''என்ன கேட்டாய்?'' — மீண்டும் சந்தேகத்தோடு வினவினான் தளபதி.

''ஒன்றுமில்லை! நேற்று இரவோடு இரவாக யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் நீங்களாகவே படகைச் செலுத்திக் கொண்டு அவ்வளவு அவசரம் அவசரமாய் ஓடி வந்தீர்களே! வந்த காரியத்தைச் செய்தாயிற்றோ, இல்லையோ என்றுதான் கேட்டேன்.''

தளபதி சேந்தனைச் சந்தேகத்தோடு பார்த்தான். அந்தக் குட்டையன் தன்னை வெற்றி கொண்டு விட்டது போல் எண்ணிச் சிரித்த சிரிப்பு தளபதி வல்லாளதேவனின் உள்ளத்தில் எரிச்சலை உண்டாக்கியது.

''எனக்கு அங்கே உறக்கம் வரவில்லை. படகுத் துறைக்கு வந்து பார்த்தேன். படகு தயாராக இருந்தது. எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டேன். அவ்வளவுதான்; நான் அங்கிருந்து புறப்பட்டதற்கு வேறு எந்த முக்கியமோ, அவசரமோ, இல்லை'' என்றான் தளபதி.

நாராயணன்சேந்தன் இதைக் கேட்டு நமட்டுச் சிரிப்பு சிரித்தான்.

''தளபதி! கொல்லர் தெருவிலேயே ஊசி விற்க நினைக்கிறீர்கள் நீங்கள். ஆபத்துதவிப் படைகளைக் கோட்டைக்கு அனுப்ப வேண்டுமென்பதற்காகவே நீங்கள் இங்கு வந்ததும் எனக்குத் தெரியும். இப்போது அனுப்பி விட்டுத்தான் இங்கு நிற்கிறீர்கள் என்பதும் எனக்குத் தெரியும்.''

தளபதி ஆத்திரத்தோடு சேந்தனை உறுத்துப் பார்த்தான். நாஞ்சில் நாட்டு வேளாளப் பெருமக்கள் விதை நெல்லைச் சேர்த்து வைக்கும் நெல்லுக் குதிர் போன்ற உருவத்தையுடைய சேந்தனைக் கோபம் தீர உதைத்து விடவேண்டும் போல் கை துறுதுறுத்தது தளபதிக்கு. 'இடையாற்று மங்கலம் நம்பியைப் போன்ற ஓர் மாபெரும் இராஜதந்திரிக்கு ஒற்றனை வேலை செய்ய இவன் முற்றிலும் தகுதியானவன்தான். அவருடைய திறமையான அரசியல் நிர்வாகத்தின் வெற்றியில் சரிபாதி இந்த ஒற்றனுக்கு உரியது' என்று தன் மனத்தில் எண்ணி வியந்து கொண்டான்.

''அவன் அந்த அதிகாலையில் தன்னைத் தேடிக் கொண்டு அங்கே எதற்காக வந்தான்? தான் அங்கிருப்பதை அவன் எப்படித் தெரிந்து கொண்டான்? ஆபத்துதவிப் படைகளை அனுப்புவதற்காகத் தான் அங்கே வந்திருக்கும் நோக்கத்தை அவன் எப்படிப் புள்ளி பிசகாமல் அனுமானிக்க முடிந்தது?' என்று பல விதமாக எண்ணி மனம் குழம்பினான் தளபதி வல்லாளதேவன்.

''தென் திசைப் பெரும் படையின் மகாசேனாதிபதியும், இளமைப் பருவத்திலேயே பல போர்களில் வெற்றி வாகை சூடியவரும், சூழ்ச்சித்திறன் மிக்கவருமாகிய தங்களையும் கூற்றத் தலைவர் கூட்டத்துக்கு அழைத்து வரச் சொல்லி மகாமண்டலேசுவரர் அடியேனுக்குக் கட்டளையிட்டிருக்கிறார். அதை நிறைவேற்றவே இங்கு வந்தேன்.''



நாராயணன் சேந்தன் இதைக் கூறிய போது அவன் சாதாரணமான விநயத்தோடுதான் அப்படிப் பேசுகிறானா; அல்லது தன்னைக் குத்தலாகக் கேலி செய்கிறானா? என்று தளபதிக்குச் சந்தேகமாக இருந்தது. அந்தச் சந்தேகத்தை மனத்துக்குள் அடக்கிக் கொண்டு, ''சேந்தா! நீ என்னை அழைத்துக் கொண்டு போக வந்திருப்பதும், அதற்காக மகாமண்டலேசுவரர் உன்னை என்னிடம் அனுப்பியதும் வேடிக்கையாக அல்லவா இருக்கிறது? கூப்பிட்டாலும், கூப்பிடாவிட்டாலும் வழக்கமாகக் கூட்டத்துக்கு வர வேண்டியவன் தானே நான்?'' என்று சிரித்துக் கொண்டே கேட்டான்.

''அப்படி இல்லை! நீங்கள் நேற்றிரவு திடீரென்று அங்கிருந்து யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் புறப்பட்டு விட்டதால் கூட்டத்துக்கு வருவீர்களோ, வரமாட்டீர்களோ என்று அவருக்குச் சந்தேகம்!''

''சில நாட்களாக மகாமண்டலேசுவரருடைய சந்தேகத்துக்கு யாரும், எதுவும், தப்ப முடிவதில்லை போலிருக்கிறது!'' வேண்டுமென்றே சேந்தனின் வாயைக் கிண்டுவதற்காகத்தான் அவன் இவ்வாறு கூறினான். ஆனால் தளபதியின் பேச்சை விழிப்போடு கூர்ந்து கவனித்துக் கொண்டிருந்த சேந்தன் சுடச்சுடப் பதில் சொன்னான்.

''ஆமாம்! ஆமாம்! இப்போதெல்லாம் தென் பாண்டி நாட்டு அரசாட்சியைத் தங்கள் பலத்தினால் மட்டுமே காப்பதாக எண்ணிக் கொண்டு மகாமண்டலேசுவரர் மேலேயே சிலர் சந்தேகப்படுகிறார்களாமே!''

சேந்தன் தன்னைத் தான் குத்திக் காட்டுகிறான் என்று தளபதிக்குப் புரிந்து விட்டது. ஆனாலும் அதைப் புரிந்து கொள்ளாதது போல் வேண்டுமென்றே அவன் சிரித்து மழுப்பினான்.

அதன் பின் அவர்கள் இருவரும் அதிகம் பேசிக் கொள்ளவில்லை. தளபதி வல்லாளதேவன் நீராடிக் காலைக் கடன்களை முடித்துக் கொண்டு வருகிறவரை சேந்தன் காத்திருக்க வேண்டியதாயிற்று. இருவரும் கூற்றத் தலைவர் கூட்டத்துக்காக அரண்மனைக்குப் புறப்பட்டபோது பொழுது நன்றாகப் புலர்ந்து வெய்யில் பரவி விட்டது. படைப்பள்ளியிலிருந்து சிறிது தொலைவு சென்றதும் நேரே புறத்தாய நாட்டு அரண்மனைக்குச் செல்லும் வழியை விட்டு விட்டுச் சுற்றி வளைத்துத் திருநந்திக் கரை வழியே அரண்மனை செல்லும் சாலையில் குதிரையைத் திருப்பினான் சேந்தன். தளபதி மட்டும் தன் குதிரையை அந்தச் சாலையில் நடத்தாமல் கடிவாளத்தைச் சுண்டி இழுத்து நிறுத்தினான். தளபதி பின்தங்கியதைப் பார்த்துச் சேந்தனும் குதிரையின் வேகத்தைக் குறைத்துக் கொண்டு திரும்பி, ''என்ன தளபதி? ஏன் நின்று விட்டீர்கள்? நேரமாகவில்லையா?'' என்று கேட்டான்.

''நீ போகிற பாதையாகப் போனால் கூட்டமெல்லாம் முடிந்தபின்பு தான் அரண்மனைக்குப் போய்ச் சேரலாம். இதோ அரண்மனைக்கு நேர்பாதை இருக்கும்போது ஏன் திருநந்திக் கரையைச் சுற்றிக் கொண்டு போக வேண்டுமென்கிறாய்?'' என்று தளபதி வல்லாளதேவன் சற்றே சினத்தோடு நாராயணன் சேந்தனை வினவினான்.

''பறளியாற்றில் உடைப்பெடுத்து வெள்ளம் அந்தச் சாலையில் பெரும் பகு

திலை அழித்து விட்டதே! அது உங்களுக்குத் தெரியாதா? காலையில் மகாமண்டலேசுவரர் கூடத் திருநந்திக் கரை வழியாகச் சுற்றித்தான் அரண்மனைக்குப் போயிருக்கிறார்.''

''ஓஹோ! அதுவா செய்தி? அப்படியானால் சரிதான்! திருநந்திக் கரை வழியே போகலாம். விடு குதிரையை.'' —தளபதியின் குதிரையும் திருநந்திக் கரைச் சாலையில் திரும்பியது.

• • •

தளபதி வல்லாளதேவனையும், இடையாற்று மங்கலம் நம்பியின் ஒற்றனை நாராயணன் சேந்தனையும் இப்படியே திருநந்திக் கரை போகும் நெடுஞ்சாலையில் செல்லவிட்டு நாம் புறத்தாய நாட்டு அரண்மனைக்குச் சென்று அங்கு நடக்கும் முக்கிய நிகழ்ச்சிகளைச் சிறிது கவனிப்போம்.

வேறு வேறு பகுதிகளிலிருந்து வந்திருந்த கூற்றத் தலைவர்கள் அரண்மனை மந்திராலோசனை மண்டபத்தில் கூடியிருந்தார்கள். கூட்டத்துக்கு முக்கியமான இருவர் யாரோ அவர்கள் மட்டும் இன்னும் வந்து சேரவில்லை. மகாமண்டலேசுவரர் இடையாற்று மங்கலத்திலிருந்தே இன்னும் வரவில்லை. அவர் வந்ததும் தமக்குச் சொல்லியனுப்பினால் தாம் உடனே புறப்பட்டு வந்து விடுவதாக மகாராணி வானவன்மாதேவி அந்தப்புரத்திலிருந்து சொல்லியனுப்பியிருந்தார். தனிமையாக மண்டபத்தில் அமர்ந்திருந்த கூற்றத் தலைவர்கள் தங்கள் மனம் போனபோக்கில் பேசித் தென்பாண்டி நாட்டு அரசியல் நிலைமை பற்றி விவாதிக்கத் தொடங்கினார்கள். அப்போது அங்கே கூடியிருந்த கூற்றத் தலைவர்களைத் தவிர வேறுயாருக்கும் தெரியக் கூடாத இரகசியங்களைக் கூட அவர்கள் பேசினார்கள். அப்போது அந்த இடத்தில் எதைப் பேசலாம்; எதைப் பேசக் கூடாது என்ற கட்டுப்பாடு இன்றி அவர்கள் தாராளமாகப் பேசியதற்குக் காரணம் தனிமைதான். தங்களைவிடப் பெரியவர்கள், தங்களைக் கட்டுப்படுத்தக் கூடியவர்கள், அப்போது அங்கு யாரும் இல்லை என்ற துணிவுதான். அவர்கள் எல்லோரும் நன்றாகத் தமிழ் நூல்களைக் கற்றுத் தன்னடக்கமும், பண்பும் வாய்க்கப் பெற்றவர்கள்தாம். அளவுக்கு அதிகமான உணர்ச்சி வயப்படுதல் — இவற்றால் விளையும் கேடுகளைத் திருக்குறளில் படித்திருந்தார்கள்.

**நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்**
**உயிர்க்கிறுதி யாகிவிடும்**

என்றெல்லாம் படித்திருந்தால் மட்டும் போதுமா? மந்திராலோசனை மண்டபத்தின் அரங்கத்தைச் சுற்றிக் கட்டியிருந்த பட்டுத் திரைச் சீலைக்குப் பின்னால் மறைந்து நின்று செவிப்புலனின் உணர்வைக் கூர்மையாக்கிக் கொண்டு ஒன்று விடாமல் ஒட்டுக் கேட்டுக் கொண்டிருக்கும் ஒரு மனித உருவத்தைப் பார்த்திருந்தால் அவர்கள் அப்படிப் பேசியிருக்க மாட்டார்கள்.

''இது இந்தத் தென்பாண்டி நாட்டுக்கு ஒரு பொல்லாத சோதனைக் காலம். தேசத்தின் பெரிய பெரிய அரசியல் பொறுப்புக்கள் தாய்இழந்த பிள்ளைகளைப் போல் ஆகிவிட்டன. எவனோ ஊர் பேர் தெரியாத ஒற்றன் மகாராணியாரை வேல் எறிந்து கொல்லத் துணிந்து விட்டான் என்றால் நம்



முடைய வீரத்துக்கு எவ்வளவு பெரிய அவமானம்?'' என்றார் தோவாளைக் கூற்றத்து நன்கணிநாதர்.

''மகாமண்டலேசுவரர் இடையாற்று மங்கலம் தீவை விட்டு அந்தப்புறம், இந்தப்புறம் அசையாமல் நாட்டு நிலையைப் பற்றிக் கவலையே இன்றி உட்கார்ந்திருக்கிறார். தென் திசைப் படைகளும், படைத் தலைவர்களும் வேளை தவறாமல் உடல் கொழுக்கத் தின்று விட்டுப் பொழுது போகாமல், படைப் பள்ளியில் தாயமும், சதுரங்கமும் விளையாடிக் கொண்டிருக்கிறார்களாமே? இப்படி இருந்தால் நாடு எப்படி உருப்படும்?'' என்று ஆத்திரத்தோடு சொல் மாரி பொழிந்தார் பாகோட்டுக் கூற்றத்துப் பரிமேலுவந்த பெருமாள்.

''அது சரி, ஐயா! தளபதி என்று ஒருவர் மகாசேனாதிபதிப் பட்டம்

கட்டிக் கொண்டு உட்கார்ந்திருக்கிறாரே! அவருக்குக் கண் அவிந்து போயிற்றா? அரச குடும்பத்தாருக்குப் பயங்கரமான ஆபத்துக்கள் ஏற்படுகிற சூழ்நிலையை அறிந்தும் ஆபத்துதவிப் படைகளை அனுப்பாமல் இருக்கலாமா? இப்படிப்பட்ட சமயங்களில்கூட உதவி செய்ய முடியாமல் அவர்கள் எதற்காகத்தான் இருக்கிறார்கள்?'' என்று பொன்மனைக் கூற்றத்துக் கழற்கால் மாறனார் தம்முடைய மனக் கொதிப்பு புலப்படும்படி பேசினார்.

''காணாமற்போன குமார சக்கரவர்த்தியைத் தேடுவதற்காக இதுவரை மகாமண்டலேசுவரரோ, தளபதியோ ஏதாவது முயற்சி செய்திருக்கிறார்களா? பொறுப்புள்ளவர்களே இப்படி இருந்தால் நாமெல்லாம் என்ன செய்ய முடியும்? இளவரசர் இராசசிம்ம பாண்டியர் கடல் கடந்து ஈழ நாட்டில் மறைந்து வசிப்பதாகச் சொல்லிக் கொள்கிறார்கள். இன்னும் சிலர் இளவரசர் பகைவர்களுக்காகப் பயந்து தென்பாண்டி நாட்டு எல்லைக்குள்ளேயே மறைந்து வசிக்கிறார் என்றார்கள். எது உண்மையென்று நமக்குத் தெரியவில்லை! இன்றையக் கூட்டத்தில் இதைப் பற்றியெல்லாம் விரிவாகப் பேசி ஒரு முடிவுக்கு வரவேண்டும்!'' — என்று தம்முடைய கருத்தைத் தெளிவாகவும், நிதானமாகவும் ஆனால் அழுத்தமாகவும் எடுத்துக் கூறினார் அருவிக்கரைக் கூற்றத்து அழகிய நம்பியார்.

''இந்தக் குழப்பமான சூழ்நிலைகளால் மகாராணி மனம் நொந்து விரக்தியடைந்து போயிருப்பதாகப் பேசிக் கொள்கிறார்கள். மகாராணி வானவன்மாதேவி இந்த நாட்டில் கன்னியா குமரித் தெய்வத்துக்கு அடுத்தபடியாக மரியாதைக்கும், வழிபாட்டுக்கும் உரியவர்கள். அவர் மனம் கலங்குமாறு செய்வது நம்முடைய பெருந்தன்மைக்கே இழுக்கு'' என்று உணர்ச்சி நிறைந்த உருக்கமான குரலில் மீண்டும் அழுத்திக் கூறினார் முதலில் பேச்சைத் தொடங்கிய குன்கணிநாதர்.

''தாம் அமர பதவி அடைந்த பின்னர் இப்படியெல்லாம் தம்முடைய நாட்டுக்கும், புதல்வனுக்கும், பட்டத்தரசி வானவன்மா தேவியார்க்கும் துன்பங்களும், தொல்லைகளும் ஏற்படுமென்று பராந்தக பாண்டியச் சக்கரவர்த்தி கனவிலாவது எண்ணியிருப்பாரா? அவர் இருந்தால்தான் இப்படிப் பட்ட நிலைகள் ஒன்றும் ஏற்பட்டிருக்கவே முடியாதே?'' என்று மிகுந்த ஏக்கத்தோடு கூறிப் பெருமூச்சு விட்டார் மற்றொரு கூற்றத் தலைவர்.

அவர்கள் இப்படி ஒருவரோடொருவர் பேசிக் கொண்டிருந்தபோது மந்திராலோசனை மண்டபத்து வாசலில் யாரோ பலர் பேசிக் கொண்டே உள்ளே வரும் ஒலி கேட்டது. ஒரு சேவகன் முன்னால் வேகமாக ஓடி வந்து, ''மகாமண்டலேசுவரரும், மகாராணியும் வந்து கொண்டிருக்கிறார்கள்'' என்று கூற்றத் தலைவர்களுக்கு முன் தகவல் கொடுத்தான். மூலைக்கொருவராகத் தங்களுக்குத் தோன்றியபடி இருக்கைகளில் உட்கார்ந்து உரையாடிக் கொண்டிருந்தவர்கள் மரியாதையாக எழுந்து நின்றனர். தங்களை விட அதிகாரமும், மதிப்பும், பெருமையும் உள்ளவர்களை எதிர்பார்த்துச் சாதாரணமான மனிதர்கள் காத்திருக்கும் போது ஏற்படும் ஒரு வகை அமைதி அங்கே நிலவியது. வேலேந்திய வீரர்களும் மெய்க்காப்பாளர்களும் முன்னால் வந்து அடக்க ஒடுக்கமாக ஒதுங்கி நின்று கொண்டனர்.

மகாராணி வானவன்மாதேவியாரும், இடையாற்று மங்கலம் நம்பியும் மண்டபத்துக்குள் நுழைந்தனர். அவர்களுக்குப் பின்னால் அதங்கோட்டாசிரியர் பிரானும், பவழக்கனிவாயரும் வந்தனர். மகாராணியோடு ஆசிரியர் மகள் விலாசினியும், தளபதியின் தங்கை பகவதியும் உடன் வந்திருந்தனர். மண்டபத்தில் இருந்த கூற்றத் தலைவர்கள் எல்லோரையும் வணங்கி எதிர்கொண்டு வரவேற்றனர்.

''தளபதி வல்லாளதேவன் எங்கே? இன்றையக் கூட்டத்தில் அவன் கலந்து கொள்வது அவசியமாயிற்றே? இன்னும் வரவில்லையோ?'' என்று அங்கிருந்தவர்களிடம் கேட்டார் இடையாற்று மங்கலம் நம்பி. ''வரவில்லை'' என்று அவர்களிடமிருந்து பதில் கிடைத்தது. மண்டபத்தின் நான்கு புறமும் கண்களைச் செலுத்திச் சிறிது நேரம் கூர்ந்து பார்த்துக் கொண்டிருந்தார் மகாமண்டலேசுவரர்.

''இதென்ன? இந்த மண்டபத்தில் ஏற்கெனவே காற்று குறைந்து புழுக்கமாக இருக்கிறது. இந்தப் பட்டுத் திரைகள் எதற்கு? இவற்றை அகற்றி விடுங்கள்'' என்று அங்கு நின்றிருந்த மெய்க்காப்பாளர்களை நோக்கித் திடீரென்று ஒரு கட்டளை பிறப்பித்தார் அவர். அப்போது திரைக்குப் பின்னால் இருந்து யாரோ அவசரமாக நடந்து செல்லும் ஒலி கேட்டது. (தொடரும்)

அவனுக்கு
ஜான்ஸன்ஸ்
பேபி பவுடரின்
சுகத்தை
அளியுங்கள்




இலவச புத்தகம்: ... பராமரிப்பு புத்தகத்தின் இலவசப் பிரதிக்கு 25 நயா பைசா ஸ்டாம்பு வைத்து எழுதுங்கள். பெற்றோர்களுக்கு உபயோகமான அநேக விஷயங்கள் இதில் அடங்கியுள்ளன. இங்கிலீஷ் அல்லது ஹிந்தி பிரதிகள் எது வேண்டுமென்று குறிப்பிடவும்!

ஜான்ஸன் அண்ட் ஜான்ஸன் ஆப்
இந்தியா பிரைவேட் லிமிடெட்
பி. ஓ. பாக்ஸ் 1970
டிபார்ட்மெண்ட் 64-]
பம்பாய்

# போர்ஹான்ஸ்

## டூத்பேஸ்ட்டை

## எண்ணற்ற ஜனங்கள் ஏன்

## விரும்புகிறார்கள் என்பதற்கான சில

# முக்கிய காரணங்கள்

**1 ஈறுகளின் ஆரோக்கியம்:** ரத்தம் கசியும் ஈறுகள், வீங்கிய ஈறுகள், புண்ணானதும், கூசும் ஈறுகள் இவைகளுக்கு போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு இலேசாகத் தேய்க்கவேண்டும். அவைகள் உடனேயே கெட்டியான ஆரோக்கிய நிலைக்கு வந்துவிடும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்டில் மட்டுமே, டாக்டர் ஆர். ஜே. போர்ஹான்ஸ் பக்குவப் படுத்திய பல் நோய்களிலிருந்து விசேஷ பாதுகாப்பு அளிக்கும் துவர்ப்புப் பொருள்கள் சேர்ந்துள்ளன. இதனால்தான் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், ஈறுகள் சம்பந்தமான கொடிய நோய்களிலிருந்து சிறந்த பாதுகாப்பு அளிக்கும்.

**2 ஆரோக்கியமான பற்கள்:** விசேஷ துவர்ப்புப் பொருள் கொண்ட போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் கொண்டு அன்றாடம் பல் விளக்கினால், சொத்தைக்குக் காரணமான கிருமிகள் முற்றிலும் அழிந்துவிடும். இந்தியாவில் சமீபத்தில் நடைபெற்ற போர்ஹான்ஸ் போட்டியில், முற்றிலும் திடமாயும், ஆரோக்கியமாயும் பற்களுள்ள 15-லிருந்து 93-வயதிற்குட்பட்டவர்களும் கலந்து கொண்டனர். தங்களுடைய பற்களின் சிறப்பிற்கு, தாங்கள் அன்றாடம் தவறாமல் போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உபயோகித்து வருவதே காரணமென அவர்கள் யாவரும் கூறினர்.

**3 வாய்க்கு நறுமணம்:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட், வாய் நாற்றத்தை அகற்றி, உங்கள் வாயை முற்றிலும் சுத்தமாக வைக்கும். வாய் நாற்றத்தை அகற்ற உங்கள் நாக்கும், மேல் வாயும்கூட சுத்தமாக இருக்கவேண்டுமென்பதை ஞாபகத்தில் வையுங்கள். உங்கள் நாக்கின்மீது சிறிது போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட்டை வைத்து, ஒரு டூத்பிரஷ் அல்லது விரலினால் மிருதுவாய்க் குழப்பவும். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் உணவுத் துணுக்குகள் மற்றும் கிருமிகளை விரைவில் அகற்றும்.

**4 ஒளிவீசும் புன்னகை:** போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் பற்களின் எனாமல் சிதைவடையாமல், பற்களை அவைகளின் இயற்கை நிலையில் வைப்பது போல், சுத்திகரிக்கும் குணம்வாய்ந்த வழுவழுப்பான டூத்பேஸ்ட்டாகும். பற்களின் ஆரோக்கியத்தைத் தவறாமல் பேணிவருவதன்மூலம் உங்கள் புன்னகையை ஒளி வீசச் செய்யலாம். போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் தவறாமல் உபயோகியுங்கள்




ஒரு பல் வைத்தியரால் தயாரிக்கப்பட்டது

GEOFFREY MANNERS & CO.
PRIVATE LTD

H-11




## 13 நீரிழிவு (4)

இது வரையில் தெரிவித்த மருந்துகளை எத்தனையோ சந்தர்ப்பங்களில் எத்தனையோ தரம் எழுதியாயிற்று. இனி, இதுவரையில் தெரிவிக்காததும், சித்தர்கள் தமிழ் நூல்களின் மூலம் தெரிவிப்பதுமான சில புதிய மருந்துகளையும் தெரிவிக்கிறேன்.

10. அகத்தியின் வேர் மேலுள்ள பட்டையைக் கஷாயம் வைத்தோ- அல்லது ஊறல் நீராகவோ உட்கொள்ளவும். மதுமேகத்தில் மிகவும் சிறந்தது.

மது மேகத்தின் முற்றிய நிலையில் கை கால் பாதம்—ஏன்? உடம்பெல்லாமே ஒரு வகை எரிச்சல் ஏற்படுவதுண்டு. சிறுநீர் பிரியும்போதும் தாங்க முடியாத எரிச்சல் ஏற்படுவதுண்டு. இது ஏற்கெனவே தெரிவித்த விஷயம் தான். இந்நிலையில் மேற்சொன்ன கஷாயம் சிறந்த பலனையளிக்கும். மதுமேகத்தில் ஏற்படும் பெருந்தாகம் [நீர் வேட்கை] தீரும். ஐம்பொறிகளில் ஏற்படும் எரிச்சலும் நீங்கும் என்று அகத்திய முனிவர் குணபாடத்தில் தெரிவிக்கிறார். 'மேகம்' என்ற சொல்லே பாஷையில் இல்லாமல் போகும் என்று தெரிவிக்கிறார். எத்தனை ஆயிரம் பேருக்குக் கொடுத்துப் பலனைக் கண்ட பிறகு இத்தெளிவு கிடைத்திருக்க வேண்டும்! 'ஸ்பெஸிபிக்' வேண்டுமென விரும்புவோரும் ஆராய்ச்சியில் ஆர்வமுள்ளவரும் கவனிக்கவும்.

"நல்லகத்தி வேரதனை நாடுங்கால்
மேகமெனும்
சொல்லகலும்; தாகமறும்....மெல்லமெல்ல
மெய்யெரிவு கையெரிவு மேகமந்திலும்
னெரிவும்
ஐயெரிவும் போமென்றறி."

11 அத்திப்பழத்தைமணப்பாகு[பானகம்—ஸிரப்] செய்து உட்கொண்டு வர மலக்கட்டு, "சிறு நீரிலுள்ள மது, நாவறட்சி, உடல் வெதும்பல்" நீங்கும்.

12. அத்திப்பாலும்உட்கொள்ளலாம்;

13 சிவப்பு அம்மான் பச்சரிசி என்னும் பூண்டின் ஸமூலத்தைக் கஷாயம் வைத்துக் குடிக்க "......வன்மேக மொழியும்......" என்று அகத்தியர் தெரிவிக்கிறார்.

14. ஆலம்பட்டையைப் பஞ்சுபோல் இடித்து 10 மடங்கு தண்ணீரில் ஓரிரவு ஊறவைத்து, மறு நாள் கசக்கிப் பிழிந்தெடுத்த (ஊறல்) நீரை உட்கொண்டு வர, நீரிழிவு நீங்கும்.

15. ஆவாரை என்ற கொத்துச் செடியைத் தமிழ் நாட்டில் யாரும் அறிவர். இதன் இலை, பூ, பட்டை யாவுமே மதுமேகத்தில் நல்ல பலனை யளிப்பவை என்று தேரையர் குணபாடத்தில் தெரிவிக்கிறார். நீரிழிவில் இந்த ஆவாரை எவ்வளவு பலன் தரத்தக்கதென்று சொல்லி முடியாது. அவ்வளவு பலனளிக்கவல்லதென்று உறுதியாகத் தெரிவிப்பதைப் பாருங்கள்.

"சொல்லுதற்குமட்டோ நோயைப் போக்கி
எல்லா மொழிந்த மேனிகற்றும்......
ஆவாரை பூமியது" என்கிறார்.

ஆவாரைப் பஞ்சாங்கத்தின் குணத்தை இவ்விதமே அகத்தியர் தெரிவிக்கிறார்.

16. ஆவாரையின் சமூலத்தைக் கஷாயம் வைத்துப் பாலும் சிறு கற்கண்டும் கூட்டிக் (காப்பிக்குப் பதிலாக)க் காலை மாலை பருகிவருவது நல்லது.

ஐயோ! மதுமேகத்தில் இனிப்பே கூடாது என்பார்களே! நீங்களானால் சிறு கற்கண்டைச் சேர்க்கச் சொல்கிறீர்களே என்கிறீர்களா? இந்த அபிப்பிராயம் விஞ்ஞானிகளிடையே மாறி வருகிறது. மெய்ஞானத்தின் உதவியால் விஞ்ஞானத்தின் உண்மைகளையறிந்த நம் முன்னோர் உடற் பருமனை அதிகரிக்கும் இயல்பு பெற்ற இனிப்புகளைத் தவிர்க்க வேணுமென்றனர். தேன் இதற்கு விதிவிலக்கானது. ஆகவே இங்கு தெரிவித்த காப்பி நன்றாய் ஆறின பிறகு இனிப்புக்காகத் தேனைச் சேர்த்துக் குடிக்கலாமே!

17 மேற்சொன்ன கஷாயத்துடன் தேவையான அளவு வால்மிளகு ஏலக் காய்களையும் கூட்டிப் பனங்கற்கண்டு சேர்த்துக் காய்ச்சிய மணப்பாகைப் (பானகம் அல்லது ஸிரப்பை) பால் அல்லது தண்ணீரில் உச்சிக் கரண்டியளவு கூட்டிக் கலக்கிக் குடித்து வருவதும் நல்லது.

18 ஆவாரம் வேர்ப் பட்டையைக் கஷாயஞ் செய்து, அதற்குச் சம பாகம் வெள்ளாட்டின் பால் கூட்டி, பாலின் அளவு எண்ணெய் கூட்டிக் காய்ச்சி வடிகட்டிய தைலத்தைத் தலைக்குத் தேய்த்துக் குளித்து வந்தால் மதுமேகத்தில் ஏற்படும் வெப்பம் தணியும். [மேலே 10 கீழ்சொல்லிய விளக்கத்தையும்காண்க.]

19 ஆவாரந் துளிர், கொன்றை, நாவல், கடலழிஞ்சில், முத்தக்காசு, கோஷ்டம், மருதம்பட்டை இவற்றைச் சமன் எடையில் கூட்டிக் கஷாயம்வைத்துக் குடிக்கலாம்.

20 ஆவாரந் துளிர், கல்மதம் (கோமூத்ர சிலாஜது) கொன்றை வேர் இம் மூன்றையும் புளித்த மோரில் அரைத்துக் கலக்கிக் குடிக்க நீரிழிவு நோய் நீங்கும்.

21 ஆவாரம் வேர், இலை, தண்டு பூ. ஆகியவை மும்மூன்று பங்கு; சீந்திலின் வேர் இலை கொடி பூ ஆகியவை இரண்டிரண்டு பங்கு; அவ் விதமே தில்லைச்செடியின் வேர் முதலியவை ஒவ்வொரு பங்கு என எடுத்து இளவறுப்பாக வறுத்து ஒன்றிரண்டாகப் பொடித்துக் கொள்ளவும். இந்தக் கூட்டுப் பொடியில் ஒரு பிடிக்கு ஒரு படி நீரிட்டு நாலிலொரு பாகமாகக்காய்ச்சி அதில்பாலும் கூட்டிக் காலை மாலை குடித்துவர நீரிழிவு போகும். — சர்க்கரை குறையும்.

22 கடல்தேங்காய் என்று ஒரு கடைச் சரக்கு. இதை முறைப்படி கஷாயமாகக் காய்ச்சி வேளைக்கு ½ ஆழாக்கு வீதம் காலை மாலை குடித்து வர "நீரிழிவின் சர்க்கரையைக் குறைக்கும்."

23 கருங்காலியின் வேரைக் கஷாயமிட்டுக் குடித்து வந்தாலும் இதே பலன் கிடைக்கும்.

24 கடுக்காயின் கஷாயம் அதிமூத்திரத்தைக் குறைக்கும்.

25 கலியாண முருக்கு என்னும் மரத்தின் வேரைக் கஷாயம் வைத்து அதில் வஸந்த குஸுமாகரத்தைக் கொடுத்து வர நீரிழிவு குணமாகும்.

26 கோவைக் கிழங்கின் சாற்றை ஒன்று முதல் மூன்று உச்சிக்கரண்டி வரையில் குடித்து வர நீரிழிவு நீங்கும். "......இனிப்பு நீரித்தனையும் கூட்டோட கற்றும்......" என்பது அகத்தியரது குணபாடம்.

27 அன்றியும், கோவைக் கிழங்கின் சாற்றை நீரிழிவு மருந்துகளுக்குத் துணை மருந்தாகவும் கொடுக்கலாம்.

28 சீந்தில் கொடி என்பதை யாவரும் அறிவர். நன்றாய் முதிர்ந்த கொடியைக் கோடை காலத்தில் சேகரித்து அதிலிருந்து சத்துப் பொருளொன்றைத் தயாரிப்பதுண்டு. இதை 'குடூசீ ஸத்வம்' என்று வடமொழியிலும் 'சீந்திற் சர்க்கரை' என்று தமிழிலும் அழைப்பர். இதைச் செய்து கொள்வது சுலபம் தான். செய்ததும் கடைகளில் விலைக்குக் கிடைக்கிறது.

இச் சீந்திற் சர்க்கரை மதுமேகத்தில் மிகவும் பயனளிப்பதாயுள்ளது.

"அமுதவல்லிக் கோடிபக்கா முண்டிடத்
தீர்ந்துற மேகநோய்த் தீமேலாமாறுமே..."

என்றும்,

"மேகமேறு மாதபத்தால் வெந்தவுயிர்ப் பயிரைத்
தாகமடங்கத் தணித்தலால்—ஆகம
அமரரெனவிருக்க வாதரித்தலாலே
அமுதவல்லி சஞ்சீவியாம்."

என்றும் தேரையர் தெரிவித்துள்ளார்.

[ஆதபம் — வெய்யில்] மதுமேகமென்னும் நீரிழிவு நோயில் சீந்தில் சர்க்கரை ரோகத்தைப் போக்கும்—அந்நோயில் ஏற்படும் பெருந்தாகத்தைத் தணிக்கும். அமரர்களைப் போல் 'நிலையாக' வாழ உதவி புரியும். ஆகவே இதைச் சஞ்சீவி என்று அழைக்கலாம் என்பதிலிருந்து கற்ப முறைப்படி யாவரும் இதைச் சேவித்துச் சந்ததமும் வாழலாம் என்பதும் அறியக் கிடக்கிறது.

**பிஷ்டமேகம்:** பிஷ்டம் என்ற சொல்லுக்கு 'மாவு' என்று பெயர். சிறு நீரில் மாவுச் சத்து கலந்தது போலிருக்கும் நோயைப் பிஷ்ட மேகம் என்பர். ஆல்புமின் "யூரியா" என்றும் "கைல் யூரியா" என்றும் மேல் நாட்டு வைத்திய சாஸ்திரங்களில் தெரிவித்துள்ள ரோகங்கள் இந்தப் பிஷ்டமேகம் என்ற இனத்தில் சேருமெனலாம்.

சிறுநீர் கழித்த இடத்தில் அது உலர்ந்து போனதும் வெள்ளை நிறத்தில் ஒரு "மாவு போலத் தென்படுகிறது" என்று சொல்வதைக் கேட்டிருக்கிறோம். இவை யாவும் பிஷ்டமேகத்தில் சேர்ந்தவை. இதற்கு அடிப்படைக் காரணம் "உக்கிர வெப்பம்" என்று தேரையன் தெரிவித்துள்ளான்.

இந்தப் பிஷ்டமேகத்தில் சிறுநீர் குறைந்த அளவில்தான் கழியும். இந்நோய் முற்ற முற்ற ரத்த அமுக்கம் அதிகரிப்பது—உடலில் வீக்கம் ஏற்படுவது ஆகியவை உண்டாகும். இந்த வீக்கம் முதன் முதலில் முகத்திலும்—அதிலும் கண்களின் கீழ்ப் புறத்தில் முக்கியமாகவும் ஏற்பட்டுப் பிறகு சிறிது சிறிதாக உடல் முழுதுமே பரவும். சொல்லமுடியாத அசதியும்—ஆகாரத்தில் வெறுப்பும் தோன்றும். ரத்த அமுக்கம் அதிகரிப்பதோடு, தலைசுற்றல், மயக்கம், தூக்கமின்மை ஏற்படும்.

இதில் ஆகாராதிகளில் உப்பை நீக்க வேண்டியது அவசியம். தண்மையானவைகளும் சிறு நீர்ப் பெருக்கிகளுமான பொருள்களை ஆகாரமாகவும் மருந்தாகவும் இதில் உபயோகிக்கலாம். 'நீர்க் கடுப்பு' என்ற தலைப்பின் கீழ் எழுதிய மருந்துகளும் பத்தியாகாரங்களும் இதில் பயன் தருபவை.



## அறிவிப்பு

1. போலியோ 2. பாரிச நோய்: முகம், கழுத்து இடுப்பு அவயவங்கள், முழு அல்லது பாதி உடம்பில். 3. அதிவேக ரத்தக் கொதிப்பு 4. செவிடு. 5. ஊமை அல்லது திக்குவாய். 6. குருடு. அரைக் கண் பார்வை. 7 சித்தப்பிரமை முதலிய நோய்களினால் அவதியுறுபவர்கள் எமது டாக்டர் கவிராஜ் ஓம்பிரகாஷ் பி.ஏ. பிஷகாசார்யா தன்வந்திரி, ரிஜிஸ்டர்டு மெடிகல் பிராக்டிஷனர் (டில்லி) அவர்களை கீழ்க்கண்ட இடங்களில் கண்டு ஆலோசனைகள் பெறலாம்.

**நெல்லூர்:** 30-9-58 நேஷனல் லாட்ஜ். போர்டிங் & லாட்ஜில். காலை 8 மணி முதல் 11 மணி வரை

**சென்னை:** 2-10-58 உட்லண்ட்ஸ் ஓட்டல், மயிலாப்பூர், காலை 8 முதல் 12 மணி வரை பிற்பகல் 3 முதல் 5 மணி வரை

**கடலூர் என். டி.:** 3-10-58 ஓட்டல் பிருந்தாவன், காலை 8 முதல் 11 மணி வரை

**கும்பகோணம்:** 4-10-58 தாஜ்மஹால் லாட்ஜ். காலை 8 முதல் 11 மணி வரை

**தஞ்சை:** 4-10-58 ராஜா சத்திரம். மாலை 4 முதல் 6 மணி வரை

**திருச்சி:** 5-10-58 அசோக் பவன், ஜங்ஷன் ரோடு. காலை 8 முதல் 11 மணி வரை

**மதுரை:** 7-10-58 உடுப்பி போர்டிங் லாட்ஜ் காலை 8 முதல் 11 மணி வரை

**திருநெல்வேலி:** 8-10-58 நெல்லை லாட்ஜ் காலை 8 முதல் 11 மணி வரை

**திருவனந்தபுரம்:** 9-10-68 ஓட்டல் அரிஸ்டோ, காலை 8 முதல் 11 மணி வரை.

**எர்ணாகுளம்:** 11-10-58 பாரத் கேப் காலை 8 முதல் 11 மணி வரை.

**கன்னிக்கோட்டை:** 13-10-58 சாந்தா பவன், காலை 8 முதல் 11 மணி வரை,

**மங்களூர்:** 14-10-58 ஜெயா கேப், காலை 8 முதல் 12 வரை. பிற்பகல் 1 முதல் 3 மணி வரை.

**கோயமுத்தூர்:** 15-10-68 உட்லண்ட்ஸ் ஓட்டல், காலை 11 முதல் மாலை 3 வரை

**பெங்களூர்:** 16-10-58 மதராஸ் உட்லண்ட்ஸ் ஓட்டல், காலை 10 முதல் 1 மணி வரை: பிற்பகல் 2 முதல் 4 மணி வரை.

இதர விவரங்களுக்கு
கீழ்காணும் விலாசத்திற்கு எழுதுங்கள்

**ARYAVARTA POLIO ASHRAM**

114-E, KAMLA NAGAR, DELHI 6

Phone. 27858 Grams: "POLIOCURE

விலை ரூ. 7-50 (தபால் செலவு 90 நயா பைசா)

குறிப்பு: ஆலோசனைகள் இலவசம்.



தொண்டை
மற்றும் மார்பு
உபாதைகளுக்குக்
குணமளிக்கும்

# பெப்ஸ் வில்லைகளை

உட்கொண்டால், உங்கள் இருமல் உடனேயே அகலும்

பெப்ஸ் வில்லை ஒன்றை சுவைத்தால் வலியைக் குறைக்கவும், தொண்டைப்புண் பிராங்கைடிஸ். இருமல் அல்லது ஜலதோஷம் இவைகளுக்குக் காரணமான கிருமிகளைக் கொல்லவும் செய்யும். அதன் குணமளிக்கும் ஆவியை அனுபவியுங்கள். பெப்ஸ் உடனே நிவாரணம் அளித்து, விரைவில் குணமூட்டுகிறது. அபாயகரமான மருந்துகள் இதில் சேரவில்லை. குழந்தைகளுக்கும் கூட அபாயமின்றி கொடுக்கலாம்




FPY-54-TAM

பிராங்கைடிஸ்,
தொண்டைப்புண்,
மண்டைநீர்,
அடைப்பு,
ஜலதோஷம்
மற்றும்
இருமலுக்கு
உடனேயே
நிவாரண
மளிக்கிறது.

எல்லா மருந்து
வியாபாரிகளிடமும்
கிடைக்கும்.

**ஸி. இ. புல்போர்ட் (இந்தியா) பிரைவேட் லிட்**

பிரதம ஏஜெண்டுகள்: தாதா & கம்பெனி 86. தம்புசெட்டி தெரு, சென்னை-1

# பாரதியார் இருந்தால்!



ஒழிக ஒழிக
ஒழிக ஒழிக
ஒழிக
ஒழிக
இன்பத் தேன் வந்து பாயுது காதினிலே




பாரதியாரைப்பற்றிப் பேச தலைவர் எனக்கு கட்டளை இட்டிருக்கிறார்கள்...ம்..ம்..
பாரதி...யார்?




நான் தான் பாரதி தெரிந்ததா?




வீட்டைக் காலி பண்ணச் சொன்னா பாட்டு பாட்றார்... ஐயா!
நாமிருக்கும் வீடு நமதென்பதறிந்தோம் இது நமக்கே உரிமையாம் என்பதறிந்தோம்!




அன்று மக்களுக்கு ஒரே தாகம் எத்தகைய தாகம்?






டில்லி தண்ணீர் தாகமா? அல்ல, அல்ல! சுதந்திர தாகம்!






பாரதியார் பாடினார்... என்று தணியும் இந்த சுதந்திர தாகம்...




என்று மடியும் உங்கள் சோடாவின் மோகம்!

# ரவி அழைக்கிறான்!

ராஜம் மிகுந்த மன வேதனையுடன் டெலிபோனில் பேசிக் கொண்டிருந்தாள். அவளது கணவர் வைத்தியசாலையிலிருந்து தன் மகனின் தேக நிலையைப் பற்றி அப்போதைக்கப்போது செய்தி தெரிவித்துக் கொண்டிருந்தார். அதிர்ச்சி அடைந்த ரகுவும் கமலாவும் தங்கள் சிறிய அன்னையைச் சுற்றிச் சுற்றி வந்தனர். ராஜம் அவர்களை அணைத்து உச்சி மோர்ந்து, "கண்மணிகளே! நீங்கள் ஏதும் கவலைப்பட வேண்டாம். நீங்கள் உணவருந்திப் பள்ளிக்குப் போய் வாருங்கள்" என்றாள். அன்புடன் கூடிய பேச்சின் பரிவே அவர்களுக்குப் போதுமானதாக இருந்தது.

டெலிபோன் மணி நிமிஷத்துக்கொரு முறை அலறியது. ராஜம் மிகவும் அதிர்ச்சியுடன் அதற்குச் செவி கொடுத்தாள். அதே சமயம் வீட்டில் தன் தாயாரும் தமக்கையும் தன் குழந்தைகளுடன் இரைந்து கத்திக் கொண்டிருப்பதும் அவளுடைய காதுகளில் விழாமல் இல்லை.

டெலிபோன் மணி அடித்தது. "ராஜம் நீ ஒரு தடவை வந்து ரவியைப் பார்த்து விட்டுப் போனால் நல்லது. அவனை நீ பிறகு பார்க்கவே முடியாது" என்று சம்பந்தம் முதலியார் பேசினார்.

"அம்மாவைக் கேட்டுப் பார்க்கிறேன்!" இது தன்னுடைய கணவருக்கு ராஜம் தயக்கத்துடன் அளித்த பதில்.

மறுபடியும் டெலிபோன் பேசியது. "ராஜம்! ரவிக்கு ஜுரம் அதிகமாகி விட்டது. நீ வந்து போனால் அவன் மனம் கொஞ்சம் சமாதான மடையும்."

"இதோ அம்மாவைக் கேட்டுப் பார்க்கிறேன்" என்றாள் ராஜம்.

மறுபடியும் டெலிபோன் அலறியது. "ராஜம்! இன்னுமா உன் அம்மாவைக் கேட்டுக் கொண்டிருக்கிறாய்? ரவி உன் நினைவாகவே இருக்கிறான். 'சித்தியைக் கூப்பிடு' என்கிறான். உன்னை வருந்தி அழைக்கிறான். உன்னையே அடிக்கடி கூப்பிட்டுக் கொண்டிருக்கிறான்" என்றார்.

ராஜம் தன் கணவர் இந்தத் தடவை கோபத்துடனும் மிகுந்த வருத்தத்துடனும் பேசியதை அறிந்து கொண்டாள். ஆனால் அவளுக்குத் தன் தாயாரின் உத்தரவைப் பெற முடியாதென்று நன்றாகத் தெரியும். அன்னையின் விருப்பத்துக்கு மாறாகவும் அவளால் நடந்து கொள்ள இயலாது.

"ராஜம்! — அவனுக்கு நினைவே யில்லை. 'ஐயோ! அடிக்கிறாளே'—'சாப்பாடு இல்லை என்கிறாளே' — 'வெளியே ஓடு' 'வெளியே ஓடு' என்கிறாளே—என்றெல்லாம் சம்பந்தமில்லாது கத்துகிறான். உன் தாயார் அவனை இப்படி யெல்லாம் ஒரு வேளை அதட்டி யிருப்பாளோ, என்னவோ? ஏதோ அதிர்ச்சிதான் என்று வைத்தியர்கள் நினைக்கிறார்கள். நடுநடுவே 'சித்தி! சித்தி!' என்று இரைச்சல் போடுகிறான்." இவ்விதம் டெலிபோனில் சம்பந்தம் பிள்ளை படபடக்கும் குரலில் தம் மகனின் நிலையை விளக்கிக் கொண்டிருந்தார்.

ராஜம் டெலிபோனில் ஒவ்வொரு தடவை பேசும் பொழுதும் அவளது தாயாரான ரங்கம்மாள் அடிக்கடி அங்கு வருவதும் போவதுமாகத் தணிக்கை செய்து கொண்டிருந்தாள்.

"அம்மா! ரவிக்கு ரொம்ப ஆபத்தாம்; அவர் மிகவும் கவலையுடன் இருக்கிறார். குழந்தைகளையெல்லாம் அழைத்துக்கொண்டு என்னை வரும்படி சொல்லுகிறார் — போய் வரட்டுமா?" ராஜம் துணிந்து இவ்விதம் தன் தாயாரைக் கேட்டு விட்டாள்.

ரங்கம்மாளுக்கு ஆவேசம் வந்து விட்டது. "புத்தி கெட்ட பெண்ணே! அவனுக்குப் பிளேக் ஜுரமல்லவா வந்திருக்கிறது. நீ அங்கு போகவே கூடாது. உன் கணவர் அங்கு இருப்பதே தப்பு! உன் வாழ்க்கையை அந்தக் கிழவருக்குப் பலி கொடுத்திருப்பதே போதும்! அதை விட அதிகக் கஷ்டத்தை வருவித்துக் கொள்ளாதே!" என்றாள்.

மறுபடியும் டெலிபோன் மணி அலறியது. ராஜம் கண்ணீர் வழிந்தோட 'ரிசீவரை' எடுத்துக் கேட்டாள்.

"ராஜம்! ரவி நம்மை விட்டுப் பிரிந்து போய்க் கொண்டிருக்கிறான். நீ வரவில்லை என்று வருத்தம் தெரிவித்தான். 'சித்தி பாப்பாவுக்குச் சோக்காய் போடுகிறாளாக்கும்! போட்டு விட்டு வருவாள். சித்தி அப்புறம் என்னைப் பார்க்க வருவாள். அப்பா! சித்தியை என்னிடம் அனுப்பி வை!' இப்படி விவரமாகப் பேசிவிட்டுக் குழந்தை பிரிந்து போனான்! — ஐயோ!" டெலிபோன் மேலே பேசவில்லை.

ராஜம் 'ஓ'வெனக் கதறி மயக்கமடைந்து கீழே விழுந்து விட்டாள்.

* * *

ராஜம் ரங்கம்மாளின் இளைய மகள். ரங்கம்மாள் தன் இளைய மகளுடன் மூத்த மகள் வீட்டில் வசித்து வந்தாள். ராஜம் பெரியவளானபின் பூரண சம்மதத்துடன் ஐந்து குழந்தைகளின் தந்தையான சம்பந்தம் பிள்ளையை மணம் செய்து கொண்டாள். இந்தச் சம்பந்தத்தை ரங்கம்மாள் சிறிதும் விரும்பவில்லை. என்றாலும் ராஜத்தின் பிடிவாதமும் சம்பந்தம் பிள்ளையின் பெரிய சம்பளமும் அவளை வஞ்சித்துவிட்டன. ராஜத்துக்குத் தானும் தன் கணவனும் தனிக் குடித்தனம் செய்ய வேண்டுமென்றும் தன்

கணவனின் மக்களை அன்போடு பேணி வளர்க்க வேண்டுமென்றும் ரொம்ப ஆசையாயிருந்தது. ஆனால் ரங்கம்மாள் அந்த ஆவலை நிறைவேற்ற மறுத்தாள். தன் மகள் ஒரு அப்பாவி என்றும், ஏமாந்தவள் என்றும், தனியே போனால் அவளைச் சம்பந்தம் பிள்ளை ஒரு வேலைக்காரி போல் நடத்தி ஏமாற்றி விடுவார் என்றும் கூறிப் பசப்பி வந்தாள். மேலும் மூத்தம்மாளும் மிகவும் சுயகாரியப் புலியாதலால் பணக்காரியான தன் தங்கையைத் தனியே அனுப்பிவிட்டு, வீட்டுச் செலவு முழுவதையும் தானே பொறுப்பேற்க முன்வரவில்லை. முடிவில் ராஜமும் தன்னை மிகக் கஷ்டப்பட்டு வளர்த்த அன்னையின் பிரியத்துக்கு எதிராக நடந்து கொள்ள மனமில்லாமல் இருந்தாள். இதன் நடுவே அவளுக்கு ஒரு குழந்தையும் பிறந்தது.

ராஜம் இதன் பிறகு 'குழந்தைக்கு ஓராண்டு முடிந்ததும் வேறு வீடு வைப்போம்' என்று தன் கணவனைச் சமாதானம் செய்ய பார்த்தாள். சம்பந்தம் பிள்ளை வேறு வழியின்றித் தன் பெரிய பையன்களைத் தாற்காலிகமாகக் கலாசாலை விடுதியில் இருக்கச் செய்தார். இளைய மக்கள் மூவரையும் ராஜத்தின் வீட்டில் தம்முடன் இருக்கச் செய்தார். தம் மக்கள் அங்கே ராஜத்தின் தாயாரால் துன்புறுவதை அவர் அறியாதவரல்ல. அந்தக் காரணத்தாலேயே வேறு வீடு வைக்க அவர் பெரிதும் விரும்பினார். ராஜம் அதற்கு ஈடு கொடுக்காமலிருந்து வந்தது அவருக்கு ஓர் பெரிய ஏமாற்றம்தான். சம்பந்தம் பிள்ளையின் மக்கள் அநேக சமயம் பட்டினியாகவே பள்ளிக்குச் செல்ல நேரிடும். ரங்கம்மாள் தன் மகளையே அது விஷயமாக ஏமாற்றி விடுவாள். அவர்களுக்குச் சாப்பாட்டுக்கு, துணிக்கு என ஏகப்பட்ட பணம் பெற்றுக் கொண்டு அவைகளைச் செலவு செய்யமாட்டாள். பையனை ரவியோ அந்தக் காரணத்தால் சதா தெருவிலேயே சுற்றிக் கொண்டிருப்பான். கூலி வேலை செய்து பணம் சேகரித்துத் திருட்டுத்தனமாக ஹோட்டலில் சாப்பிட்டுப் பசியாற்றிக் கொள்வான். ராஜம் இதை விரும்பவில்லை. ஆனாலும் ஏதும் செய்ய இயலாதவளாயிருந்தாள். தாயாருக்குத் தெரியாமல் அவர்களுக்கு வீட்டிலுள்ள தின்பண்டங்களை எடுத்துக் கொடுப்பாள்; சொக்காய்ப் பையில் காசுகளை நிரப்பி வைப்பாள். ரகசியமாக அழைத்து அன்பு மொழி சொல்லுவாள். சம்பந்தம் பிள்ளைக்குத் தம் மனைவி அவளுடைய தாயாரிடம் இவ்விதம் பயந்து நடப்பது பொறுக்க முடியாத கோபத்தை உண்டாக்கியது.

தம் மகன் ரவி இறந்து விட்டபின் சம்பந்தம் பிள்ளை மனம் துணிந்து விட்டார். அவருடைய ஏமாற்றம் அளவு கடந்து போய் விட்டதல்லவா? ''ராஜம்! இனிமேல் உன் தாயாரிடம் என் மக்களை விட்டுச் சாகடித்துக் கொள்ள நான் விரும்பவில்லை. நான் தனியே வசிக்கப் போகிறேன். நீ உன் பிரியப்படி எங்கே வேண்டுமானாலும் வசிக்கலாம்'' என்று தீர்மானமாகச் சொல்லி விட்டார்.

இது பற்றி ராஜம் வழக்கப்படி தன் அன்னையைக் கலந்தாலோசித்தாள். ரங்கம்மாள் சிரித்து விட்டு, ''ஆகா! தெரிந்த விஷயம் தானே! இந்தக் காரணத்தால்தானே நான் உன்னைத் தனியே அனுப்பத் தைரியம் கொள்ளவில்லை. மூன்றே நாட்களில் உன்னை உருத்தெரியாமல் அடித்துப் போட்டு விடும் ஆளல்லவோ அவர். நீ அவருடன் வாழ்ந்தது போதும்! உனக்கும் உன் பிள்ளைக்கும் சேர வேண்டிய பணத்தைக் கொடுத்து விட்டு, என்ன வேண்டுமானாலும் செய்து கொள்ளும்படி அவரிடம் சொல்லி விடு!'' என்றாள்.

ராஜம் கடமைக்கும் உணர்ச்சிக்கும் நடுவே சிக்கிக் கொண்டாள். ராஜம் கணவனின் புது வீட்டுக்குப் போகவில்லை. அவள் திடீரென்று கொடிய வியாதிக்கு ஆளானாள். அவளுக்குத் தாயாரின் உதவி அவசியமாயிற்று. சம்பந்தம் பிள்ளை தம் மக்களுடன் வேலைக்காரர்களை வைத்துத் தம் வீட்டை நடத்தி வந்தார். அவரது மக்கள் நினைத்தவுடன் தங்கள் சிற்றன்னையையும் அவளது 'பாப்பா'வையும் பார்க்க ஏதாவது தின்பண்டம் பலகாரத்துடன் வந்து போவார்கள். அந்தக் குழந்தைகள் இப்பொழுது களையுடன் ஆரோக்கியமாயிருப்பதைப் பார்த்து ராஜம் மகிழ்ச்சியே கொண்டாள். அவள் தன் கணவனுக்காக ஏங்கி ஏங்கித்தான் இந்



நாமகிரி



சேகர்: கமலி! என்னை நீ காதலிக்கிறேன் என்று ஒரு வார்த்தைசொல்லு. உன் காலடியிலேயே விழுந்து பிராணனை விட்டுவிடுகிறேன்.

கமலி: சேகர்! உனக்கு உயிர்ப் பிச்சை கொடுத்து விட்டேன், நீ போய்விட்டு வா!

வியாதி வந்து விட்டது. அடிக்கடி இந்தக் குழந்தைகளிடம் ''குழந்தைகளே! நான் ஒருவேளை 'ரவி'யிடம் போனால் என் 'பாப்பா'வை நீங்கள் உங்களுடனேயே வைத்துக் கொள்ளுங்கள். குழந்தையைக் கவனமாகப் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்பாள்.

அவள் அவ்விதம் சொல்லும் பொழுது அவர்கள் தங்கள் 'பாப்பா'வைக் கட்டிக் கொண்டு, ''அவசியம் அம்மா! அவசியம் 'பாப்பா'வை நாங்கள் ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்வோம். ஆனால் நீங்கள் எங்கள் கூடவேயிருங்கள், ரவியிடம் போக வேண்டாம்'' என்று அலறுவார்கள். ஒவ்வொரு குழந்தையும் தனித்தனியாக அவளுக்குத் தேறுதல் சொல்லி, ''இப்பொழுதே நீங்கள் எங்கள் வீட்டுக்கு வந்து விடுங்கள், சித்தி!'' என்பார்கள். அவர்கள் தங்கள் சிற்றன்னையிடம் மிக மிகப் பிரியமாயிருந்தனர்.

வர வர ராஜத்தின் உடல் நிலை மோசமாயிற்று. சம்பந்தம் பிள்ளை அடைந்த வருத்தம் சொல்லத்தரமல்ல. ஆனால் அவருக்குத் தம் மாமியார் ரங்கம்மாள்மீது இன்னமும் கோபம் ஆறவில்லை. தமது குணவதியான மனைவியின் வாழ்க்கையைப் பாழாக்கியவள் ரங்கம்மாள்தான் என்று அவர் எண்ணினார். தம்மையும் தம் மனைவியையும் பிரித்து வைத்து இருவர் உள்ளங்களையும் தவிக்க வைத்த ரங்கம்மாள்மீது அவருக்கு அளவற்ற ஆத்திரம் எழுந்தது. ஆனால் அந்த ஆத்திரத்தைக் காட்டிக்கொள்வதற்கு வழியில்லாமல் போய் விட்டது.

ரங்கம்மாளின் வாழ்க்கையில் திடீரென்று ஒரு திருப்பம் ஏற்பட்டது. தன் சகோதரியின் வாழ்க்கையில் சிக்கல்கள் தொடங்கியதும் முத்தம்மாள் வேறுவிதமாக மாறி விட்டாள். தன் பொறுப்பும் செலவும் அதிகமாவதை அவள் விரும்பவில்லை. ஆகவே, தன் தாயாரைப் பாடாகப்படுத்த ஆரம்பித்தாள். தன் உயிருக்குயிரான இளையமகள் இறக்கப் போவதையும் தன் நம்பிக்கைக்குப் பாத்திரமாயிருந்த பெரிய மகள் தன்னைப் பாடாகப் படுத்துவதையும், ரங்கம்மாவினால் தாங்க முடியவில்லை, எனவே, அவளுக்கு இலேசாகச் சித்தப்பிரமை உண்டாயிற்று.

தன்னால்தான் இத்தனை கொடுமைகளும் ராஜத்துக்கு விளைந்தன என்பதை எண்ண எண்ண அவள் உள்ளம் பேதலித்தது. முடிவில் தன் அருமை மகள் இறந்து போவாள் என்பதும் அதன் பிறகு அவளது மகள் அனாதை என்ற எண்ணமும் சேர்ந்து அவளுக்குப் பின்னும் அதிகமாகப்பிரமை தட்டியது.

தானாகவே சதா, 'இல்லையடா—நான் உன்னை அடிக்கவில்லையடா!' என்பாள். 'உனக்குச் சாப்பாடு இல்லை என்று யார் சொன்னது?' என்று சொல்லிக் கொண்டே சிறிது நேரம் இருப்பாள். பிறகு கண்ணீர் வடித்துக் கொண்டே அலைவாள். பார்க்கப் பரிதாபமாக இருக்கும்.

ராஜத்தின் மூத்தாள் குழந்தைகளைப் பார்த்தால், 'எங்க பாப்பாவையும் அழைத்துப் போங்கள்' என்பாள். திடீரென்று 'ஏன் அவர் வரவே யில்லை? ராஜத்தைப் பார்க்க ஏன் சம்பந்தம் வரவேயில்லை' என்பாள். இவ்விதம் மிகவும் பரிதாபப்படும்படியான நிலைக்கு ரங்கம்மாள் வந்து விட்டாள்.

ராஜம் படுத்த படுக்கையில் ஏதும் செய்ய இயலாதவளாகக் கிடந்தாள். சம்பந்தம் பிள்ளை அப்பொழுதும் தூர இருந்தபடியே அவளுக்கு வேண்டிய உதவிகள் செய்து வந்தார். ஆனால் நாளடைவில் வைத்தியர்களும் கைவிட்டு விடவே அவரும் அவரது மக்களும் சதா ராஜத்தின் அருகிலே இருந்து அவளைக் கவனித்து வந்தனர். ராஜம் அவர்களிடம் எப்பொழுதும் போலவே மிகுந்த அன்புடன் இருந்தாள்.

ஒரு நாள் அவளது தேக நிலை மிக அபாயகரமாகி விட்டது. அவள் சம்பந்தம் பிள்ளையையும், அவரது மக்களையும் தன் அருகே வரச் சொல்லிப் பிரியாவிடை பெற்றுக் கொண்டாள். ''குழந்தைகளே! அப்பொழுது ரவியை நான் போய்ப் பார்த்திருந்தால் ஒருவேளை இப்பொழுது இங்கேயே யிருந்திருப்பேனோ, என்னமோ? ரவி என்னை அழைக்கிறான்!—நான் அவனிடம் போகிறேன்—என்னுடைய பாப்பாவைக் கவனித்துக் கொள்ளுங்கள்'' என்றாள். அவளுக்கு மூச்சு திணறியது. அதற்குமேல் அவள் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவரவில்லை.

சம்பந்தம் பிள்ளையும் மக்களும் அலறினர். ராஜம் ரவியிடம் சென்று விட்டாள். அது பற்றிய திருப்தியை அவளது சாந்தமான முகம் தெரிவித்தது எனலாம்.

உள்ளே ரங்கம்மாள் ஏதும் உணர்ச்சியற்றுப் பிதற்றிக் கொண்டிருந்தாள். சம்பந்தம் பிள்ளையே அவளது நிலையைக் கண்டு மிகவும் பரிதாபப்பட்டுப் போனார்!




# Exhibition

பரிசுகளாக ரூ. **8,000** பெறுக

**2-வது உஷா தையல் & எம்பிராய்டரி பொருட்காட்சி**

தையல் கலையையும், சித்திரத் தையல் கலையையும் இந்த நாட்டில் செழிக்கச் செய்வதற்காக நாடு முழுவதும் விரிவான ஒரு போட்டி ஏற்படுத்தியுள்ளோம். இதில் அனைவரும் கலந்து கொள்ளலாம். இதற்குப் பிரவேசக் கட்டணம் கிடையாது.

போட்டிக்கு நீங்கள் குழந்தைகளுக்கான உடுப்புகள், ரவிக்கை, அல்லது சோளி பஞ்சாபி உடுப்புகள், மேஜை விரிப்புகள், மெத்தை உறைகள், கைப்பைகள், துணியினால் செய்த பொம்மைகள், டிரேஸ், சேலை, பூவேலை செய்த உருவப் படங்கள், இதர படங்கள் முதலியவற்றை அனுப்பி வைக்கலாம்.

வந்து சேர வேண்டிய கடைசி தேதி **30-9-58**

**உஷா** தயாரிப்பாளர்கள் ஏற்பாடு செய்துள்ளனர்

தையல் மெஷின்

**ஜே இன்ஜினியரிங் ஒர்க்ஸ் லிமிடெட், கல்கத்தா**

# பாலர் மலர்

## 2. கஸ்கஸ்

இந்தப் பிராணி ஆஸ்திரேலியா, நியூகினியா முதலிய இடங்களிலும் இவைகளை அடுத்த தீவுகளிலும் காணப்படுகிறது. 'ஓபோஸம்' என்ற ஒரு வகைப் பிராணியின் இனத்தைச் சேர்ந்தது இது. ஆனால் உருவத்தில் பெரியது. உருண்டையான பெரிய கண்களும் ரோமம் மண்டிக் கிடக்கும் உடலும், சிறிய காதுகளும் உள்ள இதைப் பார்த்தால் ஒருவகைக் குரங்கு போலத் தோற்றமளிக்கும். 'கஸ் கஸ்' ரொம்ப சாதுவான மிருகம். எதற்கும் அவசரப்படாமல் நிதானமாக நடந்து கொள்ளும். இதன் உருவம் நன்றாக வளர்ந்த பெரிய பூனையின் அளவு தான் இருக்கும். மரங்களில் தான் அனேகமாக வசிக்கும். இதற்குப் பற்றிக் கொள்ளும் தன்மை வாய்ந்த நீளமான வால் உண்டு. இரவு வேளைகளில்தான் இதன் நடமாட்டம் அதிகம். பூனைக்கு இருப்பது போலவே இதன் கண் விழிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன.

'கஸ்கஸ்'களை அவைகளின் நிறத்தைக் கொண்டு பல வகைகளாகப் பிரிக்கிறார்கள். சாதாரணமாக இவைகளின் நிறம் கறுப்பிலிருந்து தேன் நிறம்வரை பலவிதமாக இருக்கும். இவைகளில் விசேஷமானது நியூ கினியா, க்வீன்ஸ்லாந்து, நியூ பிரிட்டன், அட்மிரால்டி தீவுகள் ஆகிய இடங்களில் வாழும் வகைகள். இந்த வகை 'கஸ் கஸ்'களின் உடலில் வேங்கைப் புலியின் உடலைப்போல் பலவிதமான கோலங்கள் காணப்படுகின்றன. ஒரே இனத்தைச் சேர்ந்த ஆண் வர்க்கம் அதன் பெண் வர்க்கத்தின் உடல் அமைப்பிலிருந்து மாறுபட்டிருக்கும் விந்தை உலகில் மிகச் சில பிராணி இனங்களில்தான் காணப்படுகிறது. 'கஸ் கஸ்' இவ்வகைகளில் ஒன்று. ஆண் 'கஸ்கஸ்'களின் உடலில்தான் இம்மாதிரி பிரகாசமான கோலங்கள் காணப்படுகின்றன. வெள்ளை உடலில் பழுப்பு நிறக் கோலங்கள். பெண் 'கஸ்கஸ்'களின் உடல் கோடுகளில்லாத பழுப்பு நிறமாகவும், அடி வயிறு வெளுப்பாகவும் இருக்கும். வாலைக் கணக்கிடாமல் இந்தப் பிராணியின் நீளம் மூன்றரை அடி. இதன் வால் மட்டும் உடலின் நீளத்தில் பாதிக்கு மேல் இருக்கும்.

இதன் உடலின்மீது அடர்த்தியான ரோமம் மண்டிக் கிடக்கும். இந்த ரோமத்துக்குள் இதன் சின்னஞ் சிறிய காது வெளியே தெரியாதபடி பதிந்து கிடக்கும். இதனால் பார்ப்பவர்களுக்கு 'இந்தப் பிராணிகளுக்குக் காதுகளே கிடையாதோ?' என்று தோன்றும். வாலின் ஆரம்பத்தில் அடர்த்தியாக வளர்ந்திருக்கும் ரோமம் நுனிக்குப் போகப் போகக் குறைந்து கடைசியில் ரோமமே இல்லாமல் தடித்த செதில்களால் மூடப் பட்டிருக்கும். மரங்களின் மீது ஏறும்போது இந்த ரோமமற்ற பாகத்தினால் கிளைகளைப் பற்றிக் கொள்ள இது பெரிதும் பயன்படுகிறது.

பகலெல்லாம் செடி கொடிகளடர்ந்த நிழல் கவிந்த கிளைகளிலோ அல்லது மரப் பொந்துகளிலோ நன்றாகத் தூங்கிவிட்டு இரவு வேளைகளில் உணவு வேட்டைக்குக் கிளம்பும். இதன் ஆகாரம் பழங்கள், சிறிய பிராணிகள், பறவைகளின் முட்டைகள், பெரிய நத்தைகள் முதலியன.

'கஸ்கஸ்' தன் குட்டிகளைத் தன் வயிற்றிலுள்ள ஒரு சிறிய பைக்குள் வைத்துக் காப்பாற்றும். ஆஸ்திரேலியாவில் வாழும் பிராணிகளில் பல வற்றுக்கு இத்தகைய சாதனம் உண்டு. 'கஸ்கஸ்'களைச் சுலபமாகப் பிடித்து விடலாம். பூர்வகுடி மக்களில் பலர் இதை உணவுக்காகக் கொன்று தின்கிறார்கள். உன்னுடைய மிருகக் காட்சிச் சாலையிலே 'கஸ்கஸ்'க்கு நல்ல இடமாகப் பார்த்து வையுங்களேன்!

— முத்து



# மூன்று நண்பர்கள்

வாண்டு மாமா

## ௭. பாய்ந்து வந்த கத்தி!

மணி தன் மாமாவிடம் நிலவறையில் நிகழ்ந்தவற்றை விளக்கினான். "துப்பாக்கி ஏந்திய நிழலுருவம் மறைந்த பிறகு கட்டிப் போட்டிருந்த ஒரு காயம் பட்ட மனிதனின் கட்டுக்களை அவிழ்ந்து அவன் வாயில் திணித்திருந்த துணிப் பந்தையும் எடுத்து..." மணி தன் முடைய பேச்சை முடிக்கவில்லை.

"அந்தமனிதன் ஏதாவதுசொன்னானா?" என்று கேட்டார் சேகர். மணி நடந்தது அனைவையும் ஒன்றுவிடாமல் சொன்னான். "இட்டுவும் பட்டுவும் ரங்கசாமியின் உதவியுடன் அவரைக் காப்பாற்றப் போயிருக்கிறார்கள். ரங்கசாமியைத் தான் உங்களுக்குத் தெரியுமே?" என்றான் மணி.

"ஓஹோ! அதனால்தானா சற்று முன்பு நான் நிலவறைக்குள் போய்ப் பார்த்த போது அது காலியாகக் கிடந்தது. அந்த மனிதர் இரவு தங்குவதற்கு உன் கிட்டு என்ன ஏற்பாடு செய்து தரப் போகிறான் தெரியுமா?" என்று கேட்டார்.

"ரங்கசாமியின் வீட்டிலேதான் அவர் தங்குவார். இத்தனை நேரம் அவர்கள் திரும்பி இருப்பார்கள். இப்போது போனால் கூடச் சந்திக்கலாம்" என்றான் மணி.

"நான் அங்கு போக விரும்ப வில்லை. நான் உயிரோடு இருப்பது யாருக்கும் தெரியக் கூடாது" என்றார்.

"நான் யாரிடமும் சொல்ல வில்லை, மாமா!...அது சரி, நீங்கள் எப்படி அந்தப் படகு விபத்திலிருந்து உயிர்பிழைத்தீர்கள்? அந்த நிலவறைக்குள் இருந்த மனிதன் யார்? அவர் ஏன் போலீஸுக்குத் தம்மை அறிவிக்க வேண்டாம் என்று கேட்டுக் கொண்டார். நீங்கள்...வந்து ... குற்றம் ஏதும் செய்யவில்லையே? சட்ட விரோதமான காரியங்கள் எதிலும்..." கேள்விகளை அடுக்கினான் மணி.

"அதெல்லாம் எதுவுமில்லை மணி. இப்போதைக்கு என்னைப் பற்றி நான் எதுவும் சொல்லப் போவதில்லை பின்னால் எல்லாம் விவரமாகச் சொல்லுகிறேன். நீ நிலவறையில் பார்த்த மனிதர் நான் நினைக்கும் மனிதரானால் அவரைக் காப்பாற்றுவதில் என் உயிரைக் கொடுக்க வேண்டி இருந்தாலும் அதற்காக நான் பின் வாங்க மாட்டேன். அந்த மனிதரைத் தேடிக் கொண்டு நான் வந்த போது தான் நீ நிலவறையிலிருந்து வெளி வருவதைப் பார்த்தேன். என்னைத் தாண்டிச் செல்லும் வரை அது நீ தான் என்பது எனக்குத் தெரியாது. உன் கவனத்தைக் கவர நான் பூனை போலக் கத்தினேன். ஆனால் நீ கலவரமடைந்து ஓடுவதற்கு



ஆரம்பித்து விட்டாய்" என்று கூறினார் சேகர்.

ஆச்சரியமடைந்த மணி "என் பெயரைச் சொல்லிஅழைத்திருக்கலாமே?" என்றான்.

"அழைத்திருக்கலாம். ஆனால் உன்னைப் பின்தொடர்ந்து வருகிறவர்களுக்கு நான் ஒளிந்து கொண்டிருப்பதை வெளிப்படுத்தும் படியாகி விடுமே?"

மணி திடுக்கிட்டு, "என்னைப் பின் தொடர்ந்தா?" என்றான்.

"ஆமாம்! சாட்சாத் ஸ்ரீமான் மணி அவர்களைத்தான்" என்றார் சேகர் சிரித்துக் கொண்டே. பிறகு "சதிகாரர்கள் உன்னை அடையாளம் புரிந்து கொண்டார்களோ என்னவோ, ஆனால் உன்னைப்



பின் தொடர்ந்து வந்து இந்த வீட்டை நன்றாகப் பார்த்துக்கொண்டு விட்டார்கள்'' என்றார் சேகர்.

''அதாவது என் பின்னாலேயே நீங்கள் சொல்லும் சதிகாரர்கள் வந்தார்களா?''

''ஆமாம்! நானும் அவர்களைப் பின் தொடர்ந்தேன் — உன்னை அவர்கள் தாக்கினால் என்னை வெளிப்படுத்திக் கொள்ளலாம் என்று. ஆனால் அப்படி எதுவும் நிகழ்ந்து விடவில்லை. தெரு மூலையில் தயாராக இருந்த காரில் ஏறி அவர்கள் போய் விட்டார்கள்.''

''ஏன் மாமா அந்த அயோக்கியர்களை நீங்கள் அப்பொழுதே ஒழித்துக் கட்டி இருக்கக் கூடாது?''

''அதாவது கொன்றிருக்கக் கூடாதா என்று கேட்கிறாயா? என்னை என்ன கொலைகாரன் என்று நீ எண்ணி விட்டாயா?''

மணியினால் இதற்கு உடனே பதில் சொல்ல முடியவில்லை. ''அவர்கள் துஷ்டர்கள்தானே?'' என்றான்.

''இருக்கலாம். ஆனால் நான் நீதிபதியோ சட்டத்தின் பிரதிநிதியோ இல்லையே! ஒரு உயிரைக் கொல்வதற்கு நமக்கென்ன உரிமை இருக்கிறது மணி. சரி...! அது சரி நேரமாகிறது ...ரங்கசாமியின் வீட்டுக்குப் போய் என் நண்பரான அந்த மனிதரைச் சந்திக்க வேண்டும் வா'' என்று கிளம்பத் தயாரானார் சேகர்.

மணியும் தன் மாமாவுடன் கிளம்பத் தயாரானான். அதே சமயம் ஜன்னல் வழியே 'உஸ்' என்ற சீறலுடன் ஏதோ ஒன்று உள்ளே பாய்ந்து வந்தது. எதேச்சையாக மணி நகர்ந்ததால் அது அவன் கன்னத்திலே உராய்ந்தபடி சென்று எதிரிலுள்ள கட்டில் பலகையில் பதிந்து நின்று பளபளத்தது. அது ஒரு கத்தி!

குத்துவாளையே பார்த்தபடி பிரமித்து நின்ற மணியிடம், ''நான் சொன்னது சரியாகி விட்டதல்லவா... சரி, நீ ரங்கசாமி வீட்டுக்கு வா... மற்ற விஷயங்களை அங்கு பேசிக் கொள்ளலாம். தனியாக வராதே, கிட்டுவையும் உடன் அழைத்து வா. ஜாக்கிரதை!'' என்று எச்சரிக்கை செய்தபடியே சேகர் பால்கனிக்கு ஓடி இமைக்கும் நேரத்தில் சரசரவென்று கீழே இறங்கி காம்பவுண்டுச் சுவரைத் தாண்டி வீதியில் குதித்து விட்டார்.

குத்துவாளை வீசிய மனிதனைப் பின்பற்றிப் பிடிக்க வேண்டும் என்று தான் சேகர் அவ்வளவு துரிதமாக ஓடினார். கத்தியை வீசியவன் அதற்குள் வெகு தூரம் போயிருக்க மாட்டான் என்பது அவர் முடிவு. அவர் நினைத்தபடியே ரஸ்தாவின் கோடியில் ஒரு கார் நின்று கொண்டிருப்பது நிலவை மேகம் மறைத்திருந்தாலும் மங்கிய ஒளியில் நன்றாகத் தெரிந்தது. அதே காரைச் சற்று முன்பு சந்தித்ததும் சேகரின் நினைவுக்கு வந்தது. பங்களாவின் நிழல்களில் பதுங்கிப் பதுங்கி ஒரு உருவம் வேகமாகக் காரை நோக்கிச் செல்வதை அனுபவப்பட்ட சேகரின் கண்கள் பார்த்து விட்டன. அவனைக் குறி வைத்து இவரும் நிழல்களினூடே வெகு வேகமாகப் பின்

தொடர்ந்தார். அந்த மனிதன் காருக்குள் புகுந்து கதவைச் சாத்தியதும் உடனே கார் மின்னல் வேகத்தில் கிளம்பியது. அதே விநாடி சேகர் குபீரென்று காரின் மீது தாவி ஏறி அதன் உச்சியை அடைந்து விட்டார். எல்லாம் ஏககாலத்தில் நிகழ்ந்தன. கார் கிளம்பி அடுத்த தெருவுக்குத் திரும்பிய வேகத்தில் அதன் மீதிருந்த சேகர், நிலை தடுமாறி வழுக்கிச் சறுக்கி விழப்போனார். ஆனால் நல்லவேளையாகக் காரின் முன்னுள்ள ஒளி மறைப்பானைக் கைகளால் பற்றிக்கொண்டு முழங்கால்களைக் காரின் பக்க வாட்டில் உதைந்து அழுத்திக் கொண்டார். வேகமாகப் போகும் காரின் வழவழப்பான மேல் பாகத்தில் அப்படிப் படுத்துக் கொண்டு விழாமல் வருவது மிக்க சிரமமான வேலைதான். அதிகநேரம் அப்படிச் சமாளிக்க முடியாது என்பதும் அவருக்குத் தெரியும். தாம் மேலே இருப்பதை அறிந்து கொண்டு விட்ட அவர்கள் தம்மைத் தங்கள் இருப்பிடத்துக்கு இதே நிலையில் அழைத்துப் போக மாட்டார்கள் என்பதும் தெரியும். விரைவிலேயே போராட்டத்தை எதிர் பார்த்தார். அதற்கு அவர் தயாராகவும் இருந்தார்.

எதிர்பார்த்தபடியே காரின் கதவு மெதுவாகத் திறந்துகொண்டது - ஓடிக்கொண்டிருக்கும்போதேதான்! இடது கையினால் காரின் உட்புறத்தில் பற்றிக்கொண்டு வலக் கரத்தால் சேகரின் கால்களைப் பற்றி இழுத்துக் கீழே உருட்டிவிட முயன்றான் அவன். ஆனால் சேகர் அவன் கைகளுக்கு எட்டாதபடி உருண்டு போய்த் தன் கரங்களால் அந்த மனிதனின் முகத்தைப் பார்த்து எட்டி உதைத்தார். பரிதாபமான ஓலத்துடன் அப்படியே பிடி நழுவி விழப்போன அவனைக் காரிலிருந்த ஒரு உருவம் உள்ளே இழுத்துக் கொண்டது. இல்லா விட்டால் சூறாவளியைப் போலப் போகும் அந்தக் காரிலிருந்து அவன் விழுந்து தூள் தூளாகி இருப்பான். அந்த மனிதனுக்கு மூக்கில் நல்ல அடிபட்டிருக்க வேண்டும் என்பதைச் சேகரின் விறுவிறுத்த கால் அவருக்கு உணர்த்தியது.

அடுத்தபடியாக என்ன நடக்கும் என்பதையும் சேகர் ஊகிக்கலானார். மறு பக்கத்திலிருந்து மூக்குடைபட்டவனை இழுத்துப் போட்டவன் துப்பாக்கியால் தன்னைச் சுடப்போகிறான்...... இதை அவர் நினைப்பதற்கும் மறுபக்கத்தின் கதவுக்கு மேலே ஒரு கைத் துப்பாக்கி அவரை நோக்கி எட்டிப் பார்ப்பதற்கும் சரியாக இருந்தது. ஒளிமறைப்பானைப் பற்றியுள்ள இரு கைகளில் வலது கரத்தை விடுவித்துக் கொண்டு அதனால் துப்பாக்கியைப் பற்றினார். கார் ஓட்டுபவன் சேகரின் பிடிமானம் ஒரு கையில்தான் இருக்கிறது என்பதைப் பார்த்து விட்டுத்தானோ என்னவோ திடீரென்று சடன் 'பிரேக்'கைப் போட்டுக் காரை நிறுத்தினான். அந்த எதிர்பாராத அதிர்ச்சியினால் சேகர் கவண் கல்லிலிருந்து விடுபட்ட பொருளைப்போலக் காரின்மேலிருந்து கீழே தூக்கியெறியப்பட்டார். விழும்போது கூடக் காரின் 'பானெட்டில்' உள்ள அழகுச் சிலைப் பொம்மையைப் பற்றிக்கொண்டு விழாமல் சமாளிக்க முயன்றார். முடியவில்லை. தொப்பென்று நடு ரோட்டில் சேகர் அலங்கோலமாக விழுந்தார். உடலிலுள்ள எலும்புகளெல்லாம் நொறுங்கி விட்டவை போன்ற ஒரு உணர்ச்சி.

. . .

தன் மாமா சேகர் சென்ற பிறகும் மணி அந்தக் கத்தியையே வெறித்துப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தான். தன் இதயம் இத்தனை வேகமாகத் துடித்து அவன் பார்த்ததே இல்லை. நிகழ்ந்தது கனவா நனவா என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளக் கத்தியைத் தொட்டுப் பார்க்க நினைத்துக் கையை அதன் அருகே கொண்டு போனவன் சட்டென்று இழுத்துக் கொண்டான். துப்பறியும் கதைகள் படித்துள்ள அவனுக்கு ரேகை அடையாளங்கள் எத்தனை முக்கியம் என்பது நினைவுக்கு வந்தது. குறுகுறுத்த காதோரத்தை அவனுடைய கைகள் அவனையறியாமல் தடவிக் கொண்டன. விரல்களில் சில்லென்ற உணர்வு. திடுக்கிட்டுப் பார்த்தான். கைகளில் ரத்தம். கன்னத்தோடு உராய்ந்து சென்ற கத்தி காதோரத்தைக் கிழித்துக்கொண்டு போய்க் கட்டிலில் பதிந்திருந்தது.

மணி அதற்குமேல் அங்கு நிற்கவில்லை. பரபரப்புடன் அடுத்த அறைக்குச் சென்றான். புலித்தேவன் தோப்புக்குப் போய் வந்த பிறகு, தூங்கும் அவனைத் தொந்தரவு செய்யாமல் கீழே உள்ள அறையில் தான் படுத்துக்கொண்டு, மாடியிலுள்ள அடுத்த அறையில் பட்டு படுத்துக்கொள்ளுவாள் என்றும் சொல்லிவிட்டுச் சென்றிருந்தான் கிட்டு. ஆகவே மணி பட்டுவைச் சந்திக்க எண்ணினான். வராண்டாவில் மங்கலான இரவு விளக்கு எரிந்து கொண்டிருந்தது. பட்டு தூங்கும் அறையின் அருகே சென்று கவனித்தான் மணி. சலனமே இல்லை. 'இந்த வீட்டை அவர்கள் பார்த்துக் கொண்டு போய்விட்டார்கள்' என்ற தன் மாமா சேகரின் வார்த்தையும் அதையடுத்து வந்த கத்தியும் மணியின் உடலைக் குலுக்கி விட்டன. இதைக் கிட்டுவிடமும் பட்டுவிடமும் சொல்லி அவர்களை எச்சரிக்க வேண்டும் என்று துடித்தது மணியின் நெஞ்சம். ஒருவேளை சதிகாரர்கள் மறுபடியும் இந்த வீட்டைத் தாக்கினாலும் தாக்கலாமல்லவா? மெதுவாக அறைக் கதவைத் தட்டினான். பதில் இல்லை. (தொடரும்)

ஓம் சக்தி

(அ)

## ஜய பேரிகை

பல்லவி

ஜய பேரிகை கொட்டடா — கொட்டடா!
ஜய பேரிகை கொட்டடா!

சரணங்கள்

பய மெனும் பேய் தனை யடித்தோம் — பொய்மைப்
பாம்பைப் பிளந் துயிரைக் குடித்தோம்
வியனுல கனைத்தையு மமுதென நுகரும்
வேத வாழ்வினைக் கைப் பிடித்தோம் — (ஜய பேரிகை) (1)

இரவியி னொளி யிடைக் குளித்தோம் — ஒளி
இன்ன முதினை யுண்டு களித்தோம் —
கரவினில் வந்துயிர்க் குலத்தினை யழிக்கும்
காலன் நடு நடுங்க விழித்தோம் — (ஜய பேரிகை) — (2)

காக்கை, குருவி எங்கள் ஜாதி — நீள்
கடலு மலையு மெங்கள் கூட்டம்
நோக்குந் திசை யெலாம் நா மன்றி வே றில்லை
நோக்க, நோக்கக் களி யாட்டம் — (ஜய பேரிகை) — (3)

எந்நேரத்திலும்
எவ்விடத்திலும்
எச்சந்தர்ப்பத்திலும்







# கட்டாவ்

வாயில்கள்

தி கட்டாவ் மகன்ஜி ஸ்பின்னிங் அண்டு வீவிங் கம்பெனி லிமிடெட்
மில்ஸ்: பைகுல்லா, பம்பாய் - ஆபீஸ்: லக்ஷ்மி பில்டிங்ஸ், பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்-1

SISTA'S KMS 181

## வட்ட மேஜை

### சொர்க்கம்!

சொர்க்கம், நரகம் இவை உண்மையா, கற்பனையா என்பது பலருக்கும் நிச்சயமில்லாமல் இருக்கிறது. ஆனால் என்னைப் போல் எட்டு லட்சம் பேர்களுக்குச் சொர்க்கம் உண்டு என்றும், அதில் இப்போது நாங்கள் நிச்சயமாய் இருக்கிறோம் என்றும் நம்புகிறோம். சொர்க்கத்தில் உள்ளவர்களுக்குக் கடவுளைத் தவிர வேறு எவ்வித உறவோ, தொடர்போ கிடையாதது போல் எங்களுக்கும் சொந்தமாக ஒரு நாடு கிடையாது. ஒரு மொழி, ஒரு கலாசாரம் எதுவுமே கிடையாது.

யூதர்களைப் போல் நாங்கள் என்ன பாவம் செய்தோமோ தெரியாது. அவர்கள் ஹிட்லரிடம் பட்டதை நாங்கள் பண்டாரநாயகாவின் ஆட்சியில் படுகிறோம். உலக சமாதானமே லட்சியமாய்த் திரியும் நேரு ஒரு பண்டாவின் நன்மதிப்பைப் பெற லட்சம் கலர்க்க வாசிகளையும் அவர்களது நம்பிக்கையையும் அனேகமாக இழந்து விட்டார். எங்களுக்கு ஒரே ஒரு வழியுண்டு. அது மஞ்சள் அங்கிக்குள் மறைவதுதான். புத்தபிக்ஷு ஆனால் மட்டுமே இவ்விடம் வாழவிடுவார்கள்.

கொழும்பு
20—8—58 என். தேவன்

### புள்ளிவிவரச் சூழ்ச்சி

கல்கி 31-8-58ல் வெளி வந்துள்ள "அகடிதகடன சாமர்த்தியம்" இந்தி ஆதரவாளர்களின் புள்ளி விவரச் சூழ்ச்சியை அம்பலமாக்குகிறது. முதல் பரீட்சையில் தேறியதற்காகக் கொடுக்கப்படும் பத்திரத்திலுள்ள வாக்கியங்களுக்கே அதில் தேறிய பலருக்கு அர்த்தம் தெரியாது. பிரசார சபையினர் கொடுக்கும் புள்ளி விவரம் பரீட்சைக்குச் சென்றவர்களின் எண்ணிக்கையே தவிர தேறியவர்கள் எண்ணிக்கை அல்ல. எஸ்.எஸ்.எல்.ஸி.க்குச் சமம் என்றுகருதப்படும் "ராஷ்டிர பாஷா" பரீட்சை தேறியவர்களில் எவ்வளவு பேர்கள் சரளமாக இந்தி பேசத் தெரிந்தவர் என்று கணக்கிட்டால் 10 சதவிகிதம் கூட இருக்காது.

பம்பாய்—40
29—8—58 டி. ஆர். வேங்கடராமன்

### குடிதண்ணீர்ப் பஞ்சம்

தற்போது திருச்சி நகரில் இருந்து வரும் குடி தண்ணீர்ப் பஞ்சத்தை அறியாதார் யாருமிலர். அதிலும் மலைக் கோட்டை வாசிகள் தண்ணீருக்காகப் படும் அவதி சொல்லத்தரமன்று. அன்றாட வாழ்க்கைத் தேவை அனைத்துக்கும் இங்குள்ள மக்கள் குழாய்த் தண்ணீரைத்தான் நம்பி வாழ வேண்டியிருக்கிறது. கடந்த சில மாதங்களாக, தண்ணீர் ஒரு வார்டுக்கு நான்கு மணி நேரம் என்ற விகிதத்தில் விடப்படுகிறது. ஆனால் மலைக் கோட்டையில் மட்டும் காலை 5 அல்லது 5-30 மணிக்கு ஆரம்பித்து 7-30 மணி வரைதான் தண்ணீர் விடப்படுகிறது.

சம்பந்தப்பட்ட அதிகாரிகளைப் பேட்டி கண்டு எங்கள் கஷ்டங்களை விரிவாகத் தெரிவித்தும் இதுவரையில் யாதொரு நடவடிக்கையும் எடுக்கப்படவில்லை.

திருச்சி-2
30—8—58 அ. கல்யாணசுந்தரம்

### ஜில்லாப் பிரிவினை

தங்கள் ஆகஸ்டு 3-ந் தேதி கல்கி இதழில் வந்த "ஜில்லாப் பிரிவினை" தலையங்கத்தைப் படித்த பின் என் மனத்தில் எழுந்த சில கருத்துக்களைத் தெரிவிக்க ஆசைப்படுகிறேன்.

இரண்டு ஜில்லாக்களாகப் பிரிப்பது, மேற்கொண்டு உத்தியோகஸ்தர்களை நியமிப்பது போன்றவைகள் எந்த வகையில் சிக்கனத்தை அதிகமாக்கும் என்பது முதலில் புரியவில்லை.

இப்போது கலெக்டர்களைத் தலைநகரில் பார்ப்பது அரிதாகி விட்டது. மந்திரிகளுடன் சுற்ற வேண்டியிருப்பது, ப்ளாக் அட்வைசரி கூட்டம், கிராமத் தலைவர்கள் பயிற்சி முகாம், ஜில்லா திட்ட போர்டு கூட்டம், மதுவிலக்கு கமிட்டி கூட்டம், கவர்னருடன் சுற்றுதல்—இவைபோன்று மாதத்தில் இருபது நாட்கள் வெளியூர்ப் பிரயாணங்கள்.

இறுதியாக அவர்கள் வேலை பார்க்க முடிவது ஐந்து நாட்கள்தான். அவர்களுடைய வேலைகளைக் குறைப்பதற்கு ஒவ்வொரு வேலைக்கும் "முழுப் பொறுப்புக்கள்" உள்ள உதவியாளர்களை நியமித்தால் வேலையும் குறையும்.

ஜில்லாக்களைப் பிரிப்பதனால் எல்லைத் தகராறு, நீர்ப்பாசனத் தகராறு, பெயர்த் தகராறு, நிர்வாகத் தகராறு, மற்ற இலாகாக்கள் பிரிவினைத் தகராறு, போக்குவரத்துத் தகராறு போன்றவைகள் எழலாம்.

திருமங்கலம்
28—8—58 நாகப்பன்

### பட்டமளிப்பு விழா

பட்டமளிப்பு விழாவைக் கல்லூரிகளிலேயே நடத்த வேண்டும் என்று எதிராஜ் கல்லூரியில் வற்புறுத்திய மூதுபெரும் தலைவர் ராஜாஜி அவர்களின் யோசனையைச் சென்னை பல்கலைக்கழக உப அத்யக்ஷகர், ஸெனட் அங்கத்தினர்கள் ஏற்றுக்கொள்வது அவசியமாகும். தற்கால பட்டமளிப்பு விழாவில் மாணவர்கள் பங்கெடுத்துக்கொள்ள விருப்பமின்றித் தபால் மூலம் பெற்றுக் கொள்ள விரும்புகிறார்கள் என்று ராஜாஜி கூறியது முற்றிலும் உண்மையே. ஸெனட் ஹவுஸில் பட்டமளிப்பு விழாவில் பங்கெடுத்துக் கொள்ளும் மாணவர்கள் வசதிக் குறைவான நாற்காலிகளில் மணிக் கணக்கில் அமர்ந்து விழா துவங்கும் முன்பே பல்கலைக்கழக "கிளார்க்" கிடமிருந்து பட்டத்தைப் பெறுவதும், (பழைய நாட்களில் விழாத்தலைவரிடமிருந்தே மேடையில் பட்டம் பெறுவது பற்றி ராஜாஜி கூறியது இங்கு குறிப்பிடத் தக்கது) பெயர்கள் அழைத்தவுடன் இருந்த இடத்திலிருந்தே எழுந்து நிற்பதுமான இன்னல்களைத் தீர்க்க, ராஜாஜியின் திட்டத்தைத் தவிர வேறு வழியில்லை.

கோவை
28—8—58 ஒய். வி. விஸ்வேஸ்வரன்

பதினொன்காம் அத்தியாயம்

# சிரிப்பிலே மறைந்த கோபம்




மல்லிகா ஆடிய நாடகப் போலவே நடராஜனுக்குள்ளே சந்தேகப் பேய்கள் கூத்தாடிக் கொண்டிருந்தன. விபரீதமான எண்ணங்கள் சுழன்று சுழன்று துளைத்தெடுத்தன. அதனால் ஏற்பட்ட வேதனையிலே, அவனைத் தனக்கு விட்டுக் கொடுக்கும்படி மல்லிகாவிடம் சென்று விமலா கெஞ்சியிருந்தால், அதில் நியாயம் இருக்கிறது என்பது மறந்து போயிற்று. ஆத்திரமும் கோபமும் உள்ளத்தில் நிறைந்து உண்மையைத் திரை போட்டு மறைத்தன.

குமிழியிட்டுக் கொதித்தெழுந்த கோபத்துக்கிடையே ஒரு எண்ணம். 'இந்தக் காரியத்தை விமலா தானாகவே செய்திருக்க மாட்டாள். நிச்சயம் வேறு யாருடைய தூண்டுதலோ இருக்கிறது. அது மணிசேகரனாகத்தான் இருக்க வேண்டும்'.

"மணியாகத்தான் இருக்க வேண்டும்! மணியாகத்தான் இருக்க வேண்டும்!" நடராஜனுடைய விரல்கள் காரின் 'ஸ்டீயரிங்'கை அழுத்தமாகப் பற்றி ஒரு திருப்புத் திருப்பின.

பின்னால் வந்து கொண்டிருந்த இன்னொரு கார் அதன் மீது இடித்து விடாமல் பெரிய சத்தத்துடன் ஒரு குலுங்குக் குலுங்கி நின்றது. அதனுள் இருந்த டிரைவர் ஏதோ திட்டினான். சாலையில் சென்று கொண்டிருந்த ஒருவன் அலறிப் புடைத்துக் கொண்டு வேகமாக ஒதுங்கிப் பிழைத்து, பிறகு சபித்தான்.

வீட்டை நோக்கிச் சென்ற நடராஜனின் கார் இப்போது மணிசேகரனுடைய அறையை நோக்கிச் சீறிக் கொண்டு பாய்ந்தது.

கதவைத் திறந்த மணி நடராஜனைக் கண்டதும், "வரணும் வரணும்! ஏது இப்படி அடியேனிடம் திடீரென்று கருணை பிறந்து விட்டது?" என்று உரிமையுடன் மறைமுகமாகக் குற்றம் சாட்டிக் குதூகலமாகச் சிரித்துக் கொண்டே வரவேற்றான்.

"கருணை பிறந்துதான் நான்கு உதைகளைத் தானமாகக் கொடுத்துச் செல்லலாம் என்று வந்தேன்!"—நடராஜன் உள்ளத்தில் கொதித்த கோபம் ஆவியை வெளிப்படுத்தி மணியைச் சுட்டது. அவன் மார்பின் மீது வலக்கரத்தை ஊன்றி ஒரு தள்ளுத் தள்ளினான் நடராஜன். தானும் உள்ளே நுழைந்து கதவைப் படீரென்று ஓங்கிச் சாத்தித் தாளிட்டான்.

"அடேய்! விமலாவிடம் என்ன சொன்னாய்? மரியாதையாகச் சொல்லி விடு! என்னவெல்லாமோ பேசி அவள் மனத்தைக் கெடுத்து விட்டிருக்கிறாய்?"

"அவளுடைய உள்ளம் கெட்டுப் போகவில்லை. தூய்மையாகத்தான்




# டீ கெர்ல் டீ டஸ்ட்

## இது சிறந்த ஸ்ட்ராங் டீ தருகிறது

LIPTON (INDIA) LTD. ( *Incorporated in England* )

---

## ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ் ஜலதோஷத்தை நிறுத்துக

ஆஸ்த்மா பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத் திணறல் இருமல், தும்மல் மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றிச் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.

---

## முகப் பருக்கள் நீங்கி விடுகிறது -3 நாளில் அதன் மூலகாரணம் கொல்லப்படுகிறது

நிக்ஸோடர்ம் (Nixoderm) முதல் முறையில் உபயோகிக்கத் தொடங்கியதுமே முகப்பருக்கள் எல்லாம் மாயமாய் மறையத் தொடங்குகின்றன. இன்றிரவே நிக்ஸோடர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். விரைவில் உங்கள் சருமம் மிருதுவாகவும், வழவழப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், பிளவைகள், தேமல்கள், கரப்பான், படை, கட்டிகள் இவைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் கொல்லும் ஒரு புதிய முறை. இன்றே உங்கள் கெமிஸ்டிடமிருந்து நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை ஒழித்து உங்கள் சருமத்தை சுத்தமாகவும், மிருதுவாகவும், வழவழப்பாகவும் செய்ய உத்தரவாதம். அன்றேல் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் பணம் வாபஸ்.

**Nixoderm**
நிக்ஸோடர்ம்
சரும உபாதைகளுக்கு



" அடாடா! என்ன நடிப்பு! என்ன நடிப்பு! ஒன்றுமே தெரியாதவன் போல் பாசாங்கு செய்கிறாயே? சினிமாக் கம்பெனியில் சேர்ந்தவனல்லவா?"

" நிஜமாகவே எனக்கு ஒன்றும் தெரியவில்லை, நடராஜா! சொன்னால்தானே தெரியும்?" என்றான் மணி.

" பொய் சொல்லாதே! மல்லிகா விரித்த வலையில் நான் விழுந்து விட்டதாக விமலாவிடம் என்னைப் பழித்துக் கூறவில்லையா? அவள் காலில் விழுந்து என்னை விடுவிக்கும்படி கேட்கச் சொல்லவில்லையா? அவளும் உன்னுடைய பேச்சை நம்பி எனக்காக மல்லிகாவிடம் போய்க் கெஞ்சவில்லையா?"

" அடப் பாவி!"

நடராஜனுடைய கோபமெல்லாம் மணியின் அடித் தொண்டையிலிருந்து

வெளி வந்த அந்த இரு சொற்களில் அடிபட்டுப் போயின. அழுத்தம் திருத்தமாகக் கூறப்பட்ட வார்த்தைகள் மணிக்கு இதுசம்பந்தமாக ஒன்றுமே தெரியாது என்பதைப் 'பளிர்' என்று எடுத்துக் காட்டின. குற்றம் புரிந்து கொண்டிருந்த குழந்தை தாயாரைக் கண்டதும் 'திருதிரு' வென்று விழிப்பதைப் போல் விழித்தான் நடராஜன்.

"ஈவிரக்கமற்ற அரக்கனடா நீ! நடராஜா! டாக்டராகிய உனக்கு உயிரும் உணர்ச்சியும் அற்ற மனித உடல்களைப் பார்த்துப் பார்த்து மனம் கல்லாகி விட்டது! மனித உடல்களை அறுத்து அறுத்து உள்ளம் இரும்பாகி விட்டது! மலர் போன்ற இதயத்தை வாட்டி வதைத்தாய். உதாசீனம் செய்தாய். அவள் வேறு என்ன செய்வாள், பாவம்! உனக்காக முன்பின் தெரியாத ஒருத்தியின் காலில் விழுந்து கெஞ்சும்படி செய்து விட்டாய்! நீ செய்த குற்றத்துக்கு என் மீது பழி சுமத்துவதற்கும் பார்க்கிறாய்!"

அவமானமும் வெட்கமும் உடலைக் குன்றச் செய்யக் கதவைத் திறந்தான் நடராஜன், வெளியே போக.

'சற்றுப் பொறு, நடராஜா! நான் இன்னும் முடிக்கவில்லை! கேட்டு விட்டுப் போ! மல்லிகாவின் மதிவதனம் உன்னை மயக்கலாம். ஆனால் உள்ளத்தின் தெளிவை அந்த முகம் பிரதிபலிக்காது. அது விமலாவிடம் உண்டு. மனத்தைக் கவரும் கண்கள் மாசற்றதாக இருக்காது. விமலாவின் கண்களை நீ கூர்ந்து பார்த்தால் அங்கே தெய்விகக் காதல் ஜோதி சுடர் விடுவதைக் காண்பாய். மல்லிகாவின் அதரங்கள் மென்மையாக இருக்கலாம். ஆனால் அது உண்மையைப் பேசாது. விமலாவின் பேச்சிலே வஞ்சகத்தைக் கேட்க முடியாது. பட்டு ரோஜாக் கன்னங்கள் பண்பை உனக்குக் காட்டாது. கரு விழிகளிலே கருணை கிடைக்காது. ஆட்டத்திலே ஆடம்பரம் மிளிரலாம். ஆனால் ஆறுதல் பெற முடியாது. நடையிலே துள்ளல் இருக்கலாம். தூய்மையைக் காண முடியாது. விமலாவின் நடை அடக்கமாக இருக்கும். அன்பைச் சொரிவாள். அவளை அலட்சியம் செய்யாதே' என்றெல்லாம் சொல்ல நினைத்தான் மணி. ஆனால் உணர்ச்சிப் பெருக்கில் நா எழவில்லை. "நடராஜா! வெளி அழகில் மயங்கி அந்த உத்தமியைக் கைவிட்டு விடாதே" என்று மட்டும் சொல்லி நிறுத்திக் கொண்டான்.

* * *

மறைந்திருந்த உண்மை வெளிப்பட்ட போதிலும் நடராஜன் அதை ஒப்புக் கொள்ளத் தயாராக இல்லை. விமலாவிடம் அவனுக்கு ஏற்பட்டிருந்த கோபமும் வெறுப்பும் குறையவில்லை. நர்ஸிங்ஹோமில் தன் காரியங்களை இயந்திரத்தைப் போல் செய்து முடித்து விட்டுத் தன் அறையில் போய் ஒரு புத்தகத்தைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தான். மனம் அதில் லயிக்கவில்லை.







கதவு திறந்து கொண்டது. "மணி பத்தாகிறது. அத்தான்! சாப்பிட வாருங்கள்" என்றாள் விமலா.

"சாப்பாடும் வேண்டாம் ஒரு மண்ணும் வேண்டாம்!" சிறு பிள்ளையைப் போல் பிடிவாதம் செய்தான் நடராஜன்.

"நிஜமாகவே வேண்டாமா? அல்லது நான் அழைப்பதால் உங்களுக்குச் சாப்பாடு வேண்டாமா?"

"அநாவசியமான கேள்வி!"

விமலா திரும்பிப் போய்விட்டாள். புத்தகத்தை வெறுப்புடன் தூக்கி ஒரு மூலையில் எறிந்தான் நடராஜன். அவளிடம் உள்ள கோபத்துக்குப் புத்தகம் என்ன செய்யும்? அதை எடுத்துக் கொண்டு வந்து தட்டி வைத்தான். மண்டை கனத்தது. உன்மத்தம் பிடித்தவனைப் போல் அறைக்குள்ளே அலைந்தவனுக்கு ஒவ்வொரு அடியை எடுத்து வைக்கும் போதும் நெற்றிப் பொட்டுகள் 'விண் விண்ணெ'ன்று தெறித்தன. நடந்தது நடக்கப் போவது எல்லாவற்றையும் மறந்து கட்டையாகக் கிடக்க விரும்பி அலமாரியைத் திறந்து தூக்க மாத்திரைகள் அடங்கிய புட்டியைக் கையில் எடுத்தான்.

மாத்திரைகளை விழுங்கத் தண்ணீர் இல்லை என்று கண்டதும் நர்ஸ் நிர்மலாவையோ அல்லது பவானியையோ

கூப்பிட நினைத்தான். அதற்குள் மறுபடியும் கதவு திறந்துகொள்ள அங்கே விமலா பால் செம்புடன் நின்றாள்.

"சாப்பாடு தான் வேண்டாம் என்று கூறி விட்டீர்கள். கொஞ்சம் பாலாவது சாப்பிடுங்கள்."

அவள் கரிசனமும் உபசாரமும் திருப்தியையும் மகிழ்ச்சிக் கிளுகிளுப்பையும் அளித்த போதிலும் வெளிப்படையாக "வேண்டாம்" என்று சொல்லி உதறினான்.

"என்மீதுகோபமா? பால் மீது கோபமா? பால் தவறு ஒன்றும் செய்யவில்லை. சாப்பிடுங்கள்" என்றாள்.

"நீதான் எல்லாவற்றுக்கும் சேர்த்து வைத்துத் தவறுக்கு மேல் தவறாகச் செய்து வருகிறாயே!"

"அதற்குத் தண்டனையும் கொடுத்து வருகிறீர்களே. என்னுடன் முகம் கொடுத்துப் பேசுவது கூட இல்லையே?"

"வெட்கம் மானம் இல்லாதவனுடன் என்ன பேச்சு வேண்டிக் கிடக்கிறது?"

"அப்படி என்ன செய்து விட்டேன்? அதையாவது சொல்லுங்களேன்."

"இன்னும் என்ன செய்ய வேண்டும்? மல்லிகாவின் காலில் விழுந்து கெஞ்சியதால் என்னைக் காப்பாற்றி விட்டதாக எண்ணமோ? கல்யாணமாவதற்கு முன்னாலேயே பதிவிரதை! நீ பதிவிரதையாக இருக்க விரும்பினால் வாயை மூடிக் கொண்டு வீட்டுக்குள்ளேயே இருந்திருக்க வேண்டும்!"



## பிரபல திருமணம்!

பேட்டை ஸ்ரீ சி. என். முத்துரங்க முதலியார் அவர்களின் சகோதரர் ஸ்ரீ சி. என். எவளப்ப முதலியார் அவர்களின் குமாரி செல்வி கற்பகத்துக்கும், கோயமுத்தூர் ஸ்ரீ எம். எஸ். பழனியப்ப முதலியார் அவர்களின் குமாரர் செல்வன் நடராஜன் அவர்களுக்கும் ஆகஸ்டு மாதம் இருபத்தெட்டாம் தேதி சென்னை 'ஆபட்ஸ்பரி' பங்களாவில் சிறப்பாகத் திருமணம் நடைபெற்றது. காலையில் நடந்த முகூர்த்தத்துக்கும், மாலை வரவேற்பின் போது நிகழ்ந்த ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி அவர்களின் இன்னிசைக் கச்சேரிக்கும் ஏராளமான நண்பர்களும், உறவினர்களும், சென்னை கவர்னர் ஸ்ரீ விஷ்ணுராம் மேதி தம்பதிகளும் மந்திரிமார்களும், நீதிபதிகளும், சென்னை நகரப் பிரமுகர்களும் விஜயம்செய்து சிறப்பித்து மணமக்களுக்கு ஆசிகூறினார்கள். நாட்டின் பல பாகங்களில் இருந்தும் மணமக்களுக்கு ஏராளமான வாழ்த்துச் செய்திகளும், பரிசுகளும் வந்து குவிந்தன. இவ்வளவு சிறப்புடன் திருமணம் புரிந்து கொண்ட இளந்தம்பதிகள் நீடூழி வாழ்ந்து இல்லறம் புரிய இறைவன் தண்ணருள் புரிவானாக!

"யாரோ பொய் சொல்லி உங்களை ஏமாற்றி யிருக்கிறார்கள். நான் அப்படிச் செய்யவே யில்லை."

"யார் பொய் சொல்கிறார்கள் என்று எனக்குத் தெரியும்" என்றான் நடராஜன் ஏளனமாக.

"மல்லிகாவின் வீட்டுக்கு நான் போனேன். உண்மைதான். நம்முடைய திருமணம் சிறு பிராயத்திலிருந்தே நிச்சயமான விஷயம் என்று தெரியப் படுத்தினேன். ஆனால் அவள் காலில் விழவும் இல்லை, கெஞ்சவும் இல்லை. என் வருங்காலக் கணவனை அவ்வளவு கேவலமாக மதிக்கவில்லை. மல்லிகாவின் காலில் விழ அவனை அவ்வளவு உயர்வாகவும் எண்ணவில்லை!"

கண்ணைப் பறிக்கும் மின்னலின் வேகத்தோடு வெளிவந்த பதில் நடராஜனைத் திணற அடித்தது. சிறிது யோசித்ததில் அவள் சொல்வதில் உண்மை இருக்கலாம் என்று நம்பினான். விமலா தன்னிடம் கெஞ்சிக்கேட்டதாகவோ காலில் விழுந்ததாகவோ மல்லிகா என்னிடம் சொல்லவே யில்லையே? கற்பனையைச் சிறகடித்துப் பறக்கவிட்டது விமலா அல்ல, தானேதான்!

பதில் பேசத் தெரியாமல் பால் செம்பை வாங்கி ஒரு வாய் குடித்தான். தூக்க மாத்திரைகளின் நினைவு வந்தது. புட்டியிலிருந்த இரண்டே இரண்டு மாத்திரைகளைக் கையில் எடுத்துக் கொண்டான்.

மருந்து புட்டியின் மேல் ஆங்கிலத்தில் சிவந்த எழுத்துக்களில் 'விஷம்' என்றிருப்பதைக் கவனித்தாள் விமலா.

"ஐய்யோ! இதென்ன அத்தான் விஷம் என்று எழுதியிருக்கிறதே?"

"ஆமாம்! விஷம்தான் சாப்பிட்டுச் சாகப் போகிறேன்" என்று சொல்லிக் கொண்டே மாத்திரைகளை விழுங்கினான் நடராஜன். வெகுளிப் பெண் விமலா தான் கோபமாகப் பேசியதால் வெறுப்படைந்து செய்யத் தகாததைச் செய்து விட்டதாக நம்பிப் பதறிப்போய் அவன் கால்களைக் கட்டிக் கொண்டு, "அத்தான்!" என்று கதறி விட்டாள்.

நடராஜனுக்கு அடக்க முடியாமல் சிரிப்பு வந்துவிட்டது. சிரிப்பைக் கேட்டுச் சந்தேகமும் பயமும் கலந்த பார்வையுடன் அவனை நோக்கிய விமலாவிடம், "அசடே! தூக்க மாத்திரை இது. முப்பது நாற்பது என்று விழுங்கினால் தான் நிரந்தரமாகத் தூங்க முடியும். இரண்டு மாத்திரைகள் விழுங்கினால் இன்று இரவுமட்டும்தான் தூங்கலாம்" என்றான் நடராஜன்.

பயம் தெளிந்த விமலா நிம்மதியாக அவனுடன் சேர்ந்து சிரித்தாள். அந்தச் சிரிப்பிலே பதினைந்து நாட்களின் கோப தாபங்கள் இருந்த இடம் தெரியாமல் மறைந்து போயின. காதலர்கள் இருவரும் கரம் கோத்துக் கொண்டு வீட்டுக்குச் சென்றார்கள்.

வாசலை நெருங்கியபோது, "எனக்குப் பசிக்கிறதே?" என்றான் நடராஜன், வயிற்றைத் தடவியவாறே.

"நல்ல அத்தான், நீங்கள்! யார் மீதோ கோபித்துக் கொண்டு வீம்புக்காகச் சாப்பிடாமல் பட்டினியா கிடப்பார்கள்? அம்மா சாதத்தில் தண்ணீர் விடாமல் இருக்க வேண்டுமே?" என்று சொல்லிக் கொண்டே அவனுக்கு முன்னால் ஓடினாள் விமலா.

தட்டைக் கழுவி வைத்துப் பரிமாறினாள். அத்தங்காள் பரிமாற அம்மாவும் அத்தையும் உபசாரம் செய்ய, பகாசுரனாக மாறி உருட்டி உருட்டி உள்ளே தள்ளினான் நடராஜன்!

## பதினேழாம் அத்தியாயம்

# கொழும்பு நகரிலே...

இந்தக் கதையை மேலே தொடருவதற்கு முன்னால் வாசகர்கள் சில அதிசயமான, ஆனால் உண்மையான விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டும். பின்னால் வரப் போகும் கதையை நன்கு புரிந்து கொள்ள இது அவசியமாகிறது.

பாரத நாட்டிலிருந்து இன்னொரு நாட்டுக்குப் போக வேண்டுமானால் அதற்கு அரசாங்கம் பாஸ்போர்ட் அளிக்க வேண்டும். அது இல்லையானால் கப்பல்பிரயாணத்துக்கோ, விமானப்பிரயாணத்துக்கோ டிக்கெட் வாங்கவே முடியாது. பாஸ்போர்ட் எடுப்பதும் சுலபமான காரியம் அல்ல.

உங்களுடைய பெயர், ஈடுபட்டிருக்கும் தொழில், சொந்த ஊர், விலாசம், சர்க்காருக்குச் செலுத்தவேண்டிய வரித் தொகைகள் முதலிய பலவற்றையும் பற்றி அதிகாரிகள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் கூற வேண்டும். அதற்கும் பிறகு ஒரு ரகசிய போலீஸ் விசாரணை நடைபெறும். உங்கள் வீட்டுக்கு அருகே உள்ளவர்களிடம் உங்களைப் பற்றி விசாரிப்பார்கள்.

பக்கத்து வீட்டுக்காரர் யோக்கிய மானவர்தானா? வெளிநாடுகளுக்குச் சென்றால் நம் நாட்டின் மானத்தைக் காப்பாற்றுவாரா? அல்லது அவர் கப்பல் ஏறும்போது கூடவே தாய் நாட்டின் மானத்தையும் கப்பல் ஏற்றி விடுவாரா? என்றெல்லாம் சந்தேகத் துக்கிடமில்லாமல் கேட்டு நிச்சயம் செய்து கொண்ட பின்னர்தான் 'பாஸ் போர்ட்' கொடுப்பார்கள்.

இந்த வகையிலே பார்க்கும்போது நம்முடைய கதிர்வேலனைப் போன்ற வர்களுக்குப் பாஸ்போர்ட் கிடைப்பது நடவாத காரியம் என்பது தெளிவு. அப்படிப்பட்ட பரிதாபகரமான நிலை யில் உள்ளவர்கள் அதற்காக வருத்தப் படுவதே இல்லை. தாங்களாகவே பாஸ் போர்ட்டைத் திறம்படத் தயாரித்துக் கொண்டு அதிகாரிகளுக்குப் 'பெப்பே' காட்டி விடுவார்கள்!

அன்னிய நாடுகளைவிடப் பாரத நாட்டில் பல பொருள்களின் விலைகள் அதிகம். இறக்குமதி வரிகள் இதற்கு ஒரு காரணம். இந்த இறக்குமதி வரி களைக் கொடுக்காமல் ஏமாற்றி அயல் நாட் டுச் சாமான்களைக் கொண்டு வர முடியு மானால் ஏராளமான லாபத்துக்கு விற்க லாம்; அப்படி விற்றுக் கொண்டும் சிலர் இருக்கிறார்கள்.



'கஸ்டம்ஸ்' அல்லது சுங்க இலாக்காவினர் ஒவ்வொரு துறை முகத்திலும் விமான நிலையத்திலும் இருந்துகொண்டு இதைத் தடுத்து வருகிறார்கள்.

இப்படிக் கள்ளத்தனமாகக் கடத்தப் படும் பொருள்களில் மிகவும் முக்கிய மானவை தங்கம், வெள்ளி, வைரம் முதலிய மனிதன் உரிமை கொண்டாட விரும்பும் விலையுயர்ந்த பொருள்களும் கஞ்சா அபினி போன்ற லாகிரி வஸ்துக் களும்தான்.

வெளி நாடுகளில் இந்தப் பொருள் களை வாங்கப் பணத்துக்கு என்ன செய் வது என்ற கேள்வி எழுகிறதல்லவா?

பர்மா, மலேயா, இலங்கை முதலிய நாடுகளில் இந்தியர்கள் குடியேறியிருக் கிறார்கள். ஆகவே அந்த நாடுகளில் இந்திய நாணயத்துக்கு மதிப்பு அதிகம். தங்கத்தையும் வைரத்தையும் கடத்திச் செல்வது போலவே பணத்தையும் கள்ளத்தனமாகக் கடத்திச் செல்கிறார் கள். இதையும் தவிர, பாரசீக வளைகுடா பிரதேசத்தில் இந்திய நாட்டு நாணயம் சட்டப்படியே செல்லுபடியாகும்.

இந்தக் கள்ளக் கடத்தல் வியாபாரங் களை மிகப் பெரிய அளவில் நடத்தும் ஒரு கூட்டம் இருக்கிறது என்றும் உலகம் முழுவதும் அவர்களுடைய கிளை ஸ்தா பனங்களும் அங்கத்தினர்களும் இருக் கிறார்கள் என்றும் நம்பப்படுகிறது.

இவர்களுடைய நடவடிக்கைகளைக் கவனித்துக் கண்டுபிடிக்கச் சர்வதேச போலீஸ் படை ஒன்றும் இருக்கிறது.

* * *

நான்கைந்து நாட்களுக்குப் பிறகு சுகுமாரன் விரும்பியபடியே, பாஸ் போர்ட்டுகள் விமான டிக்கெட்டுகள் முதலானவற்றுடன் அவருடைய வீட் டுக்கு வந்தான் மணி. அவற்றை வாங் கிப் பத்திரமாக மேஜை டிராயரில் வைத்துப் பூட்டினார் சுகுமாரன்.

பின்னர் மணியின் அருகே வந்து அவன் தோளின் மீது கையை வைத்துப் பற்றிக் கொண்டார். "மணி! அன்று ஏதோ கோபத்தில் இரைந்து பேசி விட்டேன். அதை யெல்லாம் மனத்தில் வைத்துக் கொள் ளாதே. மறந்துவிடு!"

"நான் மறந்து எத் தனையோ நாட்களா கின்றன. நீங்கள்தான் இப்போது அதைப் பற்றிமறுபடியும் ஞாப கப் படுத்திக்கொண் டிருக்கிறீர்கள்."

அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தார் சுகுமாரன். "நீ ஒருவன் இல்லாவிட் டால் என்பாடு திண்டாட்டம்தான். அன்று நீ சொன்னதை யெல்லாம் பற்றி யோசித்துக் கொண்டுதான் இருக்கிறேன். இலங்கையிலிருந்து நான் திரும்பியதும் அதைப் பற்றி ஒரு முடிவு செய்து விடுவோம். அதுவரை கலாட்டா ஒன்றும் இல்லாமல் தொழி லாளர்களைப் பார்த்துக் கொள்ள வேண் டியது உன் பொறுப்பு."

மணி வியப்பிலாழ்ந்து போனான். எண்ணி ஐந்து நாட்களுக்கு முன்னால் தான், 'நீயும் இலங்கைக்கு வருகிறாய்!' என்று சத்தம் போட்டார். இன்று 'நான் திரும்பும்வரை' என்று பேசு கிறார். அதைப் பற்றிக் கேட்டால் மறு படியும் ரகளை நடக்குமோ?

"என்ன மணி பதிலே பேசமாட் டேன் என்கிறாய்? 'கவலைப்படாமல்



# கல்யாணியின் கைமணம்



ஆசிய மேதையான என் மாமனார், காரசாரமான அவரது விமர்சனம், மகா கனம் பொருந்திய ஒரு தோரணேடரல் — இடையேன இம் மார்கழி மாதம் இவ்வளவுக்கும் வரவேற்பு அளித்தது எங்கள் வீடு. அதிதியைத் திருப்தி செய்வதற்காக என் மனைவி கல்யாணியும், நானும் விருந்த சிரமம் எடுக்கவேண்டியதாயிற்று.





"வீடும் ஆபீசுமாக அடைந்து கிடக்கிறேயே விஷய ஞானம் தேடாமல்!" என்ற அவரது மதிப்புரைக்கு இலக்கானேன். கல்யாணியும் அப்பாவோடு ஒத்துப்பாடினுள். சில வாரங்களாக ஊரில் நிமிஷேரப்படும் சர்க்கஸுக்கு அழைத்துப் போகவில்லை என்ற குறை அவளுக்கு. "பழனைகள் கிழதேட்டி மடிவதற்கு முன்னுலாவது அழைத்துப்போவீர்களா?" என்று வளைத்துக்கொண்டாள்.

"இந்தக் கடுக்கும் குளிரில் காலரியில் உட்கார வேண்டுமானால் முதலில் அந்த நைந்த காலத்துப் பெட்டியிலிருந்து ஸ்வெட்டர், மப்ளர் முதலியவற்றைத் தேடிப்பிடி" என்று தட்டிக் கழித்தேன். காலையில் பஸ் பிரயாணத்தின்போது நெருக்கம்பம் செய்து, எட்டு மணிநேரம் ஆபீஸில் சமாதியாகி, வீடு திரும்பியதும் துஷ்ட விலங்குகளோடு தாக்குப்பிடிக்கும் என் வாழ்க்கையே ஒரு சர்க்கஸ் என்று கூறத் துணிவின்றி குளிரைப்பற்றி மட்டுமே குறிப்பிட்டு வைக்க முடிந்தது — அடங்கிய ஜந்துவைப்போல,

அன்று ஆபீஸிலிருந்து வந்ததும் வராததுமாக, குளிர்தடுக்கமான சால்வை பொன்று கிடைக்குமா என்று அந்தப் பழம் பெட்டியை நாடினேன். இடைமறித்த கல்யாணி, "காப்பியுடன் உங்களுக்கு ஏதாவது வேண்டுமென்று இஷ்டமுண்டானால் பரண் மேலிருக்கும் ஈவர் வாடு சம்புடத்தை தயவுசெய்து எடுத்துக் கொடுங்கள்" என்றாள். மணிபொன்றுக்கு இரண்டு வாடு விகிதம் அபேஸ் செய்துவந்த அம்பிப் பயலின் விஷமத்தின் விளைவாக, பரணைச் சரணடைந்து விட்டதாம் அந்த சம்புடம்!

உடனே மூன்கட்டியிருந்த ஓடிசல் மேஜை, கெக்கலிக்க அடக்கிப் பழகியதுபோல பாவனை செய்த மூட காற்றாலி எல்லாமாக சமையலறையில் குடியேறி, ஒன்றன் மீது ஒன்றாக அடுக்கப் பட்டன. நான் மின்சார ரிப்பேர் செய்ய நேரும்போதெல்லாம் இந்த சர்க்கஸ் வித்தை நடைபெறுவதுண்டு. இப்போது, மேலே ஏறி, சம்புடத்தைத் தொட்டதும் மின்சாரம் தாக்கியது போல அப்பால் தள்ளிவிட்டேன் — காரணம்: சாகலைத்து ஆக்கிரமித்திருந்த எறும்புப் படையின் அணிவகுப்பு!

"பிள்ளையார் எறும்புதான், கடிக்காது" என்று சொடுத்தாள் கல்யாணி. எறும்பைப்பற்றி நான் தெரிந்துகொள்ள வேண்டியது அநேகம் என்று விரிவுரை தொடங்கிவிட்டார் பேராசிரியர். எறும்பினத்தின் உணவுப் பழக்க வழக்கங்கள் என்ன என்றும், குளிர்காலத்தில் ஒதுங்கி வாழும் ஜந்துக்களில் ஒருசில (பியர் என்னும் ஒருவகை கரடியை மேற்கோளாகக் காட்டினார்) அதற்கான உணவுகளை அதற்கு முன்பான கோடையின்போதே சேகரித்துக் கொள்கின்றன என்றும், வேறு சில ஜந்துக்கள் குளிருக்கு முந்தைய விளைச்சலின்போதே வயிறு புடைக்க உண்டு, உடம்பில் கொழுப்புச் சத்தைச் சேமித்துக்கொண்டு அதன் பலனாக குளிர்கால முழுமையும் உண்ணாவிரதம் இருந்துவிடுகின்றன என்றும் விளக்கினார். வருடத்தில் மூன்று மாதம் நடைபிணையைப் போல அடைபட்டிருக்கும் அந்த ஜந்துக்கள், வருஷ முழுமையும் அடைபட்டுள்ள என்முன் எம்மாத்திரம் என்பதையும் குத்தலாகக் குறிப்பிட்டார்.

DL. 447A-19 TM

னைத்துத் தவிலேபோடு என்னை ஒப்பிட்ட இந்த விமர்சனத்தை நான் ஆட்சேபித்ததும், அவர் "அதோடிருந்தால் தேவலையே. ஆள் உப்பிப்போயிருக்கிறயே, போன வருஷத்திற்கு இந்த வருஷம் நான் பார்த்ததற்கு. சமையலின் விசேஷமோ?" என்றார். உடனே உடக்கடி பதில் கொடுக்க வாயெடுத்தேன், ஆனால் — சுரீரென்று வலித்தது உதட்டில்!

ஆம், குளிரால் பாளமாகப் பிளந்திருந்த வெடிப்பு அது. வலியைத் தணிப்பதற்காக, சட்டென்று சமையலறையில் புகுந்து நெய்க்காக வேட்டையாடினேன். கிடைத்தால்தானே! ஓசைப்படாமல் கல்யாணியைக் கூப்பிட்டு "ஒரு சொட்டு நெய்கூட இல்லாமல் பேஷாக நடக்கிறதே சமையல்! அதிதிக்கு எதைப் பரிமாறுவதாக உத்தேசமோ?" என்றேன்.

"ஏன்? டால்டா வனஸ்பதி இருக்கிறதே. தினமும் நாம் உபயோகிக்கவில்லையா?" என்றாள்.

"நமக்கு சரிப்படலாம், கல்யாணி, உங்கப்பாவுக்கு? சகலகலா மேதாவியாச்சே அவர். வனஸ்பதியைப் பத்தி எப்படி அபிப்பிராயப்படுகிறாரோ...?"

அந்தரங்கமாகப் பேச நினைத்த இவ்விஷயத்தைக் கேட்டுத் தொலைத்துவிட்ட மாமனார் திடீரெனக் குறுக்கிட்டு "அழகாயிருக்கிறதே கல்யாணி! உன்னம்மா எனக்கு சமைத்ததும் போதும் அதே வனஸ்பதியை நீங்கள் அன்றாடம் உட்கொள்வதோடு நில்லாமல், உங்கப்பாவுக்கு மட்டும் தரமாட்டேன் என்று ஏன் வஞ்சனை செய்கிறாய்? — மாப்பிள்ளை, டால்டாவைப் பத்தி நீங்கள் சில உண்மைகளை உணரவேண்டும்..." என்று பிடித்துக்கொண்டார்.

"தெரியும் மாமா, எனக்கு ஏற்கனவே. சுத்தமான, புத்தம் புதிய தாவர எண்ணெய்களாலானதே டால்டா வனஸ்பதி. வைடமின் 'டி'யும், நெய்யிலுள்ள அதே அளவு வைடமின் 'ஏ'யும் டால்டாவில் சேர்க்கப்பட்டுள்ளன. அந்த வைடமின்கள் நமது பற்களையும், எலும்புகளையும் வலுவாக்கி, நோய்களை எதிர்த்துநிற்கும் சக்தியை வழங்குகின்றன. எல்லாவித சமையலுக்கும் பயன்படக் கூடியது டால்டா என்பதை உணர்ந்தவர்களே நாங்கள். போதுமா? ... என்றேன் மடமடவென்று.

வியப்பு மேலிட்டால் வாயடைத்து நின்ற மாமனார், "பரவாயில்லையே உன் அறிவு! சமையலைப் பொறுத்தவரையில் நான் ஏதும் குறை சொல்வதற்கில்லைதான். உன் உடம்பும் போன வருஷத்திற்கு இந்த வருஷம் ..." என்று ஒத்துக்கொண்டார்.

இதே சமயம் பெட்டியிலிருந்து ஒரு ஸ்வெட்டர் மீட்கப்பட்டது. அதனுள் புகுந்துகொள்ளதற்கு நான் ஒரு மல்யுத்தமே நடத்தவேண்டியிருந்தது: அவ்வளவு இறுக்கம்! "பெருத்திருக்கிறாய் என்று நான் சொன்னபோது நம்பாதவன் நீ. இதோ ஸ்வெட்டர் சொல்கிறது" என்று மடக்கினார் மாமனார்.



"ஆபத்துத்தான், இப்போது புது ஸ்வெட்டர் வாங்கப் பணம்?" என்று முனகினேன். "என்னிடமிருக்கிறதே!" என்று இறுமாந்த வண்ணம், பேரிச்சை மர அடையாளமிட்ட மாதிரி டால்டா டின் ஒன்றைக் கொணர்ந்து, அதனுள் மினுக்கும் கற்பூரத்துக்குமிடையே தவம் கிடந்த பத்து ரூபா நோட்டுகள் இரண்டை என்னிடம் உற்சாகத்துடன் நீட்டினாள் கல்யாணி!

இதோ ஒப்புக்கொண்டுவிடுகிறேன்: சமையலைப் போலவே சிக்கனத்திலும் தேர்ந்த, கைமணம் கமழும் கை கல்யாணியினுடையதே!

ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட், பம்பாய்.

DL. 447B-19 TM

போய் வாருங்கள்' என்று நீ சொன்னால் தானே நான் தைரியமாகப் போய் விட்டு வர முடியும்?''

''நிம்மதியாகப் போய் வாருங்கள். நான் எல்லாவற்றையும் கவனித்துக் கொள்கிறேன்'' என்று சொல்லிவிட்டுத் திரும்பினான், மணி. கதவருகே நின்று, ''என்னுடைய டிக்கட்டைக் கொடுத்து 'கான்ஸல்' செய்து விட்டுப் பணத்தைத் திருப்பி வாங்கி விடட்டுமா?'' என்றான்.

''வேண்டாம் வேண்டாம், என்னி டமே இருக்கட்டும். நான் அதைக் கவ னித்துக் கொள்கிறேன்.''

குழம்பிய மனத்துடன் போய் விட் டான் மணி. ஏதோ தகிடுதத்தம் நடக் கிறது; என்ன என்றுதான் அவனுக்குத் தெரியவில்லை. அவன் போன பிறகு கதவை இழுத்துச் சாத்தித் தாளிட்டு விட்டு வந்தார் சுகுமாரன்.

தம் மேஜைக்குப் பின்னால் தொங்கிய படுதாவை விலக்கினார். அதற்குப் பின் னால் சுவரோடு சுவராக இருந்த இரும் புப் பெட்டியைத் திறந்தார். அதனுள் இருந்த ஏராளமான கறுப்புப் பண நோட்டுக்களில் அச்சடிக்கப்பட்டிருந்த சிங்கங்கள் அவருக்கு வரவேற்பு கூறிப் புன்னகை புரிந்தன.

பதிலுக்கு ஆ இலேசாகச் சிரித்து விட்டுப் பத்து நூறு ரூபாய் நோட்டுக் கட்டுகளை எடுத்தார்.

அவருடைய மேஜையின் மீது மல்லிகா வுக்குப் பரிசாக அவர் வாங்கியிருந்த ஒரு சிறிய தோல் பெட்டி இருந்தது. அதைத் திறந்ததும் உள்ளே அலங்காரம் செய்து கொள்வதற்கான பலவிதமான நவநாகரிகப் பொருள்கள் இருந்தன. அந்தப் புட்டிகளையும் டப்பாக்களையும் சீப்பு, கண்ணாடி, பிரஷ் முதலியவற்றை யும் ஒவ்வொன்றாக எடுத்து வெளியே வைத்தார் சுகுமாரன். பெட்டியின் அடிப்பாகம் என்று தோற்றமளிக்கும்படி அமைக்கப்பட்டிருந்த அட்டையை நீக் கியதும் உள்ளே ஒரு ரகசிய அறை தென் பட்டது. இரும்புப் பெட்டியிலிருந்து எடுத்த நூறு ரூபாய் நோட்டுக் கட்டுகள் பத்தையும் அதற்குள் வரிசை வரி சையாக வைத்தார் சுகுமாரன். மீண் டும் முன்போலவே அட்டையைப் பொருத்தி அலங்காரப் பொருள்களையும் அடுக்கினார். மறுபடியும் இரும்புப் பெட்டிக்குள் கையை விட்டு ஒரு நகைப் பெட்டியைக் கையில் எடுத்தார். அதைத் திறந்ததும் போலி வைரங்கள் பதித்த ஒரு நெக்லஸ் வர்ண ஜாலங்கள் புரிந்தது. அந்த மாலையின் நடுவே ஓரிடத்தில் கட்டை விரலால் அழுத்தி னார் சுகுமாரன். ஒரு மூடி திறந்து கொண்டு ஒரு பெரிய பேழையை வெளிப்படுத்தியது.

'உனது பேழையினுள் இப்போது ஒன்றும் இல்லை. ஆனால் இலங்கையி லிருந்து திரும்பும்போது உனக்குள்ளே ஏராளமான வைரக் கற்களை அடக்கி வைத்திருப்பாய்' என்று போலி வைர மாலையிடம் அளவளாவினார் சுகுமாரன்.

மேஜை டிராயரிலிருந்து மணிசேகர னுடைய பாஸ்போர்ட்டை மட்டும் எடுத்துப் பிரித்தார். முன்னேற்பாடாக யாருக்கும் தெரியாமல் சமையல் அறை யிலிருந்து கொண்டு வந்திருந்த மின்சா ரக் கெட்டிலில் தண்ணீரைக் கொதிக்க வைத்து மூக்கின் வழியே 'குபு குபு' வென்று வெளிவந்த உஷ்ணமான நீராவி யில் பாஸ்போர்ட்டில் ஒட்டியிருந்த மணி யின் புகைப்படத்தைக் காட்டினார். சிறிது நேரத்தில் அதைப் பிய்த்ததும் சுலபமாக வந்து விட்டது. அதே அள வுக்கு இருந்த கதிர்வேலனின் புகைப் படத்தை அந்த இடத்தில் ஒட்டினார். மாறுதல்கள் ஏதும் தெரியாதபடி சர்வ ஜாக்கிரதையாக மூன்று முத்திரை களைப் படத்தின் மீது போட்டார். மணி யின் கையெழுத்து ஒட்டப்பட்டிருந்த இடத்தில் மணிசேகரன் என்று கதிர் வேலன் போட்டிருந்த கையெழுத்தை ஒட்டினார். அளவுகடந்த கவனத்தோடு நுணுக்கமாகத் திறமையுடன் இந்தக் காரியங்களைச் செய்து முடித்தார்.

கதிர்வேலன் மணிசேகரன் என்ற பெயரில் சௌகரியமாகப் பிரயாணம் செய்வதற்கு எல்லா ஏற்பாடுகளும் சரி யாக நடந்து விட்டன என்று சந்தேகத் துக்கிடமில்லாமல் நிச்சயம் செய்து கொண்டு மல்லிகாவைக் காண்பதற்குச் சென்றார் சுகுமாரன்.

அலங்காரப் பெட்டியைக் கையில் கொடுத்து வைரமாலையைக் கழுத்தில் தனது அன்பளிப்பாக அணிவித்தபோது அப்பாவுக்கு எப்படித் தன் நன்றியைத் தெரிவிப்பது என்று தெரியாமல் குறு குறுப்பான பார்வையுடன் கைகளைக் கோத்துக் கொண்டு முல்லை அரும்புப் பற்களால் கட்டை விரலைக் கடித்துக் கொண்டாள் மல்லிகா!

* * *

ரத்மலானை விமான நிலையத்தில் கூட்டம் சொல்லி முடியாது. திரைப் படம் இன்னும் வெளியாகவில்லையானா லும் மல்லிகாவின் புகழ் மட்டும் பரவி விட்டது. பத்திரிகைகள் அவள் முழு உருவப் புகைப்படத்தை முதல் பக்கத் திலே பிரசுரித்துப் பாராட்டியிருந்தன. படத்துக்கான விளம்பரங்கள் நாலு

ஐந்து வர்ணங்களில் கவர்களை யெல்லாம் அலங்கரித்தன.

இந்தப் பிரசாரங்களினுல் மல்லிகாவைக் காணத் துடிப்புடன் குழுமியிருந்தார்கள் ரசிகப்பெருமக்கள். 'கஸ்டம்ஸ்' விதிகளை மீறி விமானத்தருகேயே ஓட்டமாக ஓடிவந்து விட்டார்கள். மலர் மாலைகள் அவள் கழுத்தில் விழுந்த வண்ணம் இருந்தன. பிரமிப்பில் ஆழ்ந்து போன அவளைச் சுகுமாரன் ஒரு கிள்ளுக் கிள்ளி வணக்கம் செலுத்த வேண்டும் என்பதை நினைவுறுத்தினுர்.

மல்லிகாவின் கரங்கள் குவிந்தன. புன்னகையில் உதடுகள் மலர்ந்தன. ரசிகர்களின் உள்ளங்கள் மகிழ்ந்தன. வாழ்த்தொலிகள் கிளம்பின. இந்த ஆர்ப்பாட்டங்களின் இடையே கதிர்வேலனை யாரும் கவனிக்கவில்லை. மல்லிகாவின் அலங்காரப் பெட்டியுடன் இருந்த அவனை நோக்கிக் கூட்டத்திலிருந்து ஒருவன் வந்தான். அவன் கையிலும் கதிர்வேலன் கையில் இருந்ததைப் போலவே ஒரு பெட்டியிருந்தது. ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டதும் பெட்டிகளைக் கீழே வைத்து விட்டு, "ஹலோ ! ஹலோ !" என்று கேட்டுக் கைகுலுக்கினுர்கள்.

"சௌக்கியமா ?" என்று குசலம் விசாரித்தார்கள். மறுபடியும் பெட்டிகளை அவர்கள் கையில் எடுத்துக் கொண்டபோது ஞாபகமாக, ஆனுல் சர்வ சாதாரணமாக அவற்றை மாற்றி எடுத்துக் கொண்டார்கள்.

சுங்க அதிகாரிகள் கூட்டத்தை விலக்கி, பிரயாணிகளைப் பரிசோதனைக்கு அழைத்துச் சென்றுர்கள். கதிர்வேலனிடமிருந்த பெட்டியை வாங்கிக் கொண்டவன் கூட்டத்தோடு கூட்டமாகக் கலந்து மறைந்துபோனுன்.

அன்று இரவு மல்லிகா அசதி மிகுதியில் அயர்ந்து தூங்கிய பிறகு, சுகுமாரனும் கதிர்வேலனும் வெளியே கிளம்பினுர்கள். மல்லிகா விழித்துக் கொண்டால் பயந்து விடுவாளே என்று பரிவுடன் ஒரு கடிதம் எழுதி வைத்தார் சுகுமாரன். பத்திரத்துக்காகக் கதவைப் பூட்டிக் கொண்டு, ஜாகையை விட்டுப் புறப்பட்ட அவர்கள் ஒரு டாக்ஸியில் ஏறிக்கொண்டார்கள். தமது சட்டைப் பையிலிருந்து சிறிய டயரியை எடுத்து அதில் எழுதியிருந்த ஒரு விலாசத்தை டிரைவரிடம் சொன்னுர் சுகுமாரன்.

அவர்கள் வந்து இறங்கியது ஒரு நகைக் கடை. கதவை இழுத்து மூடிக் கொண்டிருந்த சமயத்தில் யாரோ இருவர் டாக்ஸியில் வந்து இறங்குவதைக் கண்டு சற்றுத் தயங்கினுன் ஒரு மீசைக்கார தர்வான். டாக்ஸியை அனுப்பி விட்டு வாசல் படிகளில் ஏறிய சுகுமாரன் "குணநாயகா இருக்கிருரா?" என்று கேட்டார்.

"உள்ளே இருக்கிருர். சற்று உட்காருங்கள்" என்று சொல்லிவிட்டு உள்ளே சென்றுன் தர்வான்.

கதிர்வேலன் தன்னைச் சுற்றி ஒரு நோட்டம் விட்டான். எங்கு பார்த்தாலும் தங்க வைர நகைகள், வெள்ளிப் பாத்திரங்கள் கண்ணுடி அலமாரிகளுக்குள் மின்சார விளக்கில் பளபளத்தன.

"ஐயா உள்ளே வரச் சொல்கிருர்" என்றுன் தர்வான்.

மறைவாக இருந்த அந்தச் சிறிய அறைக்குள் கதிர்வேலனிடம் காலையில் பெட்டியை வாங்கிக் கொண்டவன் புகையை ஊதிக்கொண்டு உட்கார்ந்திருந்தான். அவர்களைக் கண்டதும், "என்ன வேண்டும்?" என்று கேட்டான்.

"உனக்குத் தெரியாததா? ஒரு லட்சம் ரூபாய்க்கு வைரங்கள்!"

குணநாயகா கையை நீட்டினுன். "பணத்தை எடு!"

மேஜையை ஓங்கி ஒரு குத்துக் குத்தினார் சுகுமாரன். "குணநாயகா! உன் குணத்தைக் காட்டாதே! நான் பொல்லாதவன்; விமான நிலையத்தில் கதிர்வேலனிடம் பெட்டியை வாங்கிக்கொண்டாயல்லவா?"

"அதனுள் அலங்காரப் பொருள் களைத் தவிர வேறு ஒன்றும் இல்லை!"

"ஓ! ரகசிய அறையைத் திறக்கத் தெரியவில்லையா? நான் திறந்து எடுத்துத் தருகிறேன். இப்படிக் கொடு."

"எல்லாவற்றையும் துருவித் துருவிப் பார்த்து விட்டேன். ஒன்றும் அகப்படவில்லை." மேசைக்குப் பின்புறம் தரையில் கிடந்த தோல்பெட்டியை எடுத்துக் கதிர்வேலன் பக்கமாக அலட்சியமாக வீசி எறிந்தான் குணநாயகா.

லாவகமாக அதைப் பிடித்துக் கொண்ட கதிர்வேலன் அதைத் திறந்து பார்த்து விட்டு, "அயோக்கியன்! ஏமாற்றுகிறான்!" என்று உறுமினான்.

"குணநாயகா! நான் வெளிப் பார்வைக்குக் கௌரவமான மனிதன். உன்னுக்குள்ளே 'ரௌடி!' என்னிடம் விளையாடாதே!" என்றார் சுகுமாரன்.

"விளையாட்டே இல்லை! நான் பணம் வாங்கிக் கொண்டதாக ரசீது இருக்கிறதா என்ன? முதலில் பணத்தை எடு, வைரம் தருகிறேன்!"

சுகுமாரன் குணநாயகாவின் இரண்டு தோள்களையும் பற்றி உலுக்கினார். அவன் தலை மேலும் கீழுமாக வெடவெடவென்று ஆடியது. எப்படியோ தன்னை விடுவித்துக் கொண்டு, டெலிபோனைக் கையில் எடுத்தான் குணநாயகா, "போலீஸைக் கூப்பிடுகிறேன்! இங்கு வந்து அட்டகாசமா செய்கிறீர்கள்?" என்று சொல்லிக்கொண்டே.

சுகுமாரன் அவனுடைய கையைப் பற்றினார். ஒரு தள்ளுத் தள்ளினான் அவன். கீழே விழப்போன சுகுமாரன் மேஜையைப் பிடித்துக் கொண்டார். அவர் முகவாய் மேஜை விளிம்பில் பட்டுப் பற்கள் நாக்கைக் கடித்தன. வலியில் துடிதுடித்துப் போனார் அவர்.

கதிர்வேலனுக்கு உற்சாகம் கரை புரண்டது. பாய்ந்து சென்ற அவனை நோக்கி ஒரு குத்து விட்டான் குணநாயகா. தக்க சமயத்தில் சற்றுக் குனிந்து கொண்டதால் கதிர்வேலன் முகவாயில் விழ வேண்டிய குத்து நெற்றியில் விழுந்தது. அவன் எதிரே மின்னல்கள் பளபளத்தன. குனிந்த தலையை நிமிராமல் அப்படியே பாய்ந்தான் கதிர்வேலன். அவன் தலை குணநாயகாவின் வயிற்றில் மோதியது. வயிற்றை இரண்டு கரங்களாலும் பிடித்துக் கொண்டு வலியினால் குனிந்த அவனுடைய தாடையில் வைரம் பாய்ந்த விரல்களை முஷ்டியாக்கி ஓங்கி ஒரு குத்து விட்டான் கதிர்வேலன். முழங்கால்களை ஊன்றிக் கீழே விழுந்த குணநாயகாவைக் கால்களால் இரண்டு உதைகள் கொடுத்தான்.

குணநாயகாவின் வாயிலிருந்து ரத்தம் வழிந்தது. கதவைத் திறந்து கொண்டு தர்வான் எட்டிப்பார்த்தான். (தொடரும்)

---

ஆயிரம் மைல்களுக்கு அப்பாலுள்ள கல்கத்தாவில் வாழும் ஆயிரக்கணக்கான தென்னிந்திய மக்களுக்கு ஓர் அணிகலனாக விளங்கிய திரு ஜி. வி. ராமன் சில மாதங்களாக நோய்வாய்ப்பட்டிருந்து சென்ற ஆகஸ்டு 29-ந் தேதி காலமானார் என்ற செய்தி கேட்டு வருத்தமடைகிறோம்.



சுமார் முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் கல்கத்தாவுக்குக் குடியேறிய தமிழர்களுள் திரு ஜி. வி. ராமனும் ஒருவர். ஆதியிலிருந்தே "அண்டர்வுட்" டைப்ரைட்டர் விநியோகிக்கும் "ப்ளாக்வுட்" ஸ்தாபனத்தில் தொழில்புரிந்த திரு ராமன் படிப்படியாக முன்னேறி அதன் நிர்வாக டைரக்டராகப் பல ஆண்டுகள் சிறப்பாகப் பணியாற்றினார். டைப்ரைட்டர் மெஷின்களையும் மற்றும் ஆபீஸ் வேலைகளுக்கு இன்றியமையாத இதர கருவிகளையும் இந்தியாவிலேயே இணைத்து ஒன்றுசேர்க்கும் தொழிலை ஆரம்பித்து விரிவுபடுத்தினார்.

தொழில் அபிவிருத்தியுடன் நில்லாது தென்னிந்தியரின் சமூக வாழ்க்கையில் பங்கு கொண்டு பலப் பொதுப்பணிகளில் ஈடுபட்டு, பலருக்கும் தயங்காது உதவியளித்துக் கல்கத்தா வாழ் தமிழர்களின் அன்புக்குப் பாத்திரமானவர். அவர் பிரிவாற்றாமையால் வருந்தும் திரு ராமனுடைய குடும்பத்தினருக்கு எங்கள் மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்.

பகுத்தறியும் ஸ்த்ரீ கேட்பது

# ரீடா

உயர்தரமான
தையலுக்கும் மற்றும்
எம்ப்ராய்டெரிக்கும்
தயாரிக்கப்பட்ட மெஷின்

RMY·5 TAM

மற்ற விவரங்களுக்கு உங்களுடைய
வியாபாரியிடம் கேளுங்கள் அல்லது
ரீடா மெகேனிகல் ஓர்க்ஸ்,
லூதியானாவுக்கு நேராக எழுதுங்கள்



# மனிதரா அவர்?

பிலஹரி

எப்பொழுது கண்ணயர்ந்தேனோ, எனக்கே தெரியாது. தோள் பட்டையின்மீது கைவைத்து யாரோ பலமாக உலுக்கவே, திடுக்கிட்டுக் கண் திறந்தேன்.

''ஐயோ! குழந்தையைப் பாருங்களேன்! மலங்க மலங்க விழிக்கிறானே! பார்க்கப் பயமாக இருக்கே!...'' என்று அலறியபடி, எதிரே நின்று கொண்டிருந்தாள் மீரு.

தூக்கிவாரிப் போட்டது எனக்கு. சட்டென்று எழுந்து, மங்கலாக எரிந்து கொண்டிருந்த சிம்னி விளக்கின் வெளிச்சத்தைப் பெரிதாக்கி விட்டு, பரபரப்புடன் கட்டில் பக்கம் சென்றேன்.

இரண்டு நாட்களாகக் கண் திறக்காமல் படுத்திருந்த ரவி, வைத்த விழியை எடுக்காமல் எங்கோ பார்த்துக் கொண்டிருந்தான். இதுவரை நான் கண்டறியாத களை ஒன்று —அதை வெறி என்றுகூடச் சொல்லலாம்— அவன் முகத்தில் பரவியிருந்தது. நான் அருகில் சென்றதும் கட கடவென்று சிரித்தபடியே, எழுந்து வேறு உட்காருவதற்கு அவன் யத்தனித்தான்.

விஷயம் விளங்கியதும், என் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. சிலையெனப் பிரமித்து நின்று விட்டேன்.

குழந்தைக்கு ஜன்னி கண்டுவிட்டது. எதற்காக நான் பயந்து நடுநடுங்கிக் கொண்டிருந்தேனோ, அது நடந்து விட்டது.

''பேசாமல் கல்லாட்டம் நிற்கிறீர்களே! டாக்டரை அழைத்துக் கொண்டு வாருங்களேன்! ஐயோ, அப்பா, அம்மா! குழந்தையைப் பார்த்தால்...'' — மீருவின் அலறல் என் சிதறிக்கிடந்த மூளையை ஒன்று சேர்த்தது. கூச்சல் கேட்டு ஒன்றிரண்டு குடித்தனக்காரர்கள் எழுந்து வந்து விட்டார்கள்.

''அடேடே! ஜன்னி சார், இது! போய்க் கையோடு டாக்டரை அழைத்து வாருங்கள்! உம், சீக்கிரம்!'' என்று கூறிக்கொண்டே, ஒரு குடித்தன நண்பர் குழந்தையைக் கெட்டியாக அணைத்தும் படுக்க வைத்துத் தாமும் அருகிலேயே அமர்ந்தார்.



கையைப் பிசைந்தபடியே நான் நின்றேன். குழந்தையைக் கவனிக்கும் டாக்டர்—எங்கள் குடும்பவைத்தியர்—ஊரில் இல்லை!

''என்ன இது? இப்படி நிற்கிறீர்களே! உடனே போய்...'' என்று அழுதபடியே அதட்டினாள் மீரு.

''என்ன செய்வது என்று எனக்குப் புரியவில்லையே! டாக்டர் பெண்ணுக்கு விடிந்தால் கல்யாணம், குளசேகரத்திலே! இப்போ அவர் ஊரில் இல்லையே! நான் யாரைப் போய்...'' என்று இழுத்தேன்.

''உம், டாக்டரை விட்டால் வேறு யாருமே ஊரில் இல்லையா? போங்கள், சார்! உடனே வடக்கு வீதி டாக்டரை அழைத்து வாருங்கள்! நல்ல ஆசாமி ஐயா, நீர்!'' என்று நண்பர் விரட்டினார்.

''யாரு? அந்த டாக்டரையா? மனிதரா அவர்? கொஞ்சம் கூட ஈரப்பசை இல்லாத ஜன்மமாயிற்றே, அது!'' என்று ஆத்திரத்துடன் கூறினேன் நான். இருந்தாலும் உள்ளம் கேட்கிறதா? கண்ணின் கருமணியெனப் போற்றி வளர்க்கும் ஒரே ஒரு குழந்தை உயிருக்கு மன்றாடும்போது, யார் காலில் விழுந்தால்தான் என்ன? சுயகௌரவம் பாராட்ட இதுவா சந்தர்ப்பம்? அவர் எவ்வளவுதான் அலட்சியமாக நடந்து கொண்டாலும் அவர் காலில் விழுந்து கெஞ்சி அவரைக் கையுடன் அழைத்துவரத் தவறியவனாக நான் ஆகிவிட்டால், பிறகு நான் இருந்தென்ன? இறந்தென்ன?

ஏதோ ஒரு துண்டை எடுத்து உடம்பைப் போர்த்திக் கொண்டு வாசலில் இறங்கி வேகமாக ஓடினேன்.

அப்பொழுது இரவு மணி சரியாக ஒன்று.

பதினைந்து நாட்களுக்கு முன்பு.

வழக்கமாக அலுவலகத்திலிருந்து மாலை ஆறு மணிக்கெல்லாம் வீடு திரும்பி விடுகிறவன், அன்று வீட்டில் காலடி எடுத்து வைத்த போது இரவு மணி எட்டுக்கு மேல் ஆகி விட்டது.

குழந்தைக்காக நடுப்பகல் ஆபீஸ் 'காண்டீனி'ல் வாங்கிய அல்வாப் பொட்டலம் கையில் இருந்தது.

எத்தனை நேரமானாலும் எனக்காக வழிமேல் விழி வைத்து வாசலில் காத்துக்கிடக்

ஜூலை மாதப் போட்டியில்



ஒருவர்:— நெப்போலியன் குதிரைமேல் இருப்பதாகப் படம் எழுதச் சொன்னேன்; இப்படி மோட்டார் சைக்கிளில் வருவது போல் போட்டிருக்கிறீர்களே?

ஓவியர்:— எனக்குக் குதிரை அவ்வளவு சரியாகப் போட வராது, சார்!

கும் குழந்தையைக் காணாதது எனக்கே சற்று வியப்பாகத்தான் இருந்தது.

அறையில் நுழைந்தவன் திடுக்கிட்டேன்.

கம்பளிப் போர்வையை உடலில் போர்த்திக் கொண்டு படுத்துக் கிடந்தான் ரவி.

என் அடி வயிறு ஆட்டம் கண்டது. குழந்தைக்கு என்ன உடம்பு? காலை ஆபீஸ் போகும்போதுகூட வாசல்வரை வந்து வழி அனுப்பினானே? என்னிடமிருந்து தனது சின்னஞ் சிறு கையால் அரையணா பெற்றுக் கொண்டானே! திடீரென்று குழந்தைக்கு என்ன வந்து விட்டது?

என் காலடி ஓசை உள்ளே எட்டியிருக்க வேண்டும். அடுத்த நிமிஷமே கையில் காப்பித் தம்ளருடன் உள்ளே நுழைந்தாள் மீனு.

''குழந்தைக்கு என்ன உடம்பு, மீனு?'' என்று படபடப்புடன் வினவினேன்.

''சாயங்காலம் வரை ஒன்றும் இல்லை! விளக்கு வைக்கிற சமயம் இரண்டு மூன்று தரம் வாந்தி யெடுத்தான். பிறகு கண்ணைச் சுழற்றிக் கொண்டு கீழே விழுந்து விட்டான்! உடம்பு என்னவோ அனலாகக் கொதிக்கிறது! நீங்கள் காப்பியைச் சாப்பிடுங்கள்!''

போர்வையை விலக்கி விட்டு, ரவியின் உடம்பைத் தொட்டுப் பார்த்தேன். அப்பப்பா! என்ன சூடு! என்ன சூடு! பழுக்கக் காய்ச்சிய மழு போல் அல்லவா குழந்தையின் உடம்பு சுடுகிறது!

''காப்பி கிடக்கட்டும்! நான் போய் டாக்டரிடம் குழந்தையைக் காண்பித்துக்கொண்டு வருகிறேன்.''

அவள் பதிலுக்கு நான் காத்திருக்கவில்லை. ரவியை எடுத்து மேலே சாத்திக் கொண்டு கையில் மருந்துப் புட்டியுடன் டாக்டர் வீட்டுக்குக் கிளம்பி விட்டேன்.

என் போதாத வேளை, அப்போது எங்கள் குடும்ப டாக்டர் வீட்டில் இல்லை.

''பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாயிருக்கிறது. இன்னும் இரண்டு வாரத்திலே கல்யாணம் நடக்கும். அதற்காக 'இவர்' அலைந்து கொண்டிருக்கிறார். இப்போ கூட அது விஷயமாகத்தான் வெளியே போயிருக்கிறார். எப்போது வருவாரோ, தெரியாது!'' என்று அவர் மனைவி கூறினாள்.

எனக்கு ஒருசில நிமிஷங்கள் ஒன்றுமே தோன்றவில்லை. திடீரென்று வடக்கு வீதி டாக்டரின் நினைவு வந்தது.

ஊருக்குப் புதியவர் அந்த டாக்டர். வயது குறைவாக இருந்தாலும், நல்ல கைராசிக்காரர் என்று ஊரார் பேசிக் கொண்டனர். ஆசாமிக்குக் கையில் கொஞ்சம் 'ஓட்டம்' உண்டு போல் இருக்கிறது. ஊருக்கு ஒதுக்குப்புறமாகச் சமீபத்தில் எழுந்துள்ள ஒரு காலனியில் சொந்தத்தில் பங்களா கட்டியிருந்தார். வீட்டின் ஒரு பகுதியிலேயே தனி 'நர்ஸிங் ஹோம்' வேறு. அதைத் தவிர ஊருக்கு நடுவே வடக்கு வீதியில் ஒரு 'டிஸ்பென்சரி'. அவரை எனக்குத் தனிப்பட்ட முறையில் இது வரை தெரியாது. அவர் யாராயிருந்தால் என்ன? கையில் பணம் கொடுத்தால் புட்டியில் நிரம்பப் போகிறது. அவ்வளவுதானே?

நான் அங்கே செல்வதற்கும், மாடியிலுள்ள டிஸ்பென்சரியிலிருந்து அவர் கீழே இறங்கி வருவதற்கும் சரியாக இருந்தது. இருவரும் மாடிப் படிகளிலேயே ஒருவரையொருவர் சந்தித்துக் கொண்டோம்.

எனக்கு அவர் புதிது. அவருக்கு நான் புதிது. ஒருவரை யொருவர் ஏற இறங்கப் பார்த்துக் கொண்டோம்.

''என்ன விஷயம்?'' என்று கேட்பது போல், புருவத்தை இலேசாக உயர்த்தினார்.

''குழந்தைக்கு ஜுரம்...உடம்பு...'' என்று இழுத்தேன் நான்.

''சாதாரண ஜுரம்தானே? கம்பௌண்டர் உள்ளே இருக்கிறார். சொல்லி மாத்திரை வாங்கிப் போங்கள். கொடுப்பார் அவர்! ரொம்ப அவசர காரியமாக வெளியே போய்க் கொண்டிருக்கிறேன். வேண்டுமானால், காலையில் குழந்தையை எடுத்து வாருங்கள்!''

என்னுடைய பதிலுக்குக்கூட அவர் காத்திருக்க வில்லை.

மடமடவென்று கீழே இறங்கி விட்டார்; மறுவிநாடி வாசலில் நின்று கொண்டிருந்த அவரது கார் புறப்படும் சத்தம் கேட்டது.

திக்பிரமை பிடித்து நின்று விட்டேன் நான். டாக்டரா அவர்? வந்திருக்கும் நோயாளியைக் கையைப் பிடித்துக்கூடப் பார்க்காமல் போகும் அளவு, என்ன அவசரம் வந்து விட்டது? அவ்வளவு கல்மனமா அவருடையது? எந்தப் பெரிய மனிதர் வியாதியில் படுத்திருக்கிறாரோ? அவருக்காக ஓடுகிறார் இவர்! மனிதரா இவர்!

அங்கு நிற்கவே என் உடலும் உள்ளமும் கூசின. வாசலில் காறி உமிழ்ந்து விட்டுக் குழந்தையுடன் வீடு நோக்கி நடையைக் கட்டினேன்.

நல்லவேளையாகத் திரும்பும் போது எங்கள் குடும்ப வைத்தியர் வீட்டில் இருந்தார். குழந்தைக்கு மருந்து வாங்கிக் கொண்டேன்; நடந்த விஷயத்தையும் கூறினேன்.

''எல்லாம் பணம் அப்பா, பணம்!'' என்று கூறினார் அவர்.

''ஆயிரம் இருக்கட்டுமே, சார்! என்ன பிரயோசனம்? டாக்டர் என்ற சொல்லின்

பெருமை
படக்கூடிய
உங்கள்
சலவை.

டெட் உபயோகித்து நீங்கள் பெருமையடையலாம். டெட் இந்தியாவிலே முதன் முதலான அற்புத நவீன பரிசுத்தகரணி. அது சோப்பைக் காட்டிலும் வெகுநன்றாகவும் சீக்கிரமாகவும் சுத்தம் செய்கிறது. ஆடைகளை சுத்தம் செய்யும்போது, அவைகள் கெடாமல் பாதுகாத்து வழவழப்பாகவும் பிரகாச மாகவும், நீடித்து உழைக்கும் படியும் செய்கிறது.

தரை, பீங்கான் பாத்திரங்கள், கண்ணாடி சாமான்கள், சாக்கடைத் தொட்டிகள் (ஸிங்க்ஸ்), சுவர்கள், எதுவாயினும் சரி, துப்புரவாக சுத்தம் செய்கிறது.

**டெட் – ஓர் அற்புத பரிசுத்தகரணி**

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட். பம்பாய்.



# 'அனஸின்'



## உங்களுடைய தலைவலி, ஜலதோஷம், ஜுரம் மற்றும் தசைவலிகளுக்கு நிவாரணமளிப்பதில்

## சிறந்தது ஏனெனில் அதில் நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளன

'அனஸின்' ஒரே ஒரு மருந்துமட்டுமல்ல, அது தலைவலி, ஜலதோஷம், ஜுரம், பல்வலி மற்றும் தசைவலிகளிலிருந்து முற்றிலும் துரித நிவாரணம் அளிக்கும், ஒரு டாக்டரின் குறிப்பிற்கு ஒப்பான, விஞ்ஞான முறையில் தயாரித்துள்ள நான்கு மருந்துகளின் கலவையாகும். ஒரே மருந்து சேர்ந்துள்ள எந்த வலி நிவாரண மருந்தும் அனஸினைப் போல், துரிதமாயும்... அபாயமின்றியும்... நிச்சயமாயும் நிவாரணம் அளிக்க இயலாது. எப்பொழுதும் வீட்டில் 'அனஸின்' வைத்திருங்கள்.




GEOFFREY MANNERS & CO. PRIVATE LTD. REGISTERED USER

K. 44 (R) TA

புனிதத்தன்மைக்கே களங்கமாக வந்துள்ள புல்லுருவி, சார்!'' என்றேன் ஆத்திரத்துடன்.

நான்கு நாட்கள் நகர்ந்தன.

குழந்தையின் உடல்நலத்தில் அபிவிருத்தி காணப்படவில்லை. ஜுரமும் குறையும் வழியாக இல்லை.

அன்று குழந்தையைப் பார்ப்பதற்கு வந்திருந்த டாக்டர், என் மீது விஷத்தைக் கக்கி விட்டார்.

குழந்தைக்கு வந்திருப்பது விஷஜுரமாம்—டைபாய்டாம்.

வையகமே தலைகீழாகச் சுற்றுவது போன்ற பிரமை. பிடரி மண்டையில் யாரோ சம்மட்டி கொண்டு பலமாகத் தாக்குவது போன்ற வலி. அப்படியே அயர்ந்து உட்கார்ந்து விட்டேன்.

அன்றிலிருந்து இரவு பகல் எந்நேரமும் குழந்தையின் அருகில்தான் என் பொழுது கழிந்தது. உணவும் உறக்கமும் என்னை நெருங்கவே அஞ்சின.

குழந்தையைக் கவனித்த டாக்டரை அநியாயமாகச் சொல்லக்கூடாது. தம்மால் எவ்வளவு முடியுமோ, அவ்வளவு அக்கறையுடன் கவனித்தார். தினமும் காலை மாலை இருவேளைகளிலும் வீட்டுக்கு விஜயம் செய்தார். ஒரு சமயங்களில் நடுப்பகலிலும் அவர் வந்து பார்த்தார்.

ஒரு வாரம் ஓடியது.

டாக்டரின் பெண்ணுக்குக் கல்யாணம் நிச்சயமாகி விட்டது. குணசேகரத்தில் திருமணம். புறப்படுவதற்கு முன்பு எனக்கு என்னவோ தைரியம் சொல்லி விட்டுத்தான் அவர் போனார்.

''ஒன்றுக்கும் பயப்படாதீர்கள், சார்! இன்னும் இரண்டு மூன்று நாட்கள் கடந்து விட்டால், அப்புறம் ஆபத்து இடையாது. எதற்கும் ஜாக்கிரதையாகவே இருங்கள்! நான் இரண்டு மூன்று நாட்களில் திரும்பி வந்து விடுவேன்!''

ஆபத்து இடையாது என்று அவர் சொல்லிப்போன அன்று இரவே குழந்தைக்கு ஜன்னி பிறந்து விட்டது. பதைபதைக்கும் நெஞ்சத்துடன் நானும் இதயமற்ற அந்தப் புதிய டாக்டரிடம் ஓடினேன்.

இடையேயுள்ள அவ்வளவு தூரத்தை எப்படிக் கடந்தேனோ, சரியாகப் பத்தே நிமிஷங்களில் டாக்டரின் பங்களாவை அடைந்து விட்டேன்.

எனக்கு என்னவோ உள்ளுக்குள் சற்று அச்சம்தான்.

அன்று இரவு எட்டு மணிக்கு அவர் 'டிஸ்பென்சரி'யைத் தேடிச் சென்ற போதே, 'பார்க்க முடியாது' என்று சொன்ன புண்ணியவான், இந்த நள்ளிரவில் நித்திரை வசம் ஆழ்ந்திருப்பவர், எழுப்பி அழைத்தால் வந்துவிடுவாரா? என் நிலையைக் கண்டு மனம் இரங்குவாரா?

தயங்கியபடியே 'கேட்'டைத் திறந்து உள்ளே நுழைந்தேன். பங்களாவை ஒட்டி அமைந்துள்ள பெரிய ஹாலில் நீண்ட காந்த விளக்கு பளிச்சிட்டுக் கொண்டிருந்தது. பணம் படைத்தவர்களுக்காக நடத்தப்படும்



பணக்கார முதலாளி:—என்னடா, வைத்தியம்! வருவதற்கு இவ்வளவு நேரம்?

வேலைக்காரன்:—ரோட்டில் ஒரு வைத்தியத்தைச் சுற்றி ஒன்பது பேர்தான் இருந்தார்கள். பழமொழிப்படி வைத்தியனைச் சுற்றிப் பத்துப் பேர்கள் இருக்கணுமே என்று நானும் நின்றேன். அதுதான் நாழியாகி விட்டது!

''நர்ஸிங் ஹோம்'' அது என்று பார்த்தவுடனேயே புரிந்து கொண்டு விட்டேன்.

வீட்டின் மையத்திலும் வெளிச்சம் பரவியிருந்தது. ஒரு வேளை டாக்டர் விழித்திருக்கிறாரோ? அப்படி இருந்தால் ஒரு விதத்தில் அதுவும் நல்லதுதான். உறக்கத்தில் ஆழ்ந்திருக்கையில் நடுவில் கண் விழிப்படையச் செய்யும்போது உண்டாகும் ஆத்திரத்துக்கு இடமே யில்லை அல்லவா?

வீட்டின் கூடத்துக்கு வந்து விட்டேன்.

மேல் நாட்டுப் பாணியில் 'இரவு உடை' தரித்திருந்த டாக்டர், திறந்து கிடந்த ஒரு பீரோவைக் குடைந்து கொண்டிருந்தார். அவர் செய்கையிலே ஒரு அவசரம், ஒரு படபடப்பு தென்பட்டது.

''டாக்டர்!''

தயங்கிய குரலில் அழைத்தேன். சட்டென்று திரும்பினார் அவர்.

மறு விநாடி—

திரும்பிய வேகத்திலே அவர் கையிலுள்ள சின்னஞ் சிறு புட்டி போன்ற ஒன்று கீழே விழுந்து உடைந்து சிதறியது.

திகிலுடன் அவர் முகத்தை ஏறிட்டு நோக்கினேன்.

எவ்வித மாறுதலும் காண்பிக்காத கற்சிலையாக நின்று கொண்டிருந்தார் அவர்.

''என்ன விஷயம்?'' — அவர் வாய் பேசவில்லை. புருவங்கள்தாம் மேலே சென்று தெரிந்து வினாவைக் கிளப்பின.

''அன்று உங்கள் 'டிஸ்பென்சரி'க்கு ஒரு குழந்தையை அழைத்துக் கொண்டு...''

''உம், மேலே சொல்லுங்கள்!'' அந்தக் குரலில்தான் எவ்வளவு ஆணவம்!

''அந்தக் குழந்தைக்கு 'டைபாய்ட்' வந்து விட்டது, சார்!''

''டைபாய்டா?'' என்று சற்று தடுங்கினாற்போல் வினவினார் அவர்.

''ஆமாம்! குழந்தையைக் கவனிக்கும் எங்கள் குடும்ப டாக்டர் ஊரில் இல்லை! இரண்டு நாட்கள் கழித்துத்தான் அவர்

வருவார்! அதற்குள் இப்போ திடீரென்று குழந்தைக்கு ஜன்னி……''

''ஜன்னியா? அடேடே!''

''ஆமாம், சார்! குழந்தையைப் பார்த்தாலே பயமாயிருக்கிறது! நீங்கள் தயவு செய்து உடனே……''

''எனக்கு அவசரக் காரியம் இங்கே இருக்கிறதே! வேறு யாரையாவது…''

அந்தக் கல் மனம் பேசியது. அன்று இரவு எட்டு மணிக்கும் அவசரக் காரியம்; இன்று இரவு இந்த நடுநிசி வேளையிலும் அவசரக் காரியம். என் உள்ளம் பற்றி எரிந்தது. மறு விநாடி, ரவியின் பால்வடியும் முகம் என் கண் முன்னால் நிழலாடியது! என் ஆத்திரம் போன இடம் தெரியவில்லை.

''சார்! சார்! அப்படிச் சொல்லக்கூடாது சார், நீங்கள்! கட்டாயம் வரத்தான் வேண்டும். எனக்கு இந்தப் பிரபஞ்சத்தில் இருப்பதெல்லாம் அந்தக் குழந்தை ஒன்றுதான், சார்! இருபது வருஷங்கள் கழித்துப் பிறந்த ஒரே குழந்தை. எங்கள் வம்சத்துக்கு ஒரே குலக்கொழுந்து சார் அவன்! அவனுக்குத் தம்பியோ, தங்கையோ இனி கிடையாது என்று அவன் பிறக்கும்போதே லேடி டாக்டர் வேறு கூறியிருக்கிறார், சார்!… அவனுக்கு ஒன்றுக்கு ஒன்று ஆகிவிட்டால்…''

என்னால் மேலே தொடர முடியவில்லை. உள்ளத்திலே கொப்புளித்துக் கொண்டிருந்த உணர்ச்சிப் புயலின் ஓசையை—அலறலை—என் நா எதிரொலித்தது.

அடித்து வைத்த சிலையென நின்றுவிட்டார் டாக்டர். ஒரு சில நிமிஷங்கள் அவர் எதுவுமே பேசவில்லை. என்னென்ன உணர்ச்சிகள் அவர் உள்ளத்தில் புரையோடிக் கொண்டிருந்தனவோ, யார் கண்டது?



''நர்ஸ்!…''

மௌனத்திரையைக் கிழித்துக் கொண்டு கம்பீரமாக வெளிப்பட்டது அவர் குரல். இரண்டே விநாடிகளில் நர்ஸ் ஒருத்தி அங்கே தோன்றினாள்.

''அருகில் வா!'' என்பது போல் ஜாடை காட்டினார் அவர். நர்ஸ் அவரை அணுகினாள். அவள் காதுகளில் அவர் ஏதோ கிசுகிசுத்தார்.

''ஐயோ!'' தன்னையும் மீறிக் கூவியே விட்டாள் அந்த நர்ஸ்.

''உஸ்…ஸ்…'' என்று மூக்கின்மீது விரலை வைத்து அவளை அடக்கினார் டாக்டர்.

''உம்! பத்தே நிமிஷங்களில் திரும்பி வருவேன்!……அது வரையில்……ச்!……நீங்கள் வாருங்கள் சார், போகலாம்! நேரம் ஆகிக் கொண்டே யிருக்கிறது!''

மடமடவென்று உடைகளை மாற்றிக் கொண்டு, பீரோவிலிருந்த ஏதோ ஒரு மருந்தைத் தம்முடைய தோல் பையில் போட்டுக் கொண்டு கிளம்பி விட்டார் டாக்டர்.

கற்பாறையினுள்ளும் ஈரக்கசிவை ஆண்டவன் அடக்கி வைத்திருக்கிறான் போலிருக்கிறது! என் உள்ளத்தில் பொங்கிய நன்றி உணர்ச்சியை எப்படி விவரிப்பது?

இரண்டு வாரங்கள் ஓடின?

அன்று இரவு எட்டரை மணி இருக்கும். ஒரு பை நிறையப் பழங்களும், மணிபர்ஸில் கணிசமான பணமும் எடுத்துக் கொண்டு அந்த டாக்டரின் பங்களாவை அடைந்தேன்; வழக்கமாக இந்நேரத்தில் டாக்டர் வீட்டில் இருப்பார் என்று அவருடைய கம்பௌண்டர் என்னிடம் ஒரு சமயம் சொல்லியிருந்தார்.

வாசற்புற வராந்தாவில் ஈஸிசேரில் சாய்ந்து கொண்டு, எதிரேயுள்ள ஸ்டூலில் கால்களைப் போட்ட வண்ணம் அரை மயக்க நிலையில் ஆழ்ந்திருந்தார் டாக்டர்.

''சார்!'' மெதுவாக அழைத்தேன்.

டாக்டர் கண் திறந்தார். என்னைப் புரிந்து கொண்டு விட்டார். நீட்டியிருந்த கால்களை மடக்கிக் கொண்டார்.

''வாருங்கள்! இப்படி உட்காருங்கள்!'' அருகிலுள்ள நாற்காலி ஒன்றைக் காட்டி உபசரித்தார். அமர்ந்துகொண்டேன் நான்;

''பையனுக்கு உடம்பு எப்படி சார் இருக்கிறது?'' — டாக்டர் வினவினார்.

''நீங்கள் கைவைத்த வேளை, குழந்தைக்குக் குணமாகி விட்டது, சார்! இன்று காலைதான் தலைக்குத் தண்ணீர் வார்த்தோம்!''— இதயபூர்வமான நன்றியுடன் கூறினேன்.

''அப்படி எல்லாம் இல்லை, சார்! குழந்தையின் ஆயுசு கெட்டி! அடேடே! என்ன சார் பழம் எடுக்கிறீர்கள் பையிலிருந்து! இதெல்லாம் எதற்கு சார் அநாவசியமாக?''

''அப்படியெல்லாம் சொல்லக் கூடாது, சார்! நீங்கள் எனக்குச் செய்திருக்கும் உபகாரத்தை ஆயுள் உள்ளளவும் என்னால் மறக்க முடியாது! ஏதோ என்னால் ஆனது. இவையெல்லாம்……''

''நான் ஒன்றும் பிரமாதமாகச் செய்து விடவில்லையே!'' என்று டாக்டர் சிரித்தபடியே கூறினார்.

''அப்படியில்லை, சார்! ஒரு விஷயம் உங்களிடம் மனம் விட்டுச் சொல்கிறேன்! நீங்கள் அதற்காகத் தயவு செய்து என்னை மன்னிக்க வேண்டும். முதலில் குழந்தையை எடுத்துக் கொண்டு உங்களிடம் வந்தபோது, பார்க்காமல் அனுப்பிவிட்டீர்களே, அப்போது உங்களைப் பற்றி…''

''மிக மிகத் தாழ்வாக எண்ணியிருப்பீர்கள்! அவ்வளவுதானே? அதில் தவறு ஒன்றுமில்லையே! உங்கள் உள்ளத்துப் பாசம் அப்படி எண்ண வைத்தது! உங்கள் குழந்தையை அப்போது பார்க்கக் கூடாது என்ற எண்ணமில்லை எனக்கு! நீங்கள் வருவதற்கு இரண்டு நிமிஷங்கள் முன்புதான் எனக்கு அவசரமாக ஒரு 'டெலிபோன் கால்' வந்தது. உங்கள் பிள்ளை மாதிரி அந்தக் கேசும்! அது தான் அவ்வளவு அவசரமாக……''

''டைபாய்டா?''-இடைமறித்தேன் நான்;

''ஆமாம்! உங்கள் பையனைப் போல் ஒரு குழந்தைதான் அதுவும்! என்னால் எவ்வளவு முடியுமோ, அவ்வளவு தூரம் என் அறிவு,

சாமர்த்தியம், அனுபவம் அனைத்தையும் உபயோகித்துப் பார்த்து விட்டேன்! என் நர்சிங் ஹோமிலேயே வைத்துக் கொண்டேன்! பக்கத்தில் இரவு—பகல் எந்நேரத்திலும் ஒரு நர்ஸ் வேறு! என்ன செய்து என்ன பிரயோசனம்? என்னைவிட விதியின் சக்தி பெரிதாகி விட்டது!'' அவர் குரலில் சற்றே வருத்தம் தொனிப்பதைக் கண்டேன். ஒருவேளை அவருக்கு மிகவும் வேண்டிய நண்பரின் குழந்தையோ என்னவோ? இல்லாவிட்டால் அவர் இப்படி வருத்தம் தொனிக்கப் பேசுவாரா?

டாக்டர் என் சிந்தனையைக் கலைத்தார்.

''அன்றைக்கு நடுராத்திரி குழந்தைக்கு ஜன்னி என்று வந்தீர்களே, நினைவிருக்கிறதா.....?'' என்று கேட்டார்.

''அதை எப்படி சார் மறக்க முடியும்...?'' என்றேன் உணர்ச்சியுடன்.

''அதே சமயம்—அதே வேளையில்—அந்தக் குழந்தைக்கும் ஜன்னி கண்டு விட்டது. நர்ஸ் ஓடி வந்து அரைத் தூக்கத்திலிருந்த என்னை எழுப்பிச் சொன்னாள்!...அதனால்தான் அவசரம் அவசரமாகப் பீரோவிலுள்ள மருந்தை எடுத்துக் கொண்டிருந்தேன்!...அந்தச் சமயத்துக்கு உபயோகிக்க வேண்டிய ஊசி மருந்து இரண்டு அப்போது என்னிடம் இருந்தன!... நீங்கள் கூப்பிட்டவுடனே திரும்பிப் பார்த்தேனே, அப்போது ஒன்று கை தவறிக் கீழே விழுந்து உடைந்துவிட்டது! மற்றொன்று...''

''என்னுடைய பையனுக்கு எடுத்து வந்து விட்டீர்களோ? அதனால்தான் என் பிள்ளையின் உயிர் காப்பாற்றப்பட்டதோ?''

''ஆமாம்! முதலில் உங்களை தாட்சிண்யமாக வெளியே அனுப்பி விடலாம் என்றுதான் நினைத்தேன். ஆனால், பிறகு நீங்கள் சொன்ன விஷயம் என் மனத்தை உலுப்பிவிட்டது! இருக்கும் ஒரே குழந்தையைப் பறிகொடுத்து விட்டால், பிறகு உங்கள் வாழ்நாள் பூராவும் நரகம்தானே? அர்த்தராத்திரியில் மருந்து வாங்க எங்கே போவது? கைவசமுள்ள மருந்தை உங்கள் குழந்தைக்கு உபயோகித்துவிட்டு, நான் வீடு திரும்புவதற்குள் இந்தக் குழந்தையின் கதை முடிந்து விட்டது!......''

செவிகளை இறுகப் பொத்திக் கொண்டேன்: இனம் தெரியாத சுமை ஒன்று என்னுடைய இதயத்தை அழுத்தியது.

எனக்காக—என் குழந்தைக்காக—தமது கடமையிலிருந்து நழுவிவிட்டாரோ டாக்டர்? தம் வசம் ஒப்படைக்கப்பட்டிருக்கும் ஜீவனைப் பராமரிக்கும் பணியில் அவர் பாதை தவறி விட்டாரோ?

அவர் எதற்காக அப்படிச் செய்ய வேண்டும்? எனக்காகவா? என் குழந்தைக்காகவா?

''சார்!...சார்!...என்ன சொல்வதென்றே எனக்குத் தோன்றவில்லை, சார்!......என் குழந்தைக்காக, யாரோ ஒரு அதிர்ஷ்டமற்ற குழந்தை, எந்த அபாக்கியவதியோ பெற்ற குழந்தை தன் உயிரை...'' என்னுடைய குரல் தழு தழுத்தது.

''உண்மைதான் சார்!......இருந்தாலும், தன் பெற்றோருக்கு நான்காவது குழந்தை அது! அது இல்லாவிட்டாலும், மற்ற மூன்றையும் பார்த்து அவர்கள் மனத்தை ஒருவாறு தேற்றிக் கொள்ளலாம்! ஆனால் உங்கள் விஷயம் அப்படி அல்லவே! பல நாட்கள் தவம் கிடந்து அருமையாகப் பெற்றெடுத்த ஒரே பிள்ளையாயிற்றே! அதை நீங்கள் இழந்து விட்டால், அப்புறம் உங்கள் வாழ்க்கை என்ன ஆவது?''

டாக்டர் என்னவோ சுலபமாகக் கூறி விட்டார்: நாலாவதாக இருந்தால் என்ன, நாற்பதாவதாக இருந்தால் என்ன, பெற்றவர்களுக்குக் குழந்தை ஒரு கணக்கா? பளுவா? அவ்வளவு சுலபத்தில் உதறி விடக் கூடிய பாசமா?

தன்னையும் அறியாமல் தன் உயிரை, என் வம்சம் தழைத்தோங்கத் தியாகம் செய்து விட்ட, நான் முன் பின் கண்டறியாத குழந்தைக்கு என் உள்ளம் அஞ்சலி செலுத்தியது:

''சார்! சார்! இவ்வளவு சொன்னீர்களே! அந்தக் குழந்தை யார், சார்? என் குழந்தைக்கு உயிர் கொடுத்த அந்தப் பிறவியின் பெயரைக் கூடக் கேட்காமல்......''

''அதெல்லாம் எதற்கு சார்? விஷயம் என்னவோ முடிந்து விட்டது! வெளியில் தெரிந்தால்......''



''என் குழந்தையின் மீது ஆணையாய் சொல்கிறேன், சார்! உங்களுக்கு அந்தத் தயக்கமே வேண்டாம்! நான் யாரிடமும் சொல்ல மாட்டேன்! அந்தக் குழந்தையின் தாய் தந்தையருக்கு இந்த விஷயம் தெரியும்படி நான் நடந்து கொள்ள மாட்டேன்!'' என்று உறுதியுடன் கூறினேன் நான்.

''அவசியம் உங்களுக்குத் தெரிந்து கொள்ளத்தான் வேண்டுமா?'' இரங்கிய குரலில் வினவினார் டாக்டர்.

''ஆமாம், சார்! தயவு செய்து சொல்ல வேண்டும்!......'' என்று அவரைக் கெஞ்சிக் கேட்டேன்.

இரு கைகளையும் தலைக்குப் பின்னால் கோர்த்தபடியே, நாற்காலியில் சாய்ந்து கொண்டு கண்களை லேசாக மூடினார் டாக்டர்.

சற்றைக்கெல்லாம், ஒன்றுசேர்ந்திருந்த அவர் உதடுகள் பிரிந்தன.

''என்னுடைய நான்காவது குழந்தைதான் சார், அது!'' என்றார்.

என் நா பிரளவில்லை. அப்படியே அசந்து போய் விட்டேன், மனிதரா அவர்!

# எக்லா

## தென்-இந்தியா விரும்பும் டால்க்!

### தெம்பூட்ட, மணமளிக்க தனிப்பட்ட தயாரிப்பு



இந்த பரத நாட்டியக்காரியைப் போல், நீங்களும் தென்னாட்டின் அதி உஷ்ண நிலையிலும்கூட குளுமையும் இதமும் பெறலாம்... மனோரம்மிய மணம் பெற்ற எக்லா டால்க் உபயோகித்தால். குளுமையான நுண்ணிய சுகந்தத்திற்கு இந்த ஒப்புயர்வற்ற டால்க்கை அடிக்கடி தாராளமாக உபயோகியுங்கள்

மெல்லிய எக்லா ஒரு லட்சிய முகப்பவுடரும் கூட




கால்கேட்

# எக்லா

## டால்க் பவுடர்

ECG/3A

ஸீலிட்ட டின் சுத்தத்திற்கு உத்தரவாதம்
நியாய விலை அதை
மேலானதாகச் செய்கிறது.

# துஷார்

வனஸ்பதி

வீடமின்கள் சேர்க்கப்பட்டது




துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ்
லிட்., கர்நூல்

TI-4/57

பகலெல்லாம் உழைத்துக் களைத்த பகலவன் தொடுவானில் மறைந்து விட்டான். இருள் பரவிக் கொண்டிருந்தது. எங்கும் அமைதி. ஜீனுப் நதிக்கரை அந்தி இருளில் அழகுடன் காட்சியளித்தது. இரை தேடித் திரிந்த பறவைகள் 'கீச் கீச்'சென்ற சத்தத்துடன் கூடு நோக்கிச் சென்று கொண்டிருந்தன. கூட்டை அடைந்த பறவைகள் குதூகலத்துடன் குஞ்சுகளைக் கொஞ்சிக் கொண்டிருந்தன. எங்கும் மகிழ்ச்சி!

என் உள்ளத்திலோ!

காலையிலிருந்து உற்சாகத்துடனிருந்த என் மனம் இப்பொழுது நினைவுப் புயலால் அலைமோதிக் கொண்டிருக்கிறது. இன்றிரவுக்குள் நான் பதான்கோட் போயாக வேண்டும். காஷ்மீரத்தைக் காத்து வரும் இந்தியப் படையினருக்குத் தேவையான ஆயுதங்களை எடுத்துச் சென்று கொண்டிருக்கிறேன். ஆனால்

# மண்குடம்



எஸ். ராமமூர்த்தி

முன்யோசனையில்லாமல் ஒரே லாரியில் வந்துவிட்டேன். ஜீனுப் நதியைக் கடக்கும் பாலம் ஆபத்தான நிலையில் இருக்கிறது. ஐந்து டன் பாரத்துக்கு மேல் பாலத்தின்மேல் போனால் விண்ணுலகை அடைய வேண்டியதுதான். எங்கள் லாரியோ எட்டு டன் கனமிருக்கிறது. பக்கத்து ரெஜிமெண்டுக்கு போன் செய்து ஒரு லாரி அனுப்பச் சொல்லியிருக்கிறேன். அது தயாராகி வர இன்னும் ஒரு மணி நேரமாவது ஆகும். நான் போவதற்குள் நம்

படையினர் நிலை என்னவாகுமோ? இதை எண்ண எண்ண என்னுடைய மனம் என்னவோ பண்ணுகிறது.

ஆ! அது என்ன ஓசை? யாரோ சோகக் குரலில் பாடுவது போலிருக்கிறதே! இந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு இவ்வளவு சோகத்துடன் பாடுபவர் யார்? வரும்பொழுது எவரையும் காணவில்லையே! சுற்றுப்புறத்தில் வீடுகள் எதுவும் இல்லை. கத்திக் கொண்டிருந்த பட்சிகளும் ஓய்வு எடுத்துக் கொண்டு விட்டன. பாடுபவர் ஆண் மாதிரியல்லவா தெரிகிறது! யாராக இருக்கும்? என்னுடன் ஹவில்தார் ரஹ்மத்கானைத் தவிர வேறு யாரும் வரவில்லை. ரஹமத்கான் என்னளவில் ஒரு ஔரங்கசீப். பாட்டு என்றால் படி என்ன விலை என்று கேட்பான். அவனும் "இதோ வருகிறேன்" என்று சொல்லி எங்கோ போனான். ஒரு வேளை நமாஸ் படிக்கப் போயிருக்கிறானோ, என்னவோ?

"அவன் ஒரு தீவிர இஸ்லாமியன், இந்துக்களை வெறுப்பவன், அவனிடம் அளவோடு பழகு" என்று எல்லோரும் என்னிடம் கூறினார்கள். ஆனால் அவன்தான் என் கீழ் வேலை செய்ய வேண்டும் என்று ராணுவ அதிகாரி என்னிடம் கூறிவிட்டார்.

காரிருளில் வெளிச்சம், துன்பத்தின் சூழலில் அமைதி கிடைப்பது போல், அதோ தோன்றுகிறதே! ஏது அந்த வெளிச்சம்? அதுவும் மறைந்து விட்டது. இப்பொழுது தெளிவாக அப் பாட்டு கேட்கிறது.

"ஸோனி கி மெளஜ் மே மேகல்
தடப் ரஹா ஹை—உதர்
மேவல் கி மெளஜ் மே ஸோனி
தடப் ரஹீ ஹை —ஹாய் பகவான்"

அந்தக் குரலொலியும் நின்று விட்டது. மரங்களினூடே புகுந்து செல்லும் காற்றும், இரவில் சத்தமிடும் சில பூச்சிகளும் எழுப்பும் ஒலிதான் காதைப் பிளக்கிறது. ரஹமத்கானையும் காணோம். என்னைப் பயம் மெல்லக் கவ்வ ஆரம்பித்தது. நதிக்கரையை விட்டு எழுந்திருந்து லாரியில் ஏறி விளக்கைப் போட்டுக்கொண்டு அமர்ந்தேன்.

"ஸாப்ஜீ! மாப்கீஜியே! கொஞ்சம் நேரமாகிவிட்டது. இந்தாருங்கள் ஆப்பிள் நன்றாயிருக்கும். சாப்பிடுங்கள்."

"ரஹமத்கான்! ஏனப்பா இவ்வளவு நேரம்? இருட்டில் தனியாயிருக்கப் பயமாகத்தான் இருக்கிறது."

"சாப்ஜீ! நீங்க பயப்பட்டீங்களா? ஓ...ஒரு வேளை அந்தப் பாட்டைக் கேட்டிருப்பீங்க."

"எந்தப் பாட்டு?"

"அதுதான் ஸாப்ஜீ! ஸோனி கி மெளஜ் மே........"

"ஹவில்தார்! உனக்கு அந்தப் பாட்டு தெரியுமா? யார் பாடினது? அதன் பொருளென்ன?" என்று கேட்டேன் இடைமறித்து.

"நீங்க ரொம்பப் படிச்சவங்க. லைலா-மஜ்னு, ரோமியோ-ஜூலியத், அனார்கலி கதைங்க எல்லாம் படிச்சிருப்பீங்க. ஆனால் இந்த "ஸோனி-மேவல்" காதல் கதையை இந்த வட்டாரத்து மக்களைத் தவிர வேறு யாரும் அறியமாட்டாங்க. அந்தப் பாட்டுக்கு அர்த்தம் இதுதான்: 'ஸோனியின் பிரிவால் மேவல் வாடுகிறான், மேவலின் பிரிவால் ஸோனி வாடுகிறாள், ஹே கடவுளே, அவங்க இரண்டு பேரும் மேலுலகிலாவது இன்பம் காணட்டும்.'"

"ரஹமத்! நீ சொல்வதைப் பார்த்தால் கதை ஜோராக இருக்கும் போல இருக்கே. இன்னும் அந்த லாரி வர அரைமணியாவது ஆகும். வா! அப்படி அந்தப் புல் தரையில் உட்காரலாம்" என்று கூறிய வண்ணம் நானும் லாரியை விட்டு இறங்கிப் புல் தரையில் அமர்ந்தேன்.

ரஹமத்கான் 'ஸோனி — மேவலி'ன் காதல் கதையை ஆரம்பித்தான்.

★

ஜீலம் நதிக்கரையில் உள்ள சிற்றூர்கள் எல்லாமே இயற்கை வளம் பொருந்தியவைதான். ஸோனிகாம் ஜீலம் நதிக்கரையில் உள்ள கிராமத்திலே மிகவும் அழகு வாய்ந்தது. அவ்வூருக்கு இன்னும் அழகு சேர்த்தவள் ஸோனி. நாட்டாண்மைக்காரர், டாக்டர் கோபால் பிரசாதின் அருமை மகள்; கடைந்தெடுத்த பாவை. அங்கமெல்லாம் தங்கம்தான், சிரித்த முகம், விரிந்த கண்கள், எடுப்பான நாசி, மாதுளை மொக்கு போன்ற உதடுகள் சாயம் பூசாமலே சிவந்து இருக்கும். பார்ப்பவரை மறுமுறையும் பார்க்கத் தூண்டும் பேரழகு. உலகம் தெரியாத இளங் கன்னி. வெகுளி, சாதி, மதம், சம்பிரதாயம் இதன் தத்துவம் தெரியாத பாக்கியசாலி. அழகன் மேவலின் காதலி.

மேவல் முஸ்லிமானாலும் எம்மதமும் சம்மதம், அல்லாவின் குழந்தைகளே அனைவரும் என்ற பரந்த மனப்பான்மை கொண்டவன்; ஸோனியின் இளம் பருவத் தோழன். இன்றையக் காதலன்.

ஸோனி—மேவலின் காதல் விவகாரம் அவர்கள் இருவரையும் தவிர வேறு யாருக்கும் தெரியாது. பிறர் எதிரில் அறிமுகமில்லாதவர் போல் நடந்து கொள்வார்கள்; தனியாகச் சந்திக்கும்போது அவர்கள் இவ்வுலகையே மறந்து விடுவார்கள். இவர்கள் விஷயம் கோபால் பிரசாதுக்குத் தெரிந்தால் போதும். மேவல் உயிர் வாழ முடியாது; இருவரும் மணக்கச் சமூகமும் இடம் தராது; இதையெல்லாம் மேவல் அறிவான். ஸோனிக்கும் அறிவுறுத்தினான். ஆனால் அவர்களால் ஒருவரையொருவர் வெறுப்பதோ பிரிவதோ இயலாத காரியம். ஏதோ ஒரு நம்பிக்கையே அவர்கள் காதலை வளர்த்து வந்தது.

நாடு சுதந்திரம் அடைந்தது. சாதி பேதமற்ற சர்க்கார் வந்தது என்று எல்லோரும் ஆர்ப்பரித்தனர். "இந்து-முஸ்லிம் பாயீ பாயீ" என்ற கோஷம் ஸோனிகாம் முழுவதும் ஒலித்தது. காதலர் இருவரும் இதைக் கேட்டுக் களிப்பெய்தினர்.

ஆனால்...அந்தோ......கத்தியின்றி, இரத்தமின்றி விடுதலை பெற்ற இந்தியாவில், நாட்டு விடுதலைக்குப் பிறகு இரத்தம் சிந்தப்பட்டது; பத்து இந்துக்களைக் கொன்றவனே உண்மை முஸ்லிம் என்று கருதப்பட்டான். இந்து மத

தர்மப்படி நடப்பவன் குறைந்தது பதினைந்து முஸ்லீம்களையாவது கொன்றிருக்க வேண்டும் என்று வகுப்புவாத வெறியர்கள் வடநாடு முழுவதும் ஓலமிட்டனர். கத்தி பிடித்தவனே கண்ணியவான் ஆனான். மாதர்களின் கற்பு சூறையாடப்பட்டது. சிசுக்கள் கொல்லப்பட்டன. வீடுகள் தீக்கு இரையாயினர். வீடு வாசல், மாடு, கன்றுகளை விட்டு விட்டு மக்கள் புகல் தேடி ஓடினர். அண்ணல் காந்தியடிகளும் அமரரானார். நினைத்தாலே நெஞ்சம் வெடிக்கும் சம்பவங்கள் வட இந்தியாவின் ஒவ்வொருபாகத்திலும் நடந்து வந்தன.

ஸோனிகாம் மட்டும் இதற்கு விதிவிலக்கா, என்ன! இந்துக்கள் அதிகமுள்ள அப்பகுதியில் மக்கள் மாக்களாக மாறினர். ஒரு முஸ்லிம் கூட அங்கு இருக்கக் கூடாது என்ற கொடூர எண்ணம் கொண்டனர். பலன்? ஒரு இந்து மத வெறியனின் கைத் தடி சமத்துவ எண்ணம் கொண்ட மேவலின் ஒரு காலைப் பலி வாங்கியது. கால் முடமான மேவல் அன்றிரவே நண்பர்கள் உதவியால் ஜீலம் நதியைக் கடந்து அக்கரையில் உள்ள மேவல்பூருக்குச் சென்றான். தனது நண்பன் அஹமதின் வீட்டில் தங்கினான்.

மஹாத்மாவின் மரணம் மத வெறியர்களின் செயலை ஓரளவு மட்டுப்படுத்தியது எனலாம். காலம் கடந்தது. ஜீலம் நதி வழக்கம் போல் அமைதியாகச் சென்று கொண்டிருந்தது. சில நாட்களுக்கு முன் அந்த இரத்த வெள்ளம் பெருகியது என யாரும் கூற முடியாத அளவுக்கு மாறி விட்டது.

★

கோடை காலம். ஜீலம் நதியில் ஆழமில்லை; வேகமுமில்லை. பௌர்ணமி சந்திரன் பால்போல் பிரகாசித்துக் கொண்டிருந்தான். ஜீலம் நதிக்கரையில் அமர்ந்தவாறு சந்திரனின் பிரதிபிம்பத்தை நதியில் பார்த்துக் கொண்டிருந்தான் மேவல். அவன் ஆருயிர் நண்பன் அஹமத் ஒரு கவிஞன். கவிதை புனைய எண்ணி இயற்கை செய்யும் ஜாலங்களைப் பார்த்துக் கொண்டே ஏதோ யோசித்துக் கொண்டிருந்தான். மேவல் திடீரென்று அழ ஆரம்பித்தான். அஹமதின் கற்பனை கலைந்து விட்டது.

''மேவல்! ஏனப்பா திடீரென்று அழுகிறாய்? என்ன சொன்னாலும் ஸோனியை மறக்க மாட்டியா? அவள் எப்படியப்பா இந் நதியைக் கடந்து உன்னைத் தேடி வர முடியும்? அழாதே! உண்மைக் காதல் ஒருவரை யொருவர் பார்க்காமலேயே வளரும். அது தான் நிலைத்தும் நிற்கும். ஸோனியைப் பற்றி நினைப்பதை விடுத்து உங்கள் பழைய காலக் காதல் நினைவுகளை எண்ணி மனத்தைத் தேற்றிக் கொள், அப்பா!'' என்றான்.

'' அஹமத்! என் அருமை நண்பா! நீ என்ன சொன்னாலும் என் மனம் சாந்தியடைய மாட்டேன் என்கிறதே......அஹமத்!...நான் ஸோனியை இப்படி நினைத்து உருகுவதுபோல் ஸோனியும் என்னை நினைத்து உருகுவாளா?''

'' மேவல்! நீ சொல்கிறதிலேருந்து அவளும் அப்படித்தான் உன்னை நினைத்து உருகிக் கொண்டிருப்பாள் என்று நினைக்கிறேன்.''

'' ஏன் அஹமத்! அப்படியானால் ஸோனியின் அழகிய முகம் பொலிவிழந்துபோகும், இல்லையா? ஆப்பிள் கன்னம் கண்ணீரால் கறைப்பட்டுப் போகும், இல்லையா? சிரித்துச் சிங்காரக் கதைகள் பேசும் அவள் கண்கள் அழுது அழுது சிவந்து போகும், இல்லையா? பொற் சிலை போன்ற அவள் மேனி அழுத நிறல் கறைபட்ட சித்திரம் போல் காணப்படும், இல்லையா? ஐயோ!......நினைக்கவே என் நெஞ்சம் நடுங்குகிறதே. அல்லாவே, என் ஸோனி என்னை நினைக்கவே வேண்டாம். அழகுப் பதுமை அதன் புது மெருகு குன்றாமல் என்றும் ஜாஜ்வல்யமாய்ப் பிரகாசித்துக்கொண்டே இருக்கட்டும். அந்த உயிரோவியத்தை என் மனக்கண்ணால் பார்த்த வண்ணமே என் ஆவியை முடித்துக் கொள்கிறேன். அதுவே எனக்குப் போதும்'' என்று சொல்லிய வண்ணம் கண்களை மூடிக் கொண்டான் மேவல்.



அஹமத் முகத்தை வேறு பக்கம் திருப்பிய வண்ணம் கண்களில் துளிர்த்த நீரைத் துடைத்துக் கொண்டான்.

அதே சமயம் ஒரு உருவம் நதியைக் கடந்து வந்து கொண்டிருந்தது. நிலவொளியில் அவ்வுருவம் பெண்ணுருவம் எனத் தெளிவாகத் தெரிந்தது. அஹமத் மேவலைத் தன் மடியிலிருந்து எடுத்துத் தரையில் படுக்கவைத்தான். எழுந்து இருளில் மறைந்து வருவது யாரெனப் பார்த்தான். அவ்வுருவம் இக்கரையை அடைந்தது. அவ்வுருவம் யார் தெரியுமா? வேறு யார்...... ஸோனிதான்!

'' ஸோனி! நீயா! எப்படி இங்கு வந்தாய்? அதுவும் இந்த இருளில் இந்த நதியை எப்படிக் கடந்தாய்?'' என்று மறைவிடத்திலிருந்து வெளிப்பட்ட அஹமத் கேட்டான்.

'' ஐயா! நீங்கள் யார்? என் பெயர் எப்படித் தெரியும், உங்களுக்கு? இதோ என்

குழந்தைகளின் வயிற்றுவலியினை துரிதமாக சமனம் செய்வது



# க்ரைப்பானில்

(க்ரைப் மிக்சர்)

95 'டஸ்ஸனுள்' வருடங்களின் தயாரிப்பு

# ஜம்மியின் "லிவர்க்யூர்"

## குழந்தைகளின் ஈரல் குலேக்கட்டி வியாதிகளுக்கு

### மாதாந்திர விஜயம்

எமது வாடிக்கையாளர்களின் நலனையும், சௌகரியத்தையும் முன்னிட்டு எமது டாக்டர் கீழ்க்கண்ட இடங்களில் ஒவ்வொரு மாதமும் குறிப்பிட்ட தேதிகளில் விஜயம் செய்கிறார். அப்பொழுது அவரை நேரில் கண்டு ஆலோசிக்கலாம்.

ஆலோசனை நேரம்: குறிப்பு:—காலை 9 to 11 மணி வரை; மாலை 3 to 5 மணி வரை

| இடம் | தேதி | விலாசம் |
|---|---|---|
| தஞ்சாவூர் | 17 காலை & மாலை | ராஜா சத்திரம், (ராஜா ரெஸ்ட் ஹவுஸ்) |
| பட்டுக்கோட்டை | 18 காலை | விசாரிக்கவும்: முருகன் மெடிகல் ஹால் பட்டுக்கோட்டை ட்ரக் ஸ்டோர்ஸ் |
| திருத்துறைப்பூண்டி | 18 மாலை | ஸ்ரீ டி.வி. சந்திரசேகரம் பிள்ளை மெடிகல் ஹால் |
| மன்னார்குடி | 19 காலை | மீனு கிளினிக், காந்தி ரோடு |
| திருவாரூர் | 19 மாலை | விசாரிக்கவும்: சுப்பய்யா மெடிகல் ஸ்டோர்ஸ் நியூ மெடிகல் ஸ்டோர்ஸ், சகுந்தலா பார்மஸி |
| நாகப்பட்டினம் | 20 காலை | எஸ்.டி. சுந்தரராஜா பிள்ளை & சன் கெமிஸ்ட்ஸ் |
| நன்னிலம் | 20 மாலை | ஜி. எஸ். ராஜன் & ஆர். ஆர். சுவாமி ஜெனரல் மெர்ச்சண்ட்ஸ் |
| மாயவரம் டவுன் | 21 காலை & மாலை | ராமகிருஷ்ணா வைத்தியசாலை, நெ. 1, கிருஷ்ணராயர் வீதி |
| சீர்காழி | 22 காலை | ஸ்ரீ எஸ். நடராஜன், வாய்க்கால்கரை தெரு |
| விருத்தாசலம் | 22 மாலை | ஸ்ரீ நடராஜா மெடிகல் ஹால் |
| சிதம்பரம் | 23 காலை & மாலை | ஸ்ரீ நடராஜா டிஸ்பென்ஸரி, கெமிஸ்ட்ஸ் |
| கடலூர் N. T | 24 காலை & மாலை | கமலா & கோ., கெமிஸ்ட்ஸ், புதுபாளையம் |
| பாண்டிச்சேரி | 25 காலை | ஆனந்தா எம்போரியம், டூப்ளே தெரு |
| திண்டிவனம் | 25 மாலை | விஜயா மெடிகல் ஸ்டோர்ஸ் |
| விழுப்புரம் | 26 காலை & மாலை | வாசவி விஹார், பிரான்ச்: போர்டிங் & லாட்ஜிங் பாண்டி ரோடு |
| காஞ்சிபுரம் | 28 காலை & மாலை | 86, சாலைத் தெரு, பெரிய காஞ்சிபுரம் |
| வேலூர் | 29 காலை & மாலை | வி.பி. சிவம் & கோ., கெமிஸ்ட்ஸ், லாங் பஜார் |
| ஜாம்ஷெட்பூர் | 15; (9 to 11 பகல் | & (மாலை 4 to 6) ஸிடி கெமிஸ்ட்ஸ், லாக்னி |
| கரக்பூர் | 4 காலை & மாலை | யுனைடெட் மெடிகல் ஸ்டோர்ஸ், கெமிஸ்ட்ஸ் & டிரக்கிஸ்ட்ஸ், N.T.E. 155, ரயில்வே மார்க்கெட் |
| ஜபல்பூர் | 15; (8 to 12 பகல்) (3 to 5 மாலை) 16; (8 to 12 பகல்) | மாடர்ன் ஹோட்டல் (அப்துல்லாபாய் & சன்ஸ் எதிரில்) அந்திரிஹேல். டெலிபோன்: 346) |

ஜம்மி வெங்கடரமணய்யா அண்டு சன்ஸ்

சென்னை • திருச்சிராப்பள்ளி • கும்பகோணம்

கரையிலிருக்கும் இந்த மண் குடுவையைப் பிடித்துக் கொண்டு நீந்தி வந்தேன்.''

அவள் கையில் வேக வைத்த ஒரு பெரிய மண் குடுவை இருந்தது; அதன் வாய் மிகவும் குறுகலாக இருந்தது. அதைத் தண்ணீரில் மிதக்கவிட்டு அதைப் பிடித்துக் கொண்டு ஜீலம் நதியைக் கடந்து வந்திருக்கிறாள்.

''அம்மா! என் பெயர் அஹமத். மேவலின் நண்பன். அவன் என்னிடம் உன்னைப் பற்றி நிறையக் கூறியிருக்கிறான். மேலும் நானும் உன்னை ஒருமுறை பார்த்திருக்கிறேன். வா என்னுடன்......அதோ மேவல் படுத்திருக்கிறான்'' என்று அழைத்தான்.

''மேவல்...எங்கே...எப்படி இருக்கிறார்?'' என்று ஆவல் மேலிடக் கேட்ட வண்ணம் அஹமதைப் பின்தொடர்ந்தாள் ஸோனி.

''மேவல்!...இதோ பார்!...உன் காதல் தெய்வம் உனக்குக் காட்சி கொடுக்க வந்திருக்கிறது!...எழுந்திருந்து பார்!''

''யார்?...என் ஸோனியா?...என் கண்ணின் கருமணியா?...வா, ஸோனி, உன்னை வரவேற்பதற்கு என்னால் எழுந்திருக்கக்கூட முடியவில்லையே.''

''ஐயோ! இந் நிலையில் உங்களைக் காண என்ன பாவம் செய்தேன்? உங்கள் கால் ஒடிந்ததைக் கேட்டு என் உள்ளமெல்லாம் பதறியது. உங்களைக் காணக் கூட என் வீட்டார் என்னை அனுமதிக்கவில்லை. பிறகு எங்கு சென்றீர்கள், என்ன செய்கிறீர்கள் என்று தெரியாமல் நான் எவ்வளவு வேதனைப் பட்டேன் என்பதைச் சொன்னாலும் நம்ப மாட்டீர்கள். இன்றுதான் என் தோழி ராதா சொன்னாள், நீங்கள் இங்கு இருக்கிறீர்கள், தினம் மாலையில் இந்த நதிக் கரைக்கு வருகிறீர்கள் என்று. அதனால் இன்று என் பெற்றோர் உறங்கியவுடன் இந்தக் குடுவையின் உதவியால் உங்களைக் காண வந்தேன்'' என்றாள் அன்பு வழிய.

''ஸோனி! என் மேல் உனக்கு எவ்வளவு அன்பு!'' என்று அவள் கையை ஆர்வத்துடன் பற்றினான் மேவல்.

தான் இனியும் அங்கிருப்பது தகுதியல்ல என்று அஹமத் அவ்விடம் விட்டகன்றான்.

★

காலத்துக்கு இருக்கும் வேகம் வேறு எந்த வாகனத்துக்கும் இருப்பதில்லை. சில சமயம் அதிலும் காதலர்களுக்குக் காலத் தூதைப் போல் கடும் வேகத்துடன் செல்வது வேறு எதுவும் இல்லை. ஆனால் அதுவே சிலருக்கு ஆமையைவிட மெதுவாக நகருவது போல் இருக்கும். மனத்தைப் பொறுத்துத் தான் காலத்தின் வேகமும் நமக்குப் புலப்படுகிறது என்றும் கூறலாம். ஸோனி மேவலைப் பொறுத்த வரை காலம் விரைந்து செல்லும் செயற்கைச் சந்திரனைவிட வேகமாகப் பறந்தது. கோடை கடந்து மாரியும் வந்தது. ஜீலம் நதியில் தண்ணீரும் கூடியது. உடன் குளிரும் சேர்ந்தது. ஆனால் காதலின் சக்தி இவ்விரண்டையும் பொருட்படுத்தவில்லை.

ஒரு நாள் இரவு. அயர்ந்து தூங்கிக் கொண்டிருந்த கோபால் பிரஸாதத்தைத் தட்டி எழுப்பியது விதி தாகம் என்ற உருவில். நீர் அருந்த உள்ளே சென்ற கோபால் பிரஸாத் வீட்டின் பின்புறக் கதவு திறந்திருப்பதைக் கண்டார். ஸோனியின் அறையில் ஸோனியைக் காணோம். பகீரென்றது அவருக்கு. இந்த இருளில் எங்கு சென்றிருப்பாள்? அவரால் புரிந்து கொள்ள முடியவில்லை.

விடிவெள்ளி முளைக்கச் சிலநாழிகை இருக்கையில், சொட்டச் சொட்ட நனைந்த வண்ணம் இடுப்பில் குடத்துடன் உள்ளே நுழைந்தாள் ஸோனி. கதவின் அருகில் இருந்த கோபால் பிரஸாதை அவள் பார்க்கவில்லை. கோபால் பிரஸாதின் மீசையைத் துடிக்க வைத்தது விதி. கோபத்தை அடக்கிக் கொண்டார் கஷ்டப்பட்டு. அவள் ஆசைக் காதலன் யார் என்று அறிந்து அவர்கள் இருவரையும் அழித்துவிட அவர் மனத்தில் கொடூர எண்ணம் தோன்றியது.

ஏ, எதிர்காலமே! ஸோனி-மேவல் இவர்களின் வாழ்வு எழிலுடையதா? ஏமாற்றம் நிறைந்ததா? நீதான் சொல்ல வேண்டும்.

★

மூன்றாவது நாள். காதலனைக் காணப் போகும் களிப்பில் கன்னி கையில் குடுவையுடன் கிளம்பினாள். அருமை அப்பாவுக்குத் தன் செய்கை தெரிந்து விட்டது. விதி இன்றிரவு விளையாடப் போகிறது என்று அறியா உள்ளத்துடன் சென்றாள்.

விதி இன்றிரவு மண்குடமாக உருவெடுத்திருக்கிறது என்பதை அறிவாளா, பாவம்!

கோபால் பிரஸாத் தமது மகளின் காதலன் மேவல் ஒரு முஸ்லிம், அந்நிய மதத்தினன் என்று அறிந்ததும் குலத்தைக் கெடுக்க வந்த கோடரிக் காம்பை, காதலனுடன் தீர்த்துக் கட்டத் தீர்மானித்துவிட்டார். காதலர்களைச் சேர்க்கும் புனிதப் பணியைச் செய்து வந்த மண் குடத்தின் மூலமே அவர்களை வேறுலகத்தில் சேர்த்து வைக்கத் துணிந்து விட்டார்.

ஜீலம் நதியில் தண்ணீர் வேகமாகப் போய்க் கொண்டிருந்தது. ஆழமும் அதிகம். அமாவாசை. இருள் தன் ஆட்சியை ஏகபோகமாக நடத்திக் கொண்டிருந்தது; தாரகைகள் கருநீலப் பட்டுப் புடவையில் பதித்த நல்வைரங்கள் போல் இருண்ட வானத்தில் காட்சி அளித்தன. மண் குடத்தைக் கவிழ்த்தாள் தண்ணீரில் கன்னி. மண் குடம் மிதந்து சென்றது. அதைப் பற்றிய வண்ணம் தண்ணீரில் மிதந்தாள், நதியைக் கடந்து காதலனைக் காண எண்ணி.

சிறிது தூரம் சென்றது மண்குடம். அக்கரையிலிருந்த வண்ணம் மேவலும் அஹமதும் இருளில் கண்ணை விரட்டிக் கண்டு கொண்டிருந்தனர்.

திடீரென்று, ''ஐயோ, மேவல்! ஏமாந்து விட்டேன். குடுவை மாறி விட்டது'' என்று அலறினாள் அபலை. ஆற்றுடன் அடித்துச் செல்லப்பட்டாள். அன்னவளின் அபயக் குரல் கேட்ட மேவல் காரணமறியாமல் கலங்கினான். ஸோனி ஆற்றுடன் சென்று விட்டாள் என்று அவனது உள் மனம் கூறியது. தான் நொண்டி என்பதை அவன் மறந்து விட்டான். 'ஸோனி' என்று கூவியவண்ணம் ஆற்றில் குதித்து விட்டான்;

விழி கோபால்பிரஸாதின் உருவில் வந்து கோரமாகச் சிரித்தது.

★

"என்ன ரஹமத்கான்! குடுவை எப்படி மாறியது? என்னதான் உண்மையில் நடந்தது அஹமத் என்னவானான்?" என்றேன், இதுவரை பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த நான்.

"ஸாப்ஜீ! அதை உங்கள் கற்பனைக்கு விட்டு விடலாம் என்றிருந்தேன். நீங்கள் கேட்பதால் சொல்கிறேன். ஸோனி உபயோகித்து வந்த குடுவை மண்ணில் செய்து வேக வைத்தது. ஸோனியின் தந்தைக்கு சோனி-மேவல் காதல் விவகாரம் தெரிந்ததும் அவர்களை ஒன்று சேர்த்த குடுவையாலேயே பிரிக்க வேண்டும் என்ற கொடூர எண்ணம் ஏற்பட்டது. எனவே ஸோனி குடுவையை வழக்கமாக வைக்கும் இடத்தில் அதற்குப் பதிலாகக் களிமண்ணில் செய்து காய்ந்த, ஆனால் வேக வைக்காத மண் குடத்தை வைத்தார். தண்ணீரில் அக் குடம் கரைந்து சோனியை ஆற்றுடன் அனுப்பியது உங்களுக்குத் தெரியும்."

"சரி சரி! அஹமத் என்னவானான்? அவன் இவர்களைக் காப்பாற்ற எதுவும் முயற்சி செய்யவில்லையா?"

"அவர்கள் இருவரும் ஆற்றுடன் போனது முதல் அவன் பைத்தியமாகி விட்டான். தினம் இருட்டியபின் கையில் ஒரு விளக்குடன்,

"ஸோனியின் பிரியாம்
மேவல் வாடுகிறான்
மேவலின் பிரியாள்
சோனி வாடுகிறாள்"

என்ற கவிதையை முணுமுணுத்த வண்ணம் ஜீனாப் நதிக் கரைக்கு வந்து விடியும் வரை அந்த நதியையே பார்த்துக் கொண்டு வருகிறான். நீங்கள் கேட்ட குரலும் அவனுடையதுதான்."










"அப்படியானால் [illegible] கண்டிப்பாக அவனைப் பார்க்க வேண்டும். வா! அவன் எங்கேயிருக்கிறான் என்று பார்ப்போம்."

"ஸாப்ஜீ! அதோ அந்த லாரியும் வந்து விட்டது. வாருங்கள் நாம் நமது வேலையைப் பார்ப்போம்."

"முடியாது, ரஹமத்கான்! நான் எப்படியும் அவனைப் பார்த்தாக வேண்டும்" என்றேன் விடாப்பிடியாக.

"ஸாப்ஜீ! மாப்கீஜியே! நீங்கள் நம்வண்டி இங்கே நின்று போனவுடன் ரொம்ப வருத்தப்பட்டீங்க, சீக்கிரம் பதான் கோட் போகமுடியவில்லையே என்று. அதனால் உங்க கவலையை மாற்ற வேணும் என்று நான்தான் நமாஸ் படித்து விட்டு வரும்போது ஒரு காகிதத்தைக் கொளுத்திக் கையில் வைத்துக் கொண்டு என் குரலை மாற்றி அந்தப் பாட்டைப் பாடினேன். நான் எதிர்பார்த்த படியே நீங்களும் அப் பாட்டைப் பற்றி என்னிடம் கேட்டீர்கள். நானும் கதை சொல்லி உங்கள் நினைவை மாற்றினேன். இந்தப் பக்கம் ஸோனிகாம், மேவல்பூர் என்ற கிராமங்களே கிடையாது. எல்லாம் என் கற்பனை. என்னை மன்னித்து விடுங்கள்" என்றான் பணிவுடன்.

எனக்கு என்ன சொல்வதென்றே தெரியவில்லை. "ரஹமத்! நீ உண்மையில் மிக சாமர்த்தியசாலி. ரொம்பவும் நல்லவன். உன்னைப் பற்றிச் சிலர் என்னிடம் இழிவாகச் சொன்னார்களே, உன் நல்லெண்ணமும் அன்பு மனமும் அவர்களிடம் உண்டா?" என்றேன்.

வண்டிகள் சிறிது நேரத்தில் பாலத்தைக் கடந்து பதான்கோட்டை நோக்கிச் சென்று கொண்டிருந்தன. என் மனத்திரையில் ரஹமத்கான் உயர்ந்து விட்டான்.

SY 101a

# பின்னியின் காட்ஸ்வால்

**உங்கள் சருமத்திற்கு சம சீதோஷ்ணநிலை யளிக்கும் அதிசயத் துணி!**

"இஷ்டப்படி விளையாடலாம், குழந்தைகளே! காட்ஸ்வால் குளிரிலிருந்து பாதுகாக்கும். அணிவதற்கும் அழகாக இருக்கும்."

**காட்ஸ்வால் விசேஷ மதிப்புடையது:**

அது உயர்ந்த ரகக் கம்பளியும் பருத்தியும் கலந்து அதி ஜாக்கிரதையுடன் விஞ்ஞான முறையில் தயாரிக்கப்பட்டது.

நீடித்து உழைப்பதுடன் என்றும் மென்மையாக இருக்கிறது.

அது எல்லா குழந்தைகளுக்கும் ஏற்றது. மிக்க மென்மையான சருமத்தைக்கூட உறுத்தாது.

சீதோஷ்ண நிலையில் ஏற்படும் திடீர் மாறுதல்களிலிருந்து பாதுகாக்கிறது.

அது எப்போதும் பார்க்க நேர்த்தியாக இருக்கும். எந்த பருவ காலத்துக்கும் ஏற்றது.

காட்ஸ்வால் சுருங்காதென உத்தரவாதம். காட்ஸ்வால் துணியை வீட்டிலேயே சலவை செய்யலாம்.

பல்வித கலர்களிலும் டிஸைன்களிலும் கிடைப்பதால் உங்களுக்கு வேண்டிய ரகத்தைத் தேர்ந்தெடுக்கலாம்.

**காட்ஸ்வாலுக்கு ஈடு எதுவும் இல்லை**

**அதிகக் குளிரிலிருந்து பாதுகாக்க பின்னியின் அங்கோலாவை அணியுங்கள்**

உங்கள் அபிமானம் பெற்ற காட்ஸ்வால் விற்பனையாளரிடம் இலவச 'மாதிரி போல்டர்' கேளுங்கள்.



திி பங்களூர் உல்லன், காட்டன் & ஸில்க் மில்ஸ் லிட்.
மானேஜிங் ஏஜெண்டுகள்: பின்னி & கம்பெனி (மதருஸ்) லிட்.

# சென்னையில் பூப்பந்து மழை

“பூப்பந்து விளையாட்டு பெண்கள் விளையாட்டு. அதைப் பார்த்து ரஸிப்பதற்கு என்ன இருக்கிறது? என்று ஒருசிலர் சொல்கிறார்களே, உனக்குத் தெரியுமா?” என்று கேட்டது பூப்பந்து மட்டை.

“அது ஆட்டத்தைப் பாராமலே கதை விடும் பழங்காலப் போர்வழிகளின் வார்த்தை. அப்பா! எத்தனை வளைவுகளுக்கும் நெளிவுகளுக்கும் குண்டுத் தாக்குதலுக்கும் உள்ளாகி நான் மெலிந்து உருமாறிப் போகிறேன், தெரியுமா? இவ்வளவையும் இந்த அபாரமான ஆட்டத்தின் பெருமையைக் கண்டு பூரித்துப் போய்ப் பொறுத்துக் கொள்கிறேன்!” என்று கண்ணீர் விடாக் குறையாகக் கூறியது பூப்பந்து.

“உன்னை மட்டும் சொல்லிக் கொள்கிறாயே? சின்ன கப்பையனும், கரீமும் அடிக்கிற ‘டமால்’ அடிகளிலே, மாரியின் ‘சவுக்கடி’களிலே என் வலை கட்டுகள் எத்தனை தரம் அறுந்துவிட்டன தெரியுமா?”

“பாவம், கரீம்! நல்ல ஆட்டத் திறமை இருந்தும் அவரது குழுவினர்கள் சரியாக விளையாடாததால் அவர் ஜவர் விளையாட்டுப் போட்டியிலும், இருவர் ஆட்டத்திலும் தோல்வியடைந்தார்...”

“ஆனால் ஜில்லா ஜவர் போட்டியில், சென்னைகட்சிக்குப் பிரமாதமாக ஆடி வெற்றி தேடித் தந்து, பரிசைத் தட்டிக் கொண்டு போய்விட்டாரே!” என்றது பந்து மட்டை.

“அவராவது பரவாயில்லை. பூப்பந்து விளையாட்டுக் கலையிலே ஆசிரியராகத் திகழும் ராஜகோபாலுக்கும் அந்தக் கதிதானே நேர்ந்தது?” என்று கூறியது பூப்பந்து.

“அவருக்கு வயசாகி விட்டது! அதனால் அவருக்கு விசேஷப் பரிசும் வழங்கி விட்டார்கள்!”

‘வயசானால் என்ன? அவருடைய விளையாட்டுத் திறமை இன்னும் குறைந்துவிடவில்லை! வயசான கிழவர் பெயின்ஸ் சின்னப் பிள்ளை மாதிரி அபாரமாக ஆடி வெற்றிக் கோப்பையை அடைந்து விட்டாரே! விளையாட்டுக்கும் வயசுக்கும் சம்பந்தம் இல்லை...”

“ஆனால் அதிர்ஷ்டத்துக்கும் ஆட்டத் திறமைக்கும் நிறையச் சம்பந்தம் உண்டு.

1. ராஜகோபால். 2. சின்ன கப்பையன். 3. சுந்தரராஜன். 4. பெயின்ஸ் 5. ஜெயபால். 6. கோபால். 7. விஜயன். 8. கோவிந்து.



ஐவர் விளையாட்டுப் போட்டியில் ஆப்ரகாம் பண்டிதர் ஞாபகார்த்த கிளப் குழுவினருக்கும் அக்ரிகல்சரல் பார்ம் ரிக்ரியேஷன் கிளப் கோஷ்டியினருக்கும் நடந்த விளையாட்டுப் போட்டியில் அதிர்ஷ்டம் போட்டியை முடிவு செய்தது. திருச்சி டெலிபோன் இலாகாவைச் சேர்ந்த ஜோசப், ஜயபால், சந்தானம், கோபால், கணபதி ஆகியவர்கள் வெற்றி பெற வேண்டி இருந்தும் கடைசி ஒரு எண்ணிக்கையில் அதிர்ஷ்டம் தன் கைவரிசையைக் காட்டி விட்டது. ஆப்ரகாம் பண்டிதர் ஞாபகார்த்த கிளப் கோஷ்டியினரான வஹாப், பெயின்ஸ், சின்ன கப்பையன், சுந்தரராஜன், பத்ருடீன் ஆகியவர்களுக்கு வெற்றி தேடித் தந்தது. அவர்கள் முந்தின நாள் ஆடிய ஆட்டத்தில் அதிர்ஷ்டம் மயங்கி விட்டது!'' என்றது பந்து மட்டை.

# குண்டுமணி

'' அதிர்ஷ்டம் மட்டும் என்ன? அன்று கூடியிருந்த ரஸிகர்கள் அனைவருமே மயங்கி விட்டார்கள். சின்னகப்பையனின் விளையாட்டைக் கண்டு அப்படியே சொக்கிப் போய்விட்டனர்!'' என்றது பூப் பந்து.

'' அதனால்தானே அவருக்கு விசேஷப் பரிசும் வழங்கிக் கௌரவித்து விட்டார்கள்!''

'' இந்தப் பூப்பந்தாட்டத்தில் அதிர்ஷ்டக்காரர் வஹாப்தான். ஜில்லா, இருவர், ஐவர் விளையாட்டுப் போட்டிகள் அனைத்திலும் அவருக்கு மூன்று வெள்ளிக் கோப்பைகள் கிடைத்துவிட்டன.''

'' ஆனால் இருவர் விளையாட்டு இறுதிப் போட்டியில் வஹாப் குண்டுமாரி பொழியும் மாரியோடு ஆடியும், இரு இளைஞர்கள் அவரை உலுக்கி எடுத்து விட்டார்கள். இளமை ரத்தம் பாய்ந்தோடும் மாப்பிள்ளையனும், கோவிந்துவும் பூப்பந்தாட்டத்தில் குடுகுடு வென்று முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் இளைஞர்கள்.''

'' அவர்கள் மட்டும் என்ன? சிவகங்கை கோபால், நெவல் ராமகிருஷ்ணன், சமால்கோட் ஜமீன்தாரிணி கிளப் குழுவினர்கள், திருச்சி ஜில்லா சங்க விளையாட்டுக் குழுவினர்கள், சாரதி ஞாபகார்த்த விளையாட்டுக் கோஷ்டியினர் ஆகியவர்களெல்லாம் இளமைக்கு வெற்றி தேடித் தந்தவர்கள்!''

''சென்னை ராஜ்யத்திலுள்ள விளையாட்டுக் கலைஞர்களுக்கெல்லாம் ஒருமுகமாக விளையாடும் சந்தர்ப்பத்தை ஏற்படுத்திக் கொடுத்த சென்னை ராஜ்ய பூப்பந்தாட்டச் சங்கத்தையும் பாராட்ட வேண்டும்.''

'' அது மட்டுமல்ல; தள்ளாத வயதிலும் ஓடியாடிக் கண்டிப்புடன் நிர்வகித்த திரு கோவிந்தராஜுலு நாயுடுவையும், திரு ராமச்சந்திரனையும் பாராட்ட வேண்டும்!''




1. சந்தானம். 2. கரீம். 3. மாசி. 4. ஜோசப். 5. மாப்பிள்ளையன். 6. ஜெகந்நாதன். 7. வஹாப். 8. புஷ்பாங்கம்.




# டீ கேர்ல்
# டீ டஸ்ட்
## இது
## சிறந்த ஸ்ட்ராங்
## டீ
## தருகிறது

LIPTON (INDIA) LTD. (Incorporated in England)

## ஆஸ்த்மா, பிராங்கைட்டிஸ் ஜலதோஷத்தை நிறுத்துக.

ஆஸ்த்மா பிராங்கைட்டிஸ், ஜலதோஷத்தால் மூச்சுத் திணறல் இருமல், தும்மல் மூச்சடைப்பு உபாதைகளால் அவதிப்படும் பல்லாயிரக்கணக்கானவர்கள் இப்போது மெண்டாகோ (Mendaco) அருந்தி அற்புத நிவாரணம் அடைகிறார்கள். இந்த நவீன, விஞ்ஞான அமெரிக்க மருந்து இரத்தத்தின் வழியே சுவாசப் பைகள், சுவாசக் குழாய்கள், மூக்குக்குச் சென்று அங்கு கெட்டியாக அடர்ந்துள்ள சளியை இளக்கிக் கரைக்கிறது. பின்னர் நீங்கள் இருமல் தும்மலின்றிச் சுகமாகச் சுவாசித்துக் குழந்தைபோல் தூங்கலாம். கெமிஸ்டிடம் மெண்டாகோ (Mendaco) வாங்குக. திருப்தி இன்றேல் பணம் வாபஸ்.

## முகப் பருக்கள் நீங்கி விடுகிறது -3 நாளில் அதன் மூலகாரணம் கொல்லப்படுகிறது

நிக்ஸோடர்ம் (Nixoderm) முதல் முதலில் உபயோகிக்கத் தொடங்கியவுடனே முகப்பருக்கள் எல்லாம் மாயமாய் மறையத் தொடங்குகின்றன. இன்றிரவே நிக்ஸோடர்ம் (Nixoderm) உபயோகியுங்கள். விரைவில் உங்கள் சருமம் மிருதுவாகவும், வழுவழுப்பாகவும் மாசு மறுவின்றியும் ஆவதைக் காண்பீர்கள். நிக்ஸோடர்ம் (Nixoderm) சருமத்தின் மீது ஏற்படும் முகப்பருக்கள், பிளவைகள், தேமல்கள், கரப்பான், படை, கட்டிகள் இவைகளுக்குக் காரணமான கிருமிகளையும், பூச்சிகளையும் கொல்லும் ஒரு புதிய முறை. இன்றே உங்கள் கெமிஸ்டிடமிருந்து நிக்ஸோடர்ம் (Nixoderm) வாங்குங்கள். முகப்பருக்களை ஒழித்து உங்கள் சருமத்தை சுத்தமாகவும், மிருதுவாகவும், வழுவழுப்பாகவும் செய்ய உத்தரவாதம். அன்றேல் வெற்றுப் பெட்டியை அனுப்பினால் பணம் வாபஸ்.

**Nixoderm**
நிக்ஸோடர்ம்
சருமஉபாதைகளுக்கு





மன்னன் மார்த்தாண்டன் தன் முன் நின்ற இளைஞனைக் காலோடு தலை ஏறஇறங்கப் பார்த்தான். அவன் உள்ளத்திலே நிலவிய திருப்தியை முகம் பிரதிபலிக்கவில்லை என்றாலும் அவன் குரல் ஓரளவு பிரதிபலித்தது.

''உன் பெயர் என்னவென்று சொன்னாய்?'' என்று கேட்டான் மார்த்தாண்டன். அரண்மனைப் பூந்தோட்டத்தின் மத்தியில் நிறுவப் பட்டிருந்த பளிங்குமண்டபத்தின் அலங்கார மேடையில் மன்னன் ஒய்யாரமாகச் சாய்ந்து கொண்டிருந்தான். மலர்களின் நறுமணத்தைத் தாங்கி வீசிய தென்றல் சூழ்நிலையை இன்பம் நிறைந்ததாகச் செய்து கொண்டிருந்தது.

''மன்னர் பெருமானே! என் பெயர் சந்திரன்'' என்றான் சற்றுத் தள்ளிப் பணிவுடன் கரம் குவித்து நின்றிருந்த அந்த இளைஞன். அவனுடைய பரந்த நெற்றியுடன் ஒளிவீசும் கண்களும், கூரிய மூக்கும் அவன் ஒரு கலைஞன் என்பதைச் சுட்டிக் காட்டின.

''சந்திரன்!.. நல்ல பெயர்...!'' என்று சொன்ன மார்த்தாண்டன் கலகலவென்று சிரித்தான். தொடர்ந்து ''வானத்துச் சந்திரனிடம் களங்கம் உண்டு என்பார்கள்!... உன்னிடமும் அப்படி ஏதாவது ..'' என்றான்.

இளைஞனின் முகம் கறுத்தது. ''மன்னர் பெருமானே! மன்னிக்க வேண்டும். உள்ளத்திலே களங்கம் ஏற்படுவது சூழ்நிலையைப் பொறுத்தது. இப்போது இல்லாதபோனாலும் பின்னால் ஒருவேளை ஏற்படலாம். அல்லது ஏற்படாமலும் இருக்கலாம். ஆனால் என் ஓவியக் கலையைப் பொறுத்தவரை அது களங்கம் கலவாதது என்று உறுதி கூற முடியும்'' என்றான். அவன் வார்த்தைகளில் உணர்ச்சி வேகம் தேங்கி நின்றது.

''சந்திரா! உன் பதிலில் இருந்த நேர்மையையும் உறுதியையும் கண்டு நான் மகிழ்ச்சியடைகிறேன். ஓவியக் கலையில் உனக்கு இருக்கும் திறமையைக் காண்பிக்க நீ கொண்டு வந்திருக்கும் ஓவியங்கள் எனக்கு உன்னிடம் மிகுந்த நம்பிக்கையை ஏற்படுத்தியிருக்கின்றன. ஆனாலும் உன் திறமையை நான் நேரடியாகவே பரிசோதிக்க விரும்புகிறேன். இதோ என்னை நன்றாகப் பார்த்துக் கொள். அவகாசம் குறைவுதான். ஆனால் என் உருவத்தை மனத்தில் வைத்துக் கொண்டு என் உருவத்தைச் சித்திரமாகத் தீட்ட உனக்கு ஒரு மாத அவகாசம் அளிக்கிறேன். இந்தப் பூந்தோட்டத்தின் மறுகோடியில் ஒரு தனி மண்டபம் இருக்கிறது. ஒருமாத காலத்தையும் நீ வெளி உலகைப் பார்க்காமல் அந்த மண்டபச் சுவரில் என் உருவத்தை வரைய வேண்டும். வசதி நிறைந்த மண்டபம் அது. உனக்கு வேண்டிய உணவு வகைகளும் வண்ணச் சேர்க்கைகளும் அவ்வப்போது கிடைக்கத் தாதி ஒருத்தி உதவுவாள். குறிப்பிட்ட காலத்துக்குள், நீ வெளியே வர முயற்சி செய்தாலோ, தப்பிப் போக முயற்சி செய்தாலோ என் கோபத்துக்குப் பாத்திரமாவாய். சம்மதமா? நான் வற்புறுத்தவில்லை.'' மார்த்தாண்டன் சந்திரனின் கண்களையே உற்றுப் பார்த்தான்.

''பூர்ண சம்மதம், மன்னவா!'' என்றான்.

★

மார்த்தாண்டனே சிறந்த ஓவியக்கலைஞன் என்று மக்கள் அறிந்திருந்தனர். ஆனால் அவன் பெயரை ஒட்டி அபக்கியாதியும் சூழ்ந்திருந்தது. மக்கள் ரகசியமாகத்தான் பேசிக் கொண்டார்கள்: 'பொறாமை மிகுந்தவன். தன்னைவிடச் சிறந்த ஓவியர்களைக் காணச் சகியாதவன். அவனிடம் சன்மானம் பெறவந்த சில கலைஞர்கள் போன இடம் தெரியவில்லை. அவர்களை ரகசியமாகக் கொன்றுகூடத் தீர்த்திருப்பான். சாதாரண ஓவியர்கள் வந்தால் உடனடியாக ஏதோ சன்மானம் கொடுத்து அனுப்பி விடுகிறான்'' என்ற பேச்சு சந்திரன் காதில் விழாமலில்லை. ஆனால் அவன் மனத்திலே ஒரு லட்சியத்தோடுதான் மார்த்தாண்டனிடம் வந்திருந்தான்.

பத்து நாட்கள் ஓடிவிட்டன. தனி மண்டபத்தில் சந்திரன் அரசனின் ஓவியத்தைத் தீட்ட ஆரம்பித்திருந்தான். மன்னன் மார்த்தாண்டன் வாளைக் கையிலேந்திக் குதிரைமீது அமர்ந்திருப்பதாகக் கற்பனை செய்திருந்தான். அசுவத்தின் முகத்திலே ஜீவன் ததும்பி நின்றது. அசுவத்தை முடித்துக் கொண்டு அரசனைத் தீட்டுவதாக இருந்தான்.

பதினோராவது நாள் புதிதாக ஒரு தாதிப் பெண் அவனுக்கு உணவு கொண்டு வந்தாள். ஜன்னல் வழியாகக் கொடுக்காமல் உள்ளேயே கொண்டு வந்தாள். முன்னவளைப் போல் பேசாமடந்தையாக இல்லாமல் பேசவும் துணிந்தாள். சந்திரன் வரைந்திருந்த அசுவம் அவளைப் பேச வைத்தது.

''நீங்கள் தீட்டுகிற விதத்தைப் பார்த்தால் இந்தக் குதிரை உயிர்பெற்று ஓடிவிடும் போல் இருக்கிறதே!'' என்றாள் சிரித்துக்கொண்டே.



"நற்சாட்சிக்கு மிக்க நன்றி! என்னைத் தனியே விட்டுச் சென்றால் அதைவிட நன்றி உள்ளவனாக இருப்பேன்" என்றான் சந்திரன், அவளைப் பார்க்காமலேயே.

"இவ்வளவு உயர்தரமாக ஓவியம் தீட்டும் நீங்கள் அரசனிடமிருந்து அன்பளிப்பை எதிர் பார்ப்பதைவிட ஆபத்தையே அதிகம் எதிர் பார்க்கலாம்" என்றாள் அந்த மடந்தை. சந்திரன் திடுக்கிட்டுத் திரும்பினான். ஆனால் அந்தத் தாதிப் பெண்ணோ கதவைச் சாத்திக் கொண்டு புள்ளிமான் போல் வேகமாக வெளியே ஓடி விட்டாள்.

சந்திரனின் மனம் குழம்பியது. அவள் கேள்விப் பட்டதெல்லாம் உண்மையாக இருக்குமோவென்றுகூட எண்ணினான். அதற்கு மேல் அவன் விரல்கள் ஓடவில்லை. அந்தத் தாதிப் பெண்ணிடம் இன்முகம் காட்டிப் பேசி மேலும் விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமென்ற முடிவுக்கு வந்தான்.

மறுநாள் அந்தத் தாதிப் பெண் வந்தபோது அவனாகவே அவளிடம் பேச்சு கொடுத்தான். "இந்தக் குதிரையின் முதுகில் விரித்திருக்கும் அலங்காரத் துணிக்கு வண்ணச் சேர்க்கை நன்றாக அமைந்திருக்கிறதா?" என்றான்.

மல்லிகா என்று தன் பெயரைத் தெரிவித்திருந்த அந்தத் தாதி வியப்புடன் அரைகுறையாகத் தீட்டப்பட்டிருந்த அந்த ஓவியத்தைப் பார்த்தபடி நின்றாள். அவள் முகத்தில் அதிசய பாவத்தைவிடப் பய உணர்ச்சியே அதிகமாக மேவி நின்றதைச் சந்திரன் கவனிக்கத் தவறவில்லை.

"என்ன அப்படி விழிக்கிறாய்?" என்று சந்திரன் கேட்டபோதுதான் அவள் தன் நினைவை அடைந்தாள். இமைகள் படபட வென்று அடிக்க, "நீங்கள் அதற்கும் பச்சை வண்ணமே தீட்டியிருக்கலாம்" என்றாள்.

"பச்சையா? அப்புறம் அந்த ஓவியத்தைப் பார்க்கச் சகிக்காது. பொன்னிறம் தான் ஏற்றது" என்றான்.

"பார்க்கச் சகிக்காமலிருக்க வேண்டுமென் பதுதான் என் அவா!"

"என் மேல் உனக்கு அவ்வளவு துவேஷமா? வெறுப்பா?"

"இல்லை! இரக்கத்தினால் சொல்கிறேன்; அன்பினால் சொல்கிறேன்."

"உன் பேச்சு எனக்குப் புரியவில்லை; கலைஞன் ஒரு நாளும் தோல்வியை நாடிப் போக மாட்டான்."

"உங்களுக்கு இந்த நாட்டு அரசனின் குணம் தெரியாது. நான் செய்வது ராஜத் துரோகம் என்று சும்மா இருந்தால் உங்களுக்குத் துரோகம் செய்தவளாவேன்."

"என் மேல் உனக்கு ஏன் இத்தனை அக்கறை ஏற்பட்டது?"

நாணத்தால் மல்லிகாவின் முகம் சிவந்தது; அந்த மாறுதலின் அடிப்படைக் காரணத்தைப் புரிந்து கொள்ளச் சந்திரன் தவறவில்லை. அவன் இதழ்களிலும் புன்முறுவல் தோன்றி மறைந்தது.

"மல்லிகா! உன் அன்பினால் என் கண்களுக்கும் கடமைக்கும் கலைச் சேவைக்கும் திரை போட முயற்சி செய்யாதே. என் வெற்றி உன் வெற்றி."

மல்லிகா தயங்கினாள். பிறகு மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு "உங்கள் வெற்றி எனக்குத் தோல்வியாக மாறலாம். உங்களைப் போன்ற சில திறமைமிக்க ஓவியர்கள், தங்கள் வெற்றிமாலையைத் தொட்ட பின்பு எங்கோ மறைந்தே போனார்கள். அரசன் அவர்களை நாடு கடத்தி விட்டான் என்று சொல்கிறார்கள். சிலர், அரசன், அவர்களின் விரல்கள் மேலும் சிறந்த ஓவியங்களை வரையாவண்ணம் அவைகளை வெட்டி விரட்டி விட்டார் என்கிறார்கள். ஆனால் முதல் தடவையாக நான் இப்போது தான் ஒரு ஓவியருடன் பேசுகிறேன், பழகுகிறேன், உங்கள் கலைத்திறமை அரசனுக்கு வெறி உண்டாக்கும் என்பதில் அணுவளவும் சந்தேகம் இல்லை. உங்களையும் அவர் எங்கேயாவது நாடு கடத்தலாம். ஆனால் என்னை அப்புறம் உங்களுக்குத் தாதியாக அனுப்ப மாட்டாரே என்றுதான் ஏங்குகிறேன்."

மல்லிகாவின் வார்த்தைகள் நிதானமாக ஒலித்தன. ஆனால் காதல் வேகம் அதில் கலந்திருந்தது.

சந்திரனின் உதடுகள் படபடத்தன. நெற்றி நரம்புகள் புடைத்து நின்றன.

★

அடுத்து வந்த பத்து நாட்களில் இரவும் பகலுமாகச் சந்திரன் தன் ஓவிய நிர்மாணத்தில் ஈடுபட்டிருந்தான். வண்ணத் தூரிகைகள் வைத்திருந்த மரப் பெட்டியின் ரகசிய அறைகளிலிருந்து சில சாதனங்களையெல்லாம் எடுத்து நள்ளிரவில் தாதிப் பெண் வராத வேளையில் உபயோகித்தான். மல்லிகா வரும் நேரத்தில் ஓவியத்தைத் துணித் திரையிட்டு மூடி வைத்து அவளைப் பார்க்க விடாமல்

செய்தான். அவன் கெஞ்சியும் அவன் சிறிதும் இரக்கம் காட்டவில்லை.

அரசன் கொடுத்திருந்த கெடு முடிந்து விட்டது. அன்று மாலை அரசன் மண்டபத்துக்கு வரப்போவதாகத் தாதி அறிவித்துச் சென்றாள். சந்திரன் தான் தீட்டிய ஓவியத்தைப் பெருமிதத்துடன் நிமிர்ந்து பார்த்தான். மன்னன் மார்த்தாண்டன் ஒரு கையில் வாளேந்தி மற்றொரு கையால் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தபடி அமர்ந்திருந்த அந்த ஓவியம் வெகு தத்ரூபமாக இருந்தது. மீண்டும் ஓவியத்தைத் திரையிட்டான்.

வழக்கம்போல் மன்னன் தனிமையாகவே வந்தான். ஓவியர்களைச் சந்தித்துப் பேசும்போது அவன் எப்போதுமே மூன்றாவது மனிதரைத் தவிர்த்து விடுவான் என்று சந்திரன் கேள்விப்பட்டிருந்தான். அரசனைக் கண்டவுடன் அவன் உள்ளம் குமுறியது. வந்தது வரட்டும் என்று அரசனை நேரடியாகச் சில கேள்விகள் கேட்க வேண்டும் என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டான்.

''சந்திரா! ஓவியத்தை ஏன் மூடி வைத்திருக்கிறாய்? உன் வெற்றிமேல் உனக்கே நம்பிக்கை இல்லையோ?'' என்றான் அரசன்.

''மன்னவா! நான் வெற்றியை ஏற்கனவே அடைந்து விட்டேன்.''

''அப்படியானால் ஓவியத்தை மூடி வைக்கக் காரணம்?''

''ஓவியத்தைத் திறப்பதற்கு முன்னால் என் இதயத்தைத் திறந்து கொள்ள முயற்சி செய்கிறேன்.''

''என்ன சொல்கிறாய்?''

''சொல்கிறேன், மன்னவா! எனக்கு முன் சிலகாலமாகத் தங்கள் அன்பையும் அபிமானத்தையும் பெற வந்த சில ஓவியக் கலைஞர்கள் திடீரென்று மறைந்ததற்குக் காரணம் கிடைக்குமா, மன்னவா?''

''அதைப்பற்றி இவ்வுலகம் அறிந்து கொள்ளும் காலம் வரும். ஆனால் அதைப் பற்றிக் கேட்க உனக்கு என்ன தகுதியிருக்கிறது என்று இப்போது உன் ஓவியம் சொல்ல வேண்டும்'' என்றான் மார்த்தாண்டன்.

சந்திரனின் ரத்தம் கொதித்தது. அரசன் ஒரு இரும்பு இதயம் படைத்த கிராதகன் என்ற முடிவுக்கு வந்தான். ஓவியத்தை மூடியிருந்த துணியை 'வெடுக்' என்று இழுத்தான்.

''மன்னவா! ஓவியத்திலுள்ள வாளைப் பார்த்தீர்களா? அதைத் தொட்டுப் பாருங்கள். விரல்களால் அழுத்திப்பாருங்கள். நிஜ வாளைப் போலவே, கைகளுக்கு நிற்கும்படி ஒரு புது வண்ண அமைப்பு வைத்திருக்கிறேன்'' என்றான் சந்திரன். அவன் குரலில் ஏனோ பதட்டம் ஒலித்தது.

ஓவியத்திலிருந்து அகற்றிய விழிகளை மன்னன் சந்திரன் மேல் பதித்தான்.

''சந்திரா! நீ கொங்கு நாட்டைச் சேர்ந்த ஓவியன் குலசேகரன் மகன்தானே?''

சந்திரன் திடுக்கிட்டான். அவன் உடம்பு நடுங்கியது. ஐந்து வருடங்களுக்கு முன் மார்த்தாண்டன் சபைக்கு வந்து திடீரென்று மறைந்த தன் தந்தை குலசேகரனைப் பற்றித் தெரிந்து கொள்ளத்தானே சிங்கத்தின் குகையில் நுழையும் செம்மறியாடு போல் அவன் மார்த்தாண்டனிடம் வந்திருந்தான்!

''ஆம், மன்னவா!...... என் தந்தையின் மறைவுக்குப் பழி தீர்க்க வந்திருக்கிறேன்'' என்றான் உணர்ச்சி பொங்க.

மன்னனுக்குச் சந்திரனின் பதிலில் முன் பகுதிதான் கேட்டது. அப்படியே பாய்ந்து சந்திரனை ஆலிங்கனம் செய்து கொண்டான்.

''சந்திரா! உன் திறமை ஒப்புயர்வற்றது. தந்தையின் புகழைக் காக்க வந்த தனயன் நீ! இனி நீயே என் குரு! நீ சற்று முன் கேட்ட கேள்விக்கு நான் இப்போது பதில் சொல்கிறேன் கேள். திறமைசாலிகளான சில ஓவியர்களைத் தேர்ந்தெடுத்து அதிரகசியமாகக் கடல் சூழ்ந்த தீவு ஒன்றுக்கு அவர்கள் சம்மதத்துடன் அனுப்பி, காலத்தால் அழிக்க முடியாத ஓவிய அற்புதங்களை வரையச் சொன்னேன். ஆயிரம் வருடங்களானாலும் அழியாத அமர சித்திரங்களைச் சிருஷ்டி செய்த அந்தக் கோஷ்டியினர் உன் தந்தையின் தலைமையில் நாளை நாடு திரும்புகிறார்கள். ஒவ்வொருவருக்கும் பதினாயிரம் மோகராக்களும் ஒரு முழு கிராமமும் சன்மானம் அளிக்கப் போகிறேன். உன்னிடம்தான் முதன் முதலில் இந்த இரகசியத்தைச் சொல்கிறேன். என் மகளுக்குக்கூடத் தெரியாது!...

சந்திரன் அலறினான். ''மன்னவா! என் உள்ளத்திலே களங்கம் ஏற்பட்டு விட்டது! அறியாமையாலும் ஆத்திரத்தாலும், உங்கள் கைவிரல்களையே துண்டிக்க நான் சதி செய்தேன்! அதோ அங்கு பளபளப்பது ஓவிய வாள் அல்ல! நிஜ வாளைப் பக்கவாட்டில் பதித்து அதற்கு ஒரு விசை பொருத்தி, குதிரைக் காலடியில் மாட்டினேன். நீங்கள் ஓவியத்தில் வாள் பகுதியைத் தடவிப் பார்க்கும்போது நான் விசையை முடுக்கத் திட்டமிட்டேன். கலையே மூச்சாக வாழும் ஒரு வள்ளலைத் தண்டிக்க நினைத்த நான் ஒரு மாபாவி! களங்கமுள்ளவன்! நான் இனி தூரிகையைத் தொடவும் அருகதையுள்ளவனில்லை! என் கைவிரல்கள் போகட்டும்'' என்று கதறிக் கொண்டே ஓவியத்தை நோக்கிப் பாய்ந்தான்.

மறைவிலிருந்த மல்லிகா அவனைவிட வேகமாக ஓடி வந்து அவன் வழியை மறித்தாள்.

''பாவி! மல்லிகா! என் மனத்தைக் குலைத்ததில் உனக்கும் பங்கு உண்டு! தள்ளிப்போ!'' என்று சீறினான் சந்திரன்.

''அப்பா!...'' என்றாள் மல்லிகா, மன்னனை நோக்கி. சந்திரன் திடுக்கிட்டு நின்றான்.

''ஆம்! அவள் என் மகள்தான்! ஏன் தாதி உடையில் நிற்கிறாள் என்றுதான் புரியவில்லை'' என்றான் மன்னன்.

''அப்பா! நானே உங்களைப் புரிந்து கொள்ளாதபோது அவர் என்ன செய்வார்? அவரை மன்னித்து விடுங்கள். அப்பா! அவர் நல்லவர்'' என்றாள் மல்லிகா. மன்னன் பேசவில்லை. மல்லிகாவின் வலது கரத்தை எடுத்துச் சந்திரன் கரத்தில் வைத்தார்.

''சந்திரா! என்னால் கொடுக்கக் கூடிய அரிய சன்மானம் இது. அதைப் பெற உனக்குப் பூர்ணத்தகுதி உண்டு! அதற்கு நீ வரைந்த ஓவியமே சாட்சி'' என்றார் மன்னன். அவர் முகத்தில் பெருமிதம் நிறைந்தது. மல்லிகாவின் முகத்தில் நாணம் பரவியது. சந்திரன் முகத்தில் திருப்தி நிலவியது.

Printed and Published by R. Ananthanarayanan for the Proprietors Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press, Kilpauk, Madras-10
Managing Editor: T. Sadasivam.

# பிரகாசம்

**—அத்தகைய பரிசுத்தம் அளிப்பது விம் ஒன்றுதான்!**

*சமையல் பாத்திரங்களைத் துலக்குவதற்கு விம் உபயோகித்துப் பாருங்கள் — அழுக்கும் எண்ணெய்ப் பிசுக்கும் மாயமாய் மறைந்து நிகரில்லாப் பளபளப்பு மிளிரக் காண்பீர்கள்! சுகாதார முறையில் தயாரிக்கப் பட்டுள்ள பவுடராதலால் விம், பாத்திரங் களுக்குப் பாதுகாப்பானது. உங்கள் வீட்டுத் தரை, ஸ்நான அறை, பீங்கான் சாமான் கள் எல்லாவற்றையும் ஒளிமயமாக்குவது விம். விம் இருக்கும் வீடே ஒளி மங்காத வீடு!*




**உங்கள் வீட்டுக்கு**

**வேண்டியது விம்**

V. 94-50 TM *பம்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு.*

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon